# உடுமலை நாராயண கவி பாடல்கள்



# உடுமலை நாராயண கவி பாடல்கள்

தொகுப்பாசிரியர்கள் :

**பேராசிரியர் முனைவர் அமுதன்,** எம்.ஏ., பிஎச்.டி.

**புலவர் ப. வீரப்பன்,** எம்.ஏ., எம்.எட்.

**புலவர் க. சுரேந்திரன்,** எம்.ஏ., பி.எட்.

பதிப்பாளர் :

**திருமிகு. கே.சி. பழனிசாமி**

தலைவர், உடுமலை நாராயண கவி அறக்கட்டளை

*வெளியிடுவோர்*

**உடுமலை நாராயண கவி அறக்கட்டளை**
கவிராயர் இல்லம்
பூளவாடி, உடுமலை (வட்டம்)
642 206
✆ 04252 - 49307

விலை : ரூ. 120/-

*அச்சிட்டோர்*

**ருக்மணி ஆப்செட் பிரஸ்**
கோயமுத்தூர் - 641 018.
✆ 216721, 211006

# பொருளடக்கம்



உடுமலை நாராயண கவி

தோற்றம் : 1899 மறைவு : 1981



# முத்தமிழ் அறிஞர்
# கலைஞர்

தந்தை பெரியார், தளபதி அண்ணா
சிந்தனைத் தேனைச் செந்தமிழ் நாட்டில்
எழுத்தால் பேச்சால் இனிதுற விளம்பிப்
பழுத்த அரசியல் பான்மையில் விளங்கி
உடுமலை யார்தம் உயர்வினை உலகுக்கு
எடுத்துக் காட்டவோர் எழில்மணி மண்டபம்
உடுமலை நகரில் ஒளிரச் செய்தே
நெடும்புகழ் நெஞ்சில் நிலைக்க நிறுத்தி
முத்துப் போல இம்முத்தமிழ்க் கவிதைப்
புத்தகம் வெளியிடும் முத்தமிழ் அறிஞ!
மாநிலம் போற்றும் மாண்பமை முதல்வ!
நானிலம் வாழ்ந்திட நலமுடன் வாழி!



## திருமிகு கே.சி. பழனிசாமி அவர்கள்

பொன்வயல் சூழ்ந்த பொருநைக் கரையூர்
தொன்மை மிகுந்த சோழர் பேரூர்
கருவூர் இன்றது கரூரென் றானது
திருமிகு பெருந்தகை பழனி சாமி
இவ்வூர்க் காரர் இனியபண் பாளர்
எவ்வூர் தானும் தம்மூர் என்பவர்
பாடும் பைந்தமிழ்ப் பாவலர் தம்மால்
பாடல் பெற்ற பழனிக் கோயில்
அறங்கா வற்குழு அரும்பணித் தலைவர்
அறக்கொடைச் செல்வர் அருந்தமிழ் ஆர்வலர்
நடுவு நிலைதவழ் நனிநா கரிகர்
உடுமலை நாரா யணகவி ராயர்
அறக்கட் டளையினை அணிசெயும் புரவலர்
உறுபொருள் அளித்தும் உள்ளம் களித்தும்
இந்நூல் வெளிவர ஏற்பன செய்தும்
நன்னூல் இதனை நமக்குத் தந்தவர்
அள்ளக் குறையா அமுதை வழங்கிய
வள்ளல் பெருமகன் வாழிய நீடு!



உடுமலை நாராயண கவி
மணி மண்டபம்
உடுமலை



# ''காலத்தை வென்ற கவிவாணர்''

முனைவர் அமுதன்

ஓர் இருபது ஆண்டுக் காலம் (1950 - 1970) தமிழகத்துத் திரைவானில் ஒரு மின்னல் தொடர்ந்து மின்னிக் கொண்டிருந்தது!

எப்படி மின்னுவது என்று, மின்னல்களுக்கெல்லாம் சொல்லிக்கொடுத்த மின்னல் அது!

அது மின்னத் தொடங்கிய காலந் தொடங்கி, திரைவானில் அப்பொழுது மின்னிக் கொண்டிருந்தவையெல்லாம் மின்மினியாய் வெளிச்சமற்றுப் போயின.

கவிமழை கொட்டிய அம்மின்னலுக்கு ''உடுமலை நாராயண கவி'' என்பது பெயர்.

திரைத் தாரகைகள் பல, அம்மின்னல் தந்த வெளிச்சத்தில் மினுமினுப்பு அடைந்ததும் உண்மை; கண்ட இடமெல்லாம் கவியரசர் என்ற பொருளில், ''கவிராயர், கவிராயர்'' என்று அம் மின்னலைக் கைதொழுது ஏத்தி நின்றதும் உண்மை!

நாடகம் ஈன்றெடுத்த நனிநாகரிகக் குழந்தை 'திரைப்படம்'. அந்தப் புதுமையின் மீது, இந்தப் பழமை மோதி வென்றது! அந்தச் சாதனை இமயமென நின்றது; தமிழர் இதயமெல்லாம் வென்றது!

இவரால் திரையுலகில் சென்றதும், நின்றதும் பல; அவற்றுட் சில: இசைத் தமிழ் நின்றது; தமிழர்க்கு இசையாத கலப்புத் தமிழ் சென்றது;

''ஸ்வாமி'' சென்றார், ''தலைவர்'' நின்றார்.
''ப்ரேமை'' சென்றது; ''காதல்'' நின்றது.
''அநுராகம்'' சென்றது, ''அன்பு'' நின்றது!

அந்தக் கவிமின்னலின் மின்சாரம், கவிச்சாரமாய், கருத்துப் பாரமாய், தமிழர் நெஞ்சங்களில் எல்லாம் இறங்கியது; அந்தக் கருத்துச் சாரலில் நந் தமிழர் மனமெல்லாம் கிறங்கியது; பிடித்திருந்த மடமை இருள் விலகியது; செல்லும் நெறி எதுவெனத் துலங்கியது!

''ஆகும் நெறி எது? ஆகா நெறி எது? அறிந்து கொள்வீர்!'' என நம் மக்களை நோக்கிக் கைகூப்பிக் கசிந்துருகி வேண்டியவர் நம் கவிஞர்பிரான்!

கவிராயர் காலத்தில், ஒரு பகுத்தறிவு இசைப் பாவலன் அவசர அவசியமாய்த் தமிழர்க்குத் தேவைப்பட்டான்.

கடுவெயிலின் சுடுவெக்கை தணிக்கக் கோடைக் காலத்தில், நுங்கு பனைமர உயரத்தில் பயிர் ஆவது போல, மூடத்தனத்தின் முடைநாற்றம் போக்க, ஒரு மணமலர் ''பூவிளைவாடி''யில் பூத்தது; காலம் பூக்க வைத்தது!

கண்மூடிப் பழக்கங்கள் மண்மூடிப் போக, வள்ளலார், ''இயல் தமிழை''க் கையில் எடுத்தார். கவிராயர், ''இசைத்தமிழை''க் கையில் எடுத்தார்!

பெரியார், அண்ணா, கலைவாணர், கலைஞர் எனும் நான்கு வயிரத் தூண்களின்மேல், உடுமலையாரின் ''கவிதை மண்டபம்'' உருவாயிற்று.

இந்நால்வரின் கருத்துக்கள் தந்த அழுத்தத்தால், கவிஞர் பெருமானின் உள்ளம் ''வைரம் அடித்த களம்'' ஆயிற்று.

புதுவை தந்த கவிதைப் புயல், பாவேந்தரின் பாக்கள், கவிஞர்க்கு மேடையிலே வீசும் மெல்லிய பூங்காற்றாய் இதம் அளித்தது.

கவிஞரின் ஒவ்வோர் அடியும், கயமையின் கன்னத்தில் விழுந்த ஒவ்வோர் அடி! அவர் கவிதையின் கருத்து வீச்சு ஒவ்வொன்றும், கயமையின் மார்பில் வீழ்ந்த சாட்டை வீச்சு!!

நாட்டுப் பாடலில் பூட்டிக் கிடக்கும் நாதநயத்தை, ஒவ்வொரு வீட்டுக்குள்ளும் ஒலிக்க வைத்த கொங்கு நாட்டுப் ''பாட்டாளி'' இவர்!

''சும்மா இருந்தால் சோத்துக்கு நஷ்டம்'' — கவிஞரின் இந்தப் பாடலை இசைக்கும் போதெல்லாம் இசைநயம் இதயத்துள் தேன் ஊற்றுகிறது. கேட்கும் போதெல்லாம் கருத்து வளத்தால் உள்ளம் கிளர்ச்சியுறுகிறது!

இந்தப் பாடலில் எது உயர்ந்தது? இசை உயர்ந்ததா? எதுகை உயர்ந்ததா? மோனை உயர்ந்ததா? கருத்து உயர்ந்ததா? — எல்லாம் உயர்ந்தவை! அதனால், கவிஞர் பெருமான் இவையனைத்தின் மேலும் ''சிம்மாதனம்'' இட்டு வீற்றிருக்கிறார்!

அவர் கீதங்கள் — இத்திருநாட்டின் மேல் அவர் கொண்டிருந்த அன்பின் நீளங்கள்! 'தனக்காக விடும் கண்ணீர், தன் உடலைத் தூயதாக்கும்; பிறர்க்காக விடும் கண்ணீர் பேருலகைத் தூயதாக்கும்' என்பார்கள். இதன்படி, உலகைச் சுத்திகரிக்க, உடுமலையார் ஓயாது கண்ணீர் விட்டவர் ஆகிறார்.

தமிழ், தமிழ்நாடு, தமிழர் சமுதாயம் இந்த மூன்றின் முன்னேற்றத்திற்கும் ஓயாது பள்ளுப் பாடி ஆடிய ''முக்கூடற்பள்ளு'' தான் அவர் கவிதைகள்.

1950 முதல் 1972 வரை, அவர் இசைத்த பாடல்களின் இசைத் தமிழ்ப் பிரவாகம் மாட மாளிகைக்குள்ளும் அமுதத் தெறிப்பாய்த் துளித்தது! ஏழ்மைக் குடிலுக்குள்ளும் நுழைந்து, தேனாய் நனைத்தது!!

இந்தத் தமிழ்ச் சமுதாயத்தின் மீது, கவிஞர்க்கு வெளிச்சொல்ல முடியாத ஒரு பற்று, பாசம், காதல் — வெகுநாட்களாய் உள்ளேயே ஊற்றெடுத்துக் கொண்டிருந்திருக்கிறது. வாய்ப்புக் கனிந்தவுடன், அவை இசைத்தமிழ் வடிவில் எழுந்து பாய்ந்திருக்கிறது.

தன் சொந்தத் திறனால், திரையுலகின் கால் நூற்றாண்டுக் காலத்தைச் சுருட்டித் தன் கக்கத்தில் வைத்திருந்தார் கவிஞர் பெருமான்! ஒரு நூற்றாண்டில் பிறப்பெடுத்த கவிஞர்கள் பல நூற்றாண்டுகளை வென்று விடுகிறார்கள் என்பார்கள்! உடுமலையாரும் பல நூற்றாண்டுகளை வென்று விட்டார்!!

இனிப்பில்லாத கற்கண்டு எங்கும் கிடைக்காதது போல, கருத்து வளம் இல்லாத ஒலிச்சேர்க்கை கவிராயரின் பாடல்களில் காணக் கிடைக்காது.

''கவிதை எல்லா மனிதர்களுக்காகவும் படைக்கப்படுகிறது. ஆனால், எல்லா மனிதர்களாலும் புரிந்து கொள்ளப்படுவதில்லை'' என்ற ஏக்கம் கவிஞர்களுக்கு என்றுமே உண்டு.

உடுமலையாரின் கவிதைகள் எல்லா மனிதர்களாலும் புரிந்து கொள்ளப்படுவதற்காகவே உருவெடுத்தவை. அவர் கவிதை புரியவில்லை

என்றால், அறிவு உரிய இடத்தில் இல்லையென்று பொருள் ஆகிப் போகும்! எளிமை, எளிமை, தண்ணீர் போன்ற எளிமை! இதுவே கவிராயருக்கு வாய்த்த தனிப் பெருமை! பெருமை! பெருமை!

இசைமேகங்களைப் படைதிரட்டி, 25 ஆண்டுகளாக, தமிழர் நெஞ்சக் காடுகள் நன்செய் ஆகப் பெருமழை பொழிந்த கவிராயரின் அருமைத் திருமகனார் திரு. இராமகிருஷ்ணன் அவர்கள், கவிராயருடனிருந்த பேறு பெற்ற என் அருமை அன்பர் புலவர் திரு. வீரப்பனார் அவர்களுடன் ஒருநாள் என் இல்லம் புகுந்தார். அவர் கைகளில் ''பைண்ட்'' செய்யப்பட்ட பழைய நோட்டுப் புத்தகங்கள் இருந்தன.

''ஐயா, இவை என் ஐயாவின் சொத்துக்கள். இவற்றைத் தேடி ஆராய்ந்து ஒரு செப்பமான பதிப்பு ஒன்றை உருவாக்குங்கள்'', என்று அன்புமிக வேண்டினார். நிறைபண்பாளரான அவரின் வேண்டுகோள் என் நெஞ்சை வருடியது. ''ஐயா! இது உங்கள் சொத்து மட்டும் அல்ல; தமிழ் உலகின் சொத்தும் ஆகும். அன்பர்கள் உதவியுடன் தொகுத்துத் தருகின்றோம்'' என்றேன். அன்று முதல் அருமை அன்பர்கள் திருவாளர்கள் புலவர் ப. வீரப்பனார், புலவர் சுரேந்திரனார் ஆகியோருடன் நானும்இணைந்து அவ்வேடுகளை ஆய்ந்தோம். அவ்வாறு ஆய்ந்து வருகையில் கவிஞரின் பல புதிய பாடல்கள் கிடைத்தன. 'புதையல் எடுத்த தனம் போல' இதுவரை வெளிவராத கவிஞரின் அருமைமிக்க பாடல்கள் அறுபதுக்கும் மேல் அவ்வேடுகளில் புதைந்து கிடந்தன. அவற்றைக் கண்டபோது, முல்லைப் பாட்டுப் பதிப்பிக்கும்போது, கிடைக்காத பூக்களின் பெயர்களை ஓர் புது ஏட்டில் பார்த்த, தமிழ்த் தாதை உ.வே.சா. அவர்கள் அடைந்த மகிழ்ச்சியினை வேண்டுமென்றால் நாங்கள் அடைந்த மகிழ்ச்சிக்கு ஒப்பிடலாம்.

கண்டெடுத்த புதையல்களுள், கலைஞருக்குக் கவிஞர் எழுதிய அருமையான கவிதை மடலும் ஒன்று.

கலைஞருக்கும் கவிஞருக்கும் இருந்த நெஞ்ச நெருக்கத்தை, உருக்கத்தை அச்சீட்டுக் கவியில் காணலாம்.

திருப்புகழ் இயற்றிய அருணகிரியார், 'சந்தக் கவி வேந்தர்' என அழைக்கப்படுபவர். அவர் 'திண்டிமை' எனும் தோற்கருவியைப் பலவாறு தாளத்திற்கேற்ப இசைக்கச் சொல்லி, அவ்விசையில் மூழ்கித் தோய்ந்த பின்பு, சந்தங்களை அமைத்துக் கொண்டு திருப்புகழ்ப் பாடல்களைப் பாடுவாராம். கவிராயரும், 'தம்பட்டம்' (தப்பு) என்னும் தோற்கருவியை இயக்கும் தொழிலாளர்களோடு சேர்ந்து ஆடியும், பாடியும் சந்தத்தில்

குளித்தபின், பல பாடல்களுக்குச் சந்தம் அமைப்பார் என்னும் அரிய செய்தியை, கவிஞர் திருமகனார் இராமகிருஷ்ணன் அவர்களும், சுப்பிரமணியம் அவர்களும் கூறக் கேட்டோம். அதனால்தான், சந்தச்சுவை கவிராயர் பாடல்களில் பந்தி பந்தியாய் ஊர்வலம் போகின்றன!

கவிதையில், எந்தச் சுவையும் சந்தச் சுவைக்குப் பின்னால், கைகட்டிச் சேவிக்க உரியவை என்பது உடுமலையாரின் கவிதைகளை ஒருமுறை படித்தாலே உருவாகும் கருத்து எனலாம்.

கடை எதுகைகள் இவருக்குக் கனி எதுகைகள்! சொற்களை இசைத் தேனில் முழுக வைத்து, முக்கி முக்கித் தோய்த்து எடுத்து, அவற்றைப் பிழியாமலே தன் பாடல்களில் பொத்தி வைத்து விடுகிறார் கவிஞர் பிரான். இதனால்தான் கவிராயரின் பாடல்கள் காலத்தை வென்று இப்படித் தித்திக்கின்றன!

உடுமலையாரின் பெருமை, ''இந்நாட்டின் இன்றைய இளைஞர்கள் பலர்க்குச் சரியாக உணர்த்தப்படவில்லையெனலாம். திரைக் கவிதை வரலாற்றில், அவர் அமர்ந்திருந்த சிம்மாதனம், தொல்பொருட்காட்சிச் சாலைக்குக் கொண்டு சென்று விடாமல் இருக்க, இப்பதிப்புப் பெரிதும் உதவும் என்று நம்புகின்றோம்.

மோனைகள் முனை முறியாமல், எதுகைகள் இதழ் ஒடியாமல், சந்தங்கள் குதிபோடும் இந்த இனிய கவிதைகளை எதிர்காலத் தலைமுறைக்குச் சுமந்து சென்று அறிவிக்க இப்பதிப்பு மிகவும் உதவும் என்று நாங்கள் நம்பி நிற்கிறோம்.

பாரதியின் புகழ் காலஞ்செல்லாது, காலம் செல்லச் செல்ல மிக்கோங்கிக் கொண்டேயிருப்பது போல, உடுமலையாரின் புகழும் நாளும் நாளும் மேலோங்கி நிற்கும்; அதற்கு இப்பதிப்பு மிகவும் உதவி நிற்கும்

'' மொழித்தவம் இருப்பவர்களுக்குக் கவிதை வாய்க்கிறது.
மொழியை நோக்கி இவர்கள் இருந்த தவம் முற்றுப்
பெற்றபின், மொழி இவர்களிடம் தவமிருக்கத் தொடங்குகிறது —
கவிதைகளுக்காக!

உடுமலையாரும் முன்பு மொழியின் முன் தவமிருந்து, பின்பு மொழி இவரிடம் தவம் இருக்கச் செய்துவிட்ட பேறாளர்!

இசையின் பரவசம்; எதுகையின் கும்மாளம்; கருத்துகளின் ஊர்வலம் — ஓயாது காணவேண்டுமெனில் கவிராயரின் கவிதைகளைக் கற்க வேண்டும்.

கவிராயரின் கவிதைப் பொய்கையில் மூழ்கி முக்குளித்துத் தேடினால், தமிழர் வாழ்வின் பெருமிதம் கிடைக்கும்; சங்கத் தமிழின் சாவி கிடைக்கும்; கண்ணகியின் கற்புப் பேழை கிடைக்கும்! புறநானூற்றுப் புதையலும் கிடைக்கும்!! முயற்சியைப் பொருத்து முத்துக்கள் கிடைக்கும்!!

*கவிராயர், பெரியாரின் எக்காளம்! அண்ணாவின் அணிநடைச் செலவு! கலைஞரின் வீறாப்பு! லேனாவின் மேனாம்பு! கலைவாணரின் பாட்டு வில்! திரைக் கலைஞர் பலர் தோள் ஏந்திச் சுமந்த துய்ய கவிப் பல்லக்கு!*

*அவர்தம், கம்பீரம் குறையாத கவிதை வாழ்வு பற்றி எத்தனை சொன்னாலும் மிச்சமிருக்கும் வீறார்ந்த திறன் அவர் திறன்!*

*நாம் எல்லாம் காலத்தில் நின்றிருக்கிறோம்!*
*உடுமலையார் காலத்தை வென்று நிற்கிறார்!*



# “தன்மானத் தமிழ்க்கவிஞர்”

புலவர் ப. வீரப்பனார், பூவிளைவாடி

எல்லார்க்கும் ஏற்றபடி
இனிதாகப் பாட்டெழுதும்
நல்லதொரு பாவலனார்
நாவரசர் கவிராயர்!

எதுகைநலம் மோனைநயம்
இயைபுவளம் உவமையணி
புதுமையெழில் பொங்கிவரப்
பூங்கவிதை தரும்புலவர்!

வழக்குமொழி வண்ணமொழி
வட்டாரப் பேச்சுமொழி
பழகுமொழி அழகுமொழி
பாப்புனைந்த படைப்பாளி!

சந்திப்பும் சிந்திப்பும்
சந்தத்தில் வந்துவந்தே
சிந்தைகுளிர் விந்தைமிளிர்
சிந்துபள்ளு தந்தவள்ளல்!

இளங்கோவின் இலக்கியத்தில்
இன்புற்றும் இன்புறுத்தும்
களங்கண்டும் வளங்கொண்டும்
கமழ்கவிதை ஈந்தசெம்மல்!

குறட்பாவில் அருட்பாவில்
குவிந்துள்ள கருத்துகளைத்
திறத்தாலே திரைப்பாவால்
திக்கெட்டும் பரப்பியவர்!

பாரதியின் குறிக்கோளைப்
பாவேந்தர் கோட்பாட்டை
பாரதிரக் கூறுதற்குப்
பாட்டரங்கம் கூட்டியவர்!

கடையனுக்கும் கடைத்தேற்றம்
காந்தியண்ணல் கண்டறிந்தார்
மடையனுக்கும் அறிவேற்றம்
வகுத்துரைத்தார் உடுமலையார்!

பெருமைமிகு நம்பெரியார்
பேரறிஞர் கலைவாணர்
அருங்கலைஞர் அன்பழகர்
அனைவருமே இவர்தோழர்!

வெண்தாடி வேந்தரது
வீறுகொண்ட பேரியக்கம்
பண்ணிசையில் ஒளிவீசப்
பாடுபட்ட செயல்வீரர்!

பகுத்தறிவுக் கொள்கைகளைப்
படவுலகப் பயிலகத்தில்
தகுதியுறக் கற்பித்த
தலைசிறந்த பேராசான்!

பாடுபொருள் மக்களுக்குப்
பளிச்சென்று போய்ச்சேர
ஏடெடுத்துக் கவிபுனைந்த
ஈரோட்டுப் படைவீட்டார்!

இசைக்காக மொழிச்சிதைவு
எவர்செய்ய முனைந்தாலும்
இசையாது இடைமறித்து
எச்சரிக்கும் நக்கீரர்!

தென்னாட்டைச் செந்தமிழைத்
திரையிசையில் புதுநெறியில்
பொன்னெழுத்தால் பொறித்திட்ட
பூவிளையூர்ப் பூங்குன்றன்!

ஒருகவிமா மணியிவர்க்கே
உயர்கலைமா மணிவிருது
தருவதனால் வரும்மேன்மை
தந்துள்ள விருதுபெறும்!

ஒப்பில்லாத் தமிழ்வாழ்க!
உடுமலையார் புகழ்வாழ்க!!
அப்பழுக்கே இல்லாமல்
அவர்வளர்த்த திரைவாழ்க!!!

# எங்கள் உரை

  

**திரு. நா. இராம கிருட்டிணன்**
**திரு. நா. முத்துசாமி**
**திரு. நா. சுப்பிரமணியம்** (பொறியாளர்)
(உடுமலையாரின் அன்பு மக்கள்)

செந்தமிழின் இசைப்பாகு; தீந்தமிழின் கற்கண்டு; நாடறிந்த பாமேடை; நம் தமிழர் இசை ஓடை எனத் தமிழர் நெஞ்சங்களால் பாராட்டப்படும் உடுமலை நாராயணகவி எங்கள் அருமைத் தந்தையார் என்று நாங்கள் உங்கட்கு அறிமுகம் செய்து கொள்வதில் பெருமிதம் கொள்கிறோம்.

அவர் 'தான தந்தன தான' என்பது போன்ற இசைக்குறியீடு குறிக்கும் ஒரு வரிக்கோடு போடுவார். இசைத் தமிழ் கூத்தாடிக் கொண்டு ஓடிவரும். கருத்துக்கள் முண்டியடித்துக் கொண்டு வந்து கைகோத்துக் கொள்ளும். சந்தங்கள் 'சரி சரி' என்று வந்து வரிசையில் நிற்கும். தாளங்கள் நிறைந்த சந்தத் தமிழ் பாடல் ஒன்று 'கமகம' என்று பூத்து நிற்கும்.

ஏறத்தாழ முப்பது ஆண்டுகள் திரையுலகைத் தம் கருத்து வளத்தாலும், சந்தக் கனத்தாலும் சந்தனச் சொல்லாலும், கலக்கிவிட்டுச் சென்ற எங்கள் தந்தையாரை நினைக்குந்தோறும் கண்கள் பனிக்கின்றன. நெஞ்சில் ஒரு கர்வமும் அது கலந்த பெருமிதமும் உதிக்கின்றன.

எங்களுக்கு அவர் ஏராளமான செல்வங்களை விட்டுச் செல்லவில்லை; அது பற்றிய ஏக்கமும் எங்களுக்கு இல்லை. கௌரவம் குன்றாமல்

வாழ்வதற்கு ஏற்றதொரு கணிசமான செல்வத்தைத் தந்து விட்டுத்தான் அவர் சென்றிருக்கின்றார். ஆனால் எங்கள் குடும்பத்தினர்க்கு விட்டுச் சென்றுள்ள புகழ்ச் செல்வம் உள்ளதே! அதை என்னென்று சொல்வது! அது எவ்வளவு சிறந்தது! எத்தனை காலங்கட்கு அழியாதது! அது நிலத்தினும் பெரியது; வானிலும் உயர்ந்தது; கடல் நீரினும் விரிந்து நிற்க வல்லது!

நினைத்தால் நெஞ்சம் நெகிழ்கிறது! வாய்விட்டுச் சொல்ல வார்த்தைகள் கிட்டவில்லை! நெஞ்சம் கரைவதால் கண்கள் நீர்க்குளங்கள் ஆகின்றன!

எங்கள் வம்ச விருட்சத்தில் 'உடுமலை நாராயணகவி குடும்பத்தினர்' என்னும் அழியாத முத்திரையை அளித்துவிட்டுப் போயிருக்கின்றார் எங்கள் அருமைத் தந்தையார். தமிழ்த்திரை உள்ளவரை, அதில் இசை உள்ளவரை என்றும் அவர் பதித்த அந்த முத்திரை இருந்து கொண்டே இருக்கும். காலப் புனலால் அது கரையப் போவதில்லை.

மண்ணின்மேல் வான்புகழ் நட்டுவிட்டுச் சாவா உடம்பு எய்தியுள்ள ஒரு மாமேதையின் மடியில் நாங்கள் வளர்ந்தோம்; அவர் மணிக்கரங்களால் உணவூட்டப் பெற்றோம்; தமிழ் சுமந்த அவர் தோள்களால் நாங்கள் சுமக்கப் பெற்றோம், இதைவிட வேறு என்ன பேறு வேண்டும்? இதுபோதும் எங்களுக்கு!

தமிழகம் வியந்து போற்றும் தலைவர்கள் பலரும் எங்கள் தந்தையரின் தோள்களைத் தழுவி அணைத்தவர்கள்! நாங்கள் அவர் தோள்களைத் தழுவி அணைத்தவர்கள்! இதுபோதும் எங்களுக்கு! வேறு என்ன வேண்டும்?

தமிழகத்தின் தலையெழுத்தை மாற்றியமைத்த பகுத்தறிவுப் பகலவன் தந்தை பெரியார் எங்கள் இல்லத்திற்கு வருவார் — அப்பாவைப் பார்க்க!

பேரறிஞர் அண்ணா வருவார் — அப்பாவைப் பார்க்க!

விலை மதிப்பற்ற நகைக்கலை விற்பன்னர் கலைவாணர் வருவார் — அப்பாவைப் பார்க்க!

கன்னல் தமிழ் ஏந்திப் போராட்டக் களங்கள் பல காணும் கலைஞர் வருவார் — அப்பாவைப் பார்க்க!

புரட்சிப் பாப் புயல் பாவேந்தர் வருவார் — அப்பாவை பார்க்க!

திரைக்கலையில் புதுமை படைத்த புரட்சி நடிகர் வருவார் — அப்பாவைப் பார்க்க! — அப் ''பாவை''ப் பார்க்க!

யாரைக் காண — யாருடைய காட்சிக்காகத் தமிழக மக்கள் பலர் தவித்துத் தவம் கிடந்தார்களோ, அந்தத் தலைவர்கள் எல்லாரும் எங்கள் வீட்டுக்கு வந்து காட்சிக்கு எளியவராய் இருந்தார்கள்! எதனால்? எங்களுக்கு வாய்த்த எங்கள் தந்தையார் தயவால்! அவர் பெற்றிருந்த ஆற்றலால்! ஈட்டியிருந்த புகழால்!

இத்தகைய பெருமையும் ஆற்றலும் வாய்ந்த எங்கள் தந்தையார் எங்களுக்கு விட்டுச் சென்ற செல்வங்களில் எல்லாம் தலைசான்ற செல்வம் — அவர் அளித்துவிட்டுச் சென்றுள்ள இசைத்தமிழ்ப் பாக்களே!

அவை எங்கட்கு மட்டுமே விட்டுச் சென்ற செல்வம் அல்ல; தமிழ் கூறும் நல்லுலகம் முழுவதற்குமாக விட்டுச் சென்ற தனிப்பெருஞ் செல்வமது. அந்தக் கவிதைச் செல்வத்தையெல்லாம் ஒருங்கு திரட்டித் தமிழ் மக்களுக்குத் தந்துவிட விரும்பினோம்.

''தமிழ் மக்களே! எங்கள் தந்தை — உங்கள் உடுலை நாராயண கவி தமிழுக்கும் தமிழ் மக்களாகிய உங்களுக்கும் தந்துவிட்டுப் போன இசைத் தமிழ்ச் செல்வங்கள் இவை! இந்தாருங்கள்'' என்று தமிழ் கூறும் நல்லுலகுக்கு அப்படியே எடுத்துக் கொடுத்துவிட விரும்பினோம்!

அதற்காகத் தந்தையாருடன் தொடர்புடைய பலருடன் தொடர்பு கொண்டு பாடல்களைத் திரட்டினோம். அப்படியும் எல்லாப் பாடல்களையும் தந்துவிட இயலவில்லை எங்களால் — இன்னும் சில பாடல்கள் கிட்டவில்லை. எடுத்துக் காட்டாக ஒன்று சொல்லலாம்.

கலைவாணர் அவர்களுக்கு எம் தந்தையார் எழுதித் தந்த 'கிந்தனார் காலட்சேபக் கதைப்பாட்டு' இரண்டு மணி நேர அளவிற்கு வரக்கூடியது — அந்த நெடும் பாடலிலிருந்து ஒரு சிறு பகுதியே 'நல்லதம்பி' திரைப்படத்தில் சேர்க்கப்பட்டுள்ளது. முழுப்பகுதியினையும் கலைவாணர் குடும்பத்தினரிடமிருந்து பெறுவதற்குக் கடிதத் தொடர்பு கொண்டும் பலன் கிட்டவில்லை.

இயன்ற அளவு கிடைத்த பாடல்களையெல்லாம் தொகுத்து வெளியிட தஞ்சை, திருவையாறு அரசர் தமிழ்க்கல்லூரி மாணவராயிருந்த காலத்திலேயே அக்கல்லூரித் தமிழ்ப் பேராசிரியன்மார்களால் இணைப்பேராசிரியரென்று நற்சான்று வழங்கப்பட்ட நன்மாணாக்கரும்,

இந்த நூற்றாண்டில் தமிழ்கூறு நல்லுலகத்துச் சான்றோர்களால் இலக்கிய இலக்கண இருதுறைகளிலும் ஒப்பற்று விளங்கும் ஓர் ஒளிப்பரிதியெனப் பாராட்டப் பெற்றவரும், மரபுக் கவிதையும் புதுக்கவிதையும், மாட்சியுற வரையும் பைந்தமிழ்ப் பாவலரும், சிறுகதை, கட்டுரை, காப்பியம் ஆகியன சிறப்புறச் செய்யும் செம்மொழிக் காவலரும் செந்தமிழ் வித்தகரும், 'கம்பன் கலைமணி'யும் பட்டிமன்றப் பாட்டரங்க நற்றமிழ் நாயகரும், பொள்ளாச்சி ந.க.ம.கல்லூரித் தமிழ்ப் பேராசிரியரும் எம் தந்தை அவர்களது பாடல்களில் மிகுந்த ஈடுபாடு கொண்டவரும், எம்மிடத்து மாறா அன்புடைய பெருந்தகையுமான முனைவர் தமிழ்த்திரு. அமுதன் அவர்களைத் தலைவராகவும், எம் தந்தை அவர்களோடு பல ஆண்டுகள் உடன் இருக்கும் பேறு பெற்றவரும் எமக்கெல்லாம் உற்ற நண்பரும், ஆனைமலை அரசு மேனிலை பள்ளித் தலைமையாசிரியருமான நல்லாசிரியர் புலவர் ப. வீரப்பனார் அவர்களையும், தலைசிறந்த தமிழ்த்தொண்டரும், பட்டிமன்ற நகைச்சுவை நாவலரும் பண்பின் திருவுருவாளருமான தமிழாசான் புலவர் சுரேந்திரன் அவர்களையும் உறுப்பினர்களாகவும் கொண்ட பதிப்புக் குழு ஒன்றினை அமைத்தோம்.

இம்மூன்று புலவர் பெருமக்களும் இப்பதிப்புக் குழுவினர் ஆகி மெய் வருத்தம் பாராது, கருமமே கண்ணாகி இதுவரை வெளிவராத பல பாடல்களையும் அரிதின் முயன்று தொகுத்து அழகிய நூல் ஒன்றினைத் தந்துள்ளார்கள். இப்பெரும் பணிக்காக இம்மூவரும் உழைத்த உழைப்பு அரியது; பெரியது; இவர்கள் மூவரும் எங்கள் குடும்பமும் தமிழ்மக்களும் செலுத்தும் நன்றிக்கு எந்நாளும் உரியவர் ஆகின்றனர். எங்கள் தந்தையாரின் தண்டமிழ்ப் பாடல்களை அட்டியின்றித் தட்டாமல் தட்டச்சுச் செய்து தந்த திருமதி. தமிழ்ச்செல்வி யேசுதாசு அவர்களுக்கும் எங்கள் வாழ்த்தினையும், நன்றியினையும் உளமார உரியனவாக்கி மகிழ்கின்றோம்.

உடுமலை நாராயண கவிராயர் அவர்கள் மணிமண்டபப் புகைப்படத்தை வழங்கி உதவிய பொதுப்பணித்துறைப் பொறியாளர் உயர்திரு. மணியன் அவர்கட்கும் எங்கள் மனமார்ந்த நன்றியினை மகிழ்வுடன் தெரிவித்துக் கொள்கின்றோம்.

இந்த இசைத் தமிழ்ச் செல்வங்களில் சில, முன்பே ''உடுமலை நாராயணகவியின் பாடல்கள்'' என்னும் பெயரில் வெளிவந்துள்ளன.

ஆனால் அவற்றிலெல்லாம் காணக் கிடைக்காத புதையல் போன்ற எங்கள் தந்தையாரின் அருந்தமிழ்ப் பாக்கள் பல இத்தொகுப்பில் இடம் பெற்றுள்ளன என்பதைத் தமிழ்மக்களின் திருமுன்பு வைக்கிறோம்.

இத்தகைய அரிய தொகுப்பினை வெளியிட 'ஆகும் பெருஞ் செலவை ஏற்க இன்று யார் உள்ளார்?' என்ற எண்ணம் வந்தபோது 'நான் உள்ளேன்' என்று முன்வந்தார் — ஈத்துவக்கும் இன்பத்தைக் கண்டறிந்த கரூர் வள்ளல் திரு. கே.சி. பழனிசாமி அவர்கள்.

'யார் ஏந்துவார் இச்செலவை' என்று நாங்கள் ஏங்கித் தவித்திருக்கையில் 'நான் ஏந்துவேன்' என்று உவந்து வந்து தோள் ஏற்ற அப்பெருமகனார் தமிழ்ப்பற்றையும், கவிப்பற்றையும் என்னென்று போற்றுவது! எச்சொல்லால் ஏத்துவது!

அப்பெருமகனார் எல்லா நலமும் எய்தி வாழ இதயம் நெகிழ இனிதாக வாழ்த்துகின்றோம்.

எங்கள் தந்தையாரின் கவித்துவத்துக்கு நெஞ்சம் பறிகொடுத்தோர் மிகப் பலர் — அவர் சந்த வெள்ளத்தில் நீந்தித் திளைத்தவர்கள் மிகப் பலர். அவர் புரட்சி எண்ணங்களில் உள்ளம் பூத்துப் போனவர்கள் மிகப் பலர் — அவர்களுள் கலைவாணர் ஒப்பற்றவர்.

கலைவாணரும், கவிராயரும் இணைபிரியா நட்புப் பூண்டவர்கள் — இந்த நூற்றாண்டின் ''கபில பரணர்''கள் இருவரும்.

''கவிராயரால் கலைவாணர்க்குப் பெரும்புகழா? கலைவாணரால் கவிராயர்க்குப் பெரும்புகழா?'' என்று மேடையிடாத பட்டி மன்றங்கள் அன்று தமிழ் மக்களின் நெஞ்ச மேடையில் நிகழ்ந்து வந்தன என்பது உண்மை.

கலைவாணர் மறைவுக்குப் பின் அவர் பிடித்திருந்த இடத்தைக் கவிராயர் உள்ளத்தில், முத்தமிழ் அறிஞர் கலைஞர் அவர்கள் சிக்கெனப் பிடித்தார்கள்.

'கலைமாமணி' என்னும் பெருமைக்குரிய பட்டத்தினைத் தமிழ் மக்களின் சார்பாகத் தமிழக அரசால், முத்தமிழ் அறிஞர் கலைஞர் அவர்கள் எங்கள் தந்தையார்க்கு நல்கினார்கள்.

உடுமலையில் எங்கள் தந்தையார்க்கு மணிமண்டபம் எழுப்பி மாயாப் புகழுக்கு வழி வகுப்பவரும் முதலமைச்சர் கலைஞரே ஆவார்கள்.

அப்பெருமகனாரின் தமிழாய்ந்த நெஞ்சுக்கு எங்கள் குடும்பத்தினரின் நன்றி மலர்கள் என்றும் உரியன.

கவிஞர்களின் புகழ்வெள்ளத்தைக் காலவெள்ளம் அடித்துச் சென்று விடாதபடி 'மணிமண்டபம்' அமைத்த கலைஞர் மாண்பினை எவ்வளவு போற்றினும் தகும்! தகும்!

உடுமலைப் பெருவணிகரும் செல்வருமான அமரர் குருநாதசாமி செட்டியார் அவர்களது திருமகனார் அமரர் இராதாகிருட்டிணன் அவர்கள் பொறியாளராகப் பணியாற்றியவர். பின்னாளில் கார்த்திகை மன்றத்தைக் காத்தவர். தமிழ்க் கவிஞர்களையும், தமிழறிஞர்களையும் அழைத்துப் பெருமைப்படுத்தியவர் இப்பெருமகனார். எம் தந்தையின் பாடல்கள் பலவற்றைத்தேடித் தந்து உதவியவருமாவார். தந்தையார் உடுமலை செல்லும்போதெல்லாம் இவர்களுக்கிடையே சந்திப்பும் உரையாடலும் நிகழும்.

பூவிளைவாடி, அப்பாய் செட்டியார் என அழைக்கப்பட்ட அமரர் திருவேங்கடஞ்செட்டியார், அனந்தராம ஆச்சார், சின்னமுத்து நாயுடு ஆகியோர் எம்தந்தை அவர்களின் உழுவல் அன்பர்களில் குறிப்பிடத் தக்கோராவார்.

இந்நூல் உருவாகப் பொருளால் உதவிப் பயன்மரம் உள்ளூர்ப் பழுத்ததுபோல் தம் செல்வத்தைப் பயன்படுத்திய கரூர் வள்ளல் திரு. கே.சி. பழனிசாமி அவர்கட்கும், இந்நூல் உருவாக அறிவாலும், உழைப்பாலும் உதவியுள்ள செந்தமிழ் வித்தகர், கம்பன் கலைமணி, முனைவர் அமுதன் அவர்கட்கும், அவர் தலைமையில் இயங்கிய பதிப்புக் குழுவினர்க்கும் மீண்டும் ஒருமுறை நெஞ்சு நிறைந்த நன்றி மலர்களைப் படைக்கின்றோம். அவர்களுக்குச் செலுத்த நன்றியைத் தவிர, உயர்ந்தது ஒன்றும் எங்களுக்குக் கிட்டவில்லை!

எங்கள் தந்தையார் தந்த இந்த அருந்தமிழ்ச் செல்வத்தைத் தமிழ்கூறும் நல்லுலகுக்குப் பணிவோடும், பரிவோடும் படைப்பதில் பெருமகிழ்வும் பெருநிறைவும் அடைகின்றோம்.

''தமிழுக்குத் தொண்டு செய்வோர் சாவதில்லை''

# உடுமலை நாராயண கவி அவர்களின் வரலாற்றுச் சுருக்கம்

கொங்குநாட்டின் கோயமுத்தூர் மாவட்டத்தில் உடுமலைப்பேட்டை வட்டத்தில் உள்ள பூவிளைவாடி ஆகிய பூளைவாடி என்னும் சிற்றூர், பேரூர்கள் எல்லாம் வியக்கத்தக்க ஒரு பெருமை பெற்றுக் கொண்டது.

அங்குதான் முத்தம்மாள் — கிருஷ்ணசாமி செட்டியார் தம்பதிகட்கு 1899-ஆம் ஆண்டில் உடுமலை நாராயண கவிராயர் என்று தமிழ் உலகம் அன்பு நிறைய அழைக்கின்ற நம் கவிவாணர் பிறந்தார். கவிஞருக்கு அவர் பெற்றோர் இட்ட இயற்பெயர் நாராயணசாமி என்பதாகும்.

24மனைத் தெலுங்கு செட்டியார் இனத்தில் பிறந்த கவிஞர், இளம் வயதிலேயே தம் தாய் தந்தையரை இழந்தார்.

''கொடிது கொடிது இளமையில் வறுமை'' என்பது கவிஞர் வாழ்வில் முழு உண்மை ஆயிற்று. இளமையில் தந்தையை இழந்தோர் எத்தனை துன்பங்களை அடைய நேருமோ அத்தனை துன்பங்களையும் நாராயணசாமி அடைந்தார். தமையனார் தனுஷ்கோடி ஆதரவில்தான் வாழ நேர்ந்தது.

சுற்றுப்புறக் கிராமங்களுக்கெல்லாம் தீப்பெட்டிகளைச் சுமந்து சென்று விற்றார் நாராயணசாமி. இருபத்தைந்து பைசா வருமானம் ஒரு நாளைக்குக் கிடைக்கும். பள்ளிப் படிப்பு நான்காம் வகுப்போடு விடைபெற்றுக் கொண்டது. பள்ளி விடைபெற்றாலும் கலைத்தேவி அவர் உள்ளத்திலிருந்து விடைபெறவில்லை.

கிராமியக் கலைகளான புரவியாட்டம், சிக்குமேளம், தம்பட்டம், உடுக்கடிப்பாட்டு, ஒயில்கும்மி முதலிய இம்மண்ணின் கலைகளில் மிகுந்த ஆர்வங்கொண்டு பங்கெடுத்துக் கொள்வார் இளைஞர் நாராயணசாமி.

தாம்பிறந்த மண்ணாகிய பூளைவாடியில் நிகழும் மாரியம்மன் திருவிழாவில் ஆண்டுதோறும் 'இராம நாடகம்' நடக்கும். இலக்குவன் வேடம் இவருக்கே! இவ்வாறு இளமைப் பருவத்தில் உள்ளூர்க் கலைகளில் தோய்ந்து பெற்ற ஈடுபாடே, திரைக்கலைக் கோட்டையின் மேல் யார்க்கும் எட்டா உயரத்தில் இவர் கொடி நாட்ட வழியமைத்துக் கொடுத்தது எனலாம்.

அக்காலத்தே நாடகத்துறையில் புகழ்பெற்றுச் சிறந்தவர், கொடிகட்டிப் பறந்தவர் மதுரை தவத்திரு சங்கரதாஸ் சுவாமிகள். அவருக்கு நெருங்கிய நண்பராய்த் திகழ்ந்தவர் உடுமலைச் சரபம் முத்துசாமிக் கவிராயர். இக்கவிராயர்தான் அருணாசலக் கவிராயரின் ஒப்பற்ற 'இராம நாடக'த்தை மேடை நாடகம் ஆக்கித் தந்தவர். முத்துசாமிக் கவிராயர் உடுமலை வட்டாரம் முழுவதும் இசைகொட்டி வாழ்ந்தவர். அவருடைய மாணவர் சந்தான கிருஷ்ண நாயுடு நடத்தி வந்த ஆரிய கான சபா எனும் நாடக மன்றத்துக்கு ஆசிரியராகவும் இருந்தார்.

அப்பெருமகனார் ஒருமுறை பூளைவாடித் திருவிழாவில் நாராயணசாமி பங்கு பெற்ற நாடகக் காட்சிகளைத் தம் கண்ணாரக் கண்டு மகிழ்ந்தார். கவிவாணரின் கலைத் திறத்தையும், கவித்திறத்தையும் ஒருசேரக் கண்டுகளித்த அவர் 'என்னுடன் வந்துவிடு' என்று தம்முடன் அழைத்துச் சென்றார்.

பன்னிரண்டாம் வயது முதல் இருபத்தைந்தாம் வயது வரை, முத்துசாமிக் கவிராயர் செல்லுமிடம் எல்லாம் உடன்சென்று நாடகம் நடித்தும், எழுதியும் பாடியும் 'அங்கங்கே கலைகள் தேரும் அறிவனாய்' இயங்கி, அக்கலை நுட்பங்கள் அனைத்தையும் தம் இதயத்தில் தேக்கிக்கொண்டு தம் ஊர் திரும்பினார் கவிஞர் நாராயணசாமி!

இருபத்தைந்தாம் வயதில் ஊர்திரும்பிய கவிஞர் கதர்க்கடை ஒன்றை அன்றிருந்த தேசிய எழுச்சியின் விளைவாகத் தொடங்கினார். அக்காலத்தே கதர்ப்பாட்டுப் பாடி ஊர் ஊராகச் சென்று கதர் விற்றார்.

அப்போதுதான் பேச்சியம்மாள் என்னும் குணவதியை மனையாட்டியாக ஏற்றார். நான்கு ஆண் மக்களையும் பெற்றார்.

கவிராயர் செய்த பருத்தி வாணிபத்தில் பெருநட்டம் ஏற்பட்டது. தாங்கமுடியவில்லை கடன் தொல்லை! நூறு ரூபாயைக் கையில் வைத்துக் கொண்டு பிறந்த ஊரைவிட்டுப் புறப்பட்டார்.

புறப்படும்போது ஒரு சூளுரை செய்தார். 'இந்தக் கடன்களை எல்லாம் திருப்பிக் கொடுக்கும் வரை இந்த ஊர் மண்ணை மிதிக்க மாட்டேன்' என்று அவர் சபதமிட்டார். அவர் உள்ளம் எத்தகைய நேர்மையில் ஊறிய திருவுள்ளம் என்பதை உலகுக்கு உணர்த்தப்போதுமான சான்றாகும் இந்நிகழ்ச்சி.

ஊரைவிட்டுத் தன்மானம் ஒன்றையே துணைக்கழைத்துக் கொண்டு புறப்பட்ட கவிஞர் மதுரை தவத்திரு சங்கரதாஸ் சுவாமிகளைச் சென்றடைந்தார். அவரிடம் முறையாக யாப்பிலக்கணம் முழுவதும் ஐயந்திரிபறக் கற்றுணர்ந்தார்.

நாடக மன்றங்கள் நிறைந்தது மதுரை. இவருடைய ஆற்றலை நன்குணர்ந்ததனால் இருகரம் நீட்டி இத்தமிழ் மகனைத் தமிழ் மதுரை இணைத்துக் கொண்டது.

அப்போது கவிஞர் பல நாடகங்களுக்கு உரையாடல்களும், பாடல்களும் எழுதிக் குவித்தார். அதேசமயம் தேசத்தில் எரிந்த தேசியக் கனல், கவிஞரையும் பற்றிக் கொண்டது. நாட்டில் சுதந்திர வேள்வித் தீ கொழுந்து விட்டு எரியத் தொடங்கியிருந்தது. தன் பங்காக ஏராளமான தேசிய உணர்வுப் பாடல்களை எழுதி அன்றைய மேடைகள் தோறும் முழங்க வைத்தார் கவிஞர்.

ஒருமுறை மதுரை நாடக சங்கத்தார் இவர் கலைத்திறத்தைப் பாராட்டி வழங்கிய ஆயிரம் ரூபாய்க்கும் புத்தகங்களாக வாங்கி வந்துவிட்டார். ஊரில் உள்ள கடன் தொகைகளின் நினைவு அப்போது வரவில்லை! மீண்டும் பொருள் ஈட்டினார். ஈட்டிய பணத்தை எடுத்துக் கொண்டு மதுரையிலிருந்து ஊர் திரும்பினார்.

அன்று உரைத்த சூளுரை நினைவுக்கு வரவே ஊருக்கு வெளியே இருந்து கொண்டு, கடன் கொடுத்தவர்கள் அனைவரையும் அழைத்து வரச் செய்தார். அவரவர்க்குரிய தொகைகளைச் செலுத்திய பிறகே, தான் பிறந்த ஊர்மண்ணை மிதித்தார் கவிவாணர்.

கவிராயர் வாழ்வில் நிகழ்ந்த இந்த அரிய நிகழ்ச்சியொன்றே அவர் எத்தகைய நேர்மை நெஞ்சம் சுமந்தவர் — எத்தகைய மான உணர்வும் சத்தியத்தேக்கமும் கொண்ட மாவீரரர் என்பதை உலகுக்கு உணர்த்தப் போதுமானதாகும்.

கவிவாணர் மதுரையில் வாழ்ந்தபோது அங்கு முகாம் இட்டிருந்த டி.கே.எஸ். நாடகக் குழுவினரோடு ஏற்பட்ட தொடர்பு, கலைவாணரோடு நெருங்கிய பழக்கம் உண்டாக்கித் தந்தது.

கலைவாணர் கவிவாணரின் அளப்பரிய பேராற்றலை, அவரோடு அளவளாவிய போதெல்லாம் உணர்ந்தார். பிரிக்க ஒண்ணாத நட்பாய் இருவர் கலைநெஞ்சங்களும் இணைந்தன.

கிராமபோன் கம்பெனிக்குப் பாட்டெழுதித் தர வருமாறு இயக்குநர் ஏ. நாராயணன் சென்னைக்கு அழைத்தார். அப்படியே திரைப்படப்பாடல் உலகிலும் கவிராயர் நுழை ந்தார். முதன்முதலாகக் கவிதை எழுதிய திரைப்படம் 'சந்திர மோகனா அல்லது சமூகத் தொண்டு'!

கலைவாணர் தொடர்பால் பெரியார், அண்ணா, கலைஞர், பாவேந்தர் முதலிய திராவிடர் இயக்கத்தின் மாபெரும் தலைவர்கள் நட்பனைத்தும் கவிராயர்க்குக் கிட்டிற்று. அதனால் திராவிடர் இயக்கப் பற்றும் பகுத்தறிவுப் பார்வையும் எதையும் அப்படியே ஏற்காது, ஏன்? எதற்கு? எப்படி? என்ற வினாக்கள் எழுப்பி, ஆராயும் நுண்நோக்கும் வந்து வாய்த்தன.

இச்சிறப்புக்களே, கவிராயரின் பாடல்கள் மக்கள் மனங்களை ஈர்த்து, அவர்கள் உள்ளங்களில் தனியிடத்தைப் பெறப் பெரிதும் உதவின. ''கலைவாணரும் கவிராயரும் இணைந்து தமிழகத்தில் ஒரு கருத்துப் புரட்சியையே உருவாக்கினார்கள்'' என்பது முத்தமிழ் அறிஞர் கலைஞர் அவர்களின் உன்னதக் கருத்துரை.

செந்தமிழர் நெஞ்சமெல்லாம் திறைகொண்ட கவிராயருக்குப் பெரியார் பெருந்தொண்டர்! 'கலைமாமணி' என்னும் ஒப்பரிய பட்டங்கள் எல்லாம் வீடு தேடி வந்தடைந்தன.

தமிழ் உள்ளளவும் அதில் இசை உள்ளளவும் சாகாவரம் பெற்ற பாடல்களை எழுதிக் குவித்த உடுமலை நாராயண கவிராயர் அவர்கள் 23.05.1981 அன்று இவ்வுலக வாழ்வை நீத்தார்கள்.

'என்றும் உள தென்றமிழ் இயம்பி இசைகொண்ட நம் கவிஞர் பெருமான் தமிழர் நெஞ்சில் இன்றும் வாழ்கிறார்', என்றும் வாழ்வார்.

# கலைஞரின் ஆட்சி!

காவியம் ஆகிய
　　கவிப் பொருள் மாட்சி
கண் வழி காட்டும்
　　சித்திரக் காட்சி
ஓவிய ஞான
　　நூல் முறை ஆராய்ச்சி
ஓங்கிடவே கலைஞர்
　　உலகினில் செய்வார் ஆட்சி!

— உடுமலை நாராயண கவி

## பாட்டை என்ன சொல்லுவேன்?

தமிழ் - பாடல் ஆடல்

**பல்லவி**

பாட்டை யென்ன சொல்லுவேன் — பாங்கி
பாவலர் ஞான ஓவியமான (தமிழ்ப்)

**அநுபல்லவி**

பாட்டினிலும் பொருள் தோற்றத்திலும் இன்னிசைக்
கூட்டினிலும் இன்பம் ஊட்டிடும் ஆனந்தப் (பா)

ஆட்டம் ஆனந்தம் தரும் — சதுர் (ஆ)
அழகான மயில் போலும் ஒயிலாக ஆடும்சதுர் (ஆ)

பாட்டுக் கிசைந்த ராகதாளம் கூட்டி — தமிழ்ப் (பா)
பார்வையுடன் சுரங்கள் கால்களாட்டி,
தீட்டும் கவிப்பொருள் தெரியக் காட்டிப் (புலவர்)
சிந்தை மகிழ இந்த தேகாரோக்கியம் பெறும் (ஆ)

— *ராஜகுமாரி*

## தமிழாலே தாலாட்டு!

கண்டவர் கண்ணுப்படும் செல்லாத்தா! — ஒரு
கருப்புப் பொட்டே வச்சிவிடச் சொல்லாத்தா!
தண்டை சிலம்பெடுத்துப் போடாத்தா! — நல்ல
தமிழாலே தாலாட்டொண்ணு பாடாத்தா!

தேடாத திரவியமே ஆரிராரோ!
சிங்காரப் பைங்கிளியே ஆரிராரோ!
வாடாத மாமலரே ஆரிராரோ! — மனம்
மகிழவைக்க வந்த கண்ணே ஆரிராரோ!

## தமிழ் அன்னையின் திருப் 'புகழ்'!

தன தனந் தான
தன தனந் தான
தன தனந் தான — தன தான

இயல்அது மாகி
இசையது மாகி
இவையொடு நாட கமுமாகி

இளமைகுன் றாத
எழிலொடுந் தோணும்
இனிமையென் றோதும் வடிவாகி

குயிலினங் கூவுங்
குடகமுஞ் சேரர்
குமரியுஞ் சீதக் குணவாரி

குலவுபொன் தேவி
பெயர்வருஞ் சாரல்
குறியிடும் பூமி இடை மேவும்

செயல் செயும் ஆதி
அரசியும் ஆகி
தெளிவுறும் ஞான அறிவாகி

செகணசெஞ் சேகு
தனதனந் தான
திருவெனுந் தாள ஒலியோடு

நயமிகும் பாடல்
புலவர்தம் நாவில்
நடமிடுந் தோகை மயிலாகி

நவிலவும் ஆய
கலைகளும் ஆகி
நனிபெறுந் தூய தமிழ் மாதே!

— *கோவை முத்தமிழ் மாநாடு*

## கன்னித் தமிழ்ச் சாலை ஓரம்!

கன்னித் தமிழ்ச் சாலையோரம் — சோலையிலே
கவிதைக் கனிகள் உண்ணும் பறவைகளே!
தென்னவர் மூவேந்தராம் — தமிழ் வளர்த்த
சேர சோழ பாண்டியரைப் பாடுங்களே! (கன்னி)

மேருமலை மீதினிலே கொடி நாட்டினான் — சேரன்
வீரங் காட்டிக் கனகவிசயர் தலை வாட்டினான்
பாறாங் கல்லை உடைத்தெடுத்தான்; பகைவனைச்
சுமக்க வைத்தான்;
பத்தினிப் பெண் சிலை சமைத்தான் கேளுங்களே! — அந்தப்
பாடல் பெற்ற தேவி தன்னைப் பாடுங்களே! (கன்னி)

சீறிவந்த புலியதனை முறத்தினாலே — அடித்துச்
சிங்கார மறத்தி ஒருத்தி துரத்தினாளே! — இதை
ஊரறிய உலகறிய உங்க ளாலே
உண்மையான பெண்மை வாழப் பாடுங்களே! (கன்னி)

— *சொர்க்கவாசல்*

## தமிழ் நாட்டின் பெருமை - ஒன்றல்ல! இரண்டல்ல!

ஒன்றல்ல இரண்டல்ல தம்பி — சொல்ல
ஒப்புமை இல்லாத அற்புதம் தமிழ்நாட்டில்! (ஒன்)
தென்றல் தரும்இனிய தேன்மண முங்கமழும்
செங்கனியும் பொன்கதிரும் தந்துதவும் நன்செய்வளம் (ஒன்)

பகைவென்ற திறம்பாடும் பரணிவகை — செழும்
பரிபாடல் கலம்பகங்கள் எட்டுத்தொகை — வான்
புகழ்கொண்ட குறளோடு அகம்புறமும் — செம்
பொருள்கண்ட தமிழ்ச்சங்க இலக்கியப் பெருஞ்செல்வம் (ஒன்)

முல்லைக்குத் தேர்கொடுத்தான் வேள்பாரி — வான்
முகிலினும் புகழ்படைத்த உபகாரி
சொல்லுக்குத் தலைகொடுத்தான் அருள்மீறி — கவிச்
சொல்லுக்குத் தலைகொடுத்தான் அருள்மீறி — இந்த
வள்ளலாம் குமணன்போல் வாழ்ந்தவர் வரலாறு (ஒன்)

— *தாய்மகளுக்குக் கட்டிய தாலி*

## வாழிய தமிழ் மாநிலம்

வாழிய மாநிலம் வாழியவே — தமிழ்
மாண்பெழில் நூன்முறை வாழியவே! (வாழி)
வளமது நீள்மக்க ளாட்சியுமே
மதி வாணர்கள் மாட்சியுமே — அலை
வாரிதி போல் உயர் வான்சுடர் போல்
நீடூழி காலம் வாழியவே! (வாழி)

— *சொர்க்கவாசல்*

## வண்ணத் தமிழ் சொன்ன கிளி!

வண்ணத் தமிழ்ச் சொர்ணக் கிளி
வாய் திறந்தாள்!
வள்ளுவன் சொல் தெள்ளமுதை
மெல்ல மொழிந்தாள்! (வண்ண)

கன்னலொடு பாகு மலர்க்
கள்ளை வெறுத்தேன் — அவள்
கனிரசத் தேனை யுண்டு
ஞானம் படைத்தேன் — இன்ப (வண்ண)

மன்னும் செவிக்குண வில்லாதபோது சிறிது
வயிற்றுக்கும் ஈயப் படும் என வோதும்
பொன்னெழுத் தேடுதனைப் புவிமீது கொண்ட
கன்னியெழில் மாறாத கலைமாது — எங்கள் (வண்ண)

குழலினிது யாழினிது என்பர்தம் மக்கள்
மழலைச்சொல் கேளாதவர் என்றே
அமிழ்தினும் இனியதொரு புகழ்சால் பொன்மொழியை
வழங்கி வற்றாத வளம்பெற்றாள் — எங்கள் (வண்ண)

— ***காவேரியின் கணவன்***

## எங்கள் சங்கத் தமிழ் நாடு

எங்கள் தந்தை தாயின்நாடு
சங்கத் தமிழ்த் திருநாடே (எங்கள்)

சங்கத்தருந் தரளம் பவளம்
தங்கம்விளை நாடு
கங்கைக்கிணை ஆமெனுங்கா
விரிவளஞ்செய் நாடு (எங்கள்)

போர்வேந்தர்கள் போற்றும் புனித
ஏர்வேந்தர்கள் நாடு
கார்வேந்தன் ஐந்தருவும் போலக்
கருணையாளர் நாடு (எங்கள்)

ஆடும்புலி மானுமே நீர்
ஆடும்துறை நாடு
ஈடில்விழுச் செல்வம் கல்வி
ஏற்றம் வாய்ந்த நாடு (எங்கள்)

வையம்பெறும் மாந்தர் யார்க்கும்
வாழும்நெறி சாற்றும்
பொய்யாமொழி தந்த தெய்வப்
புலவன் வந்த நாடு (எங்கள்)

குடகும்குண கடலுங் குமரி
வடவேங் கடமருங்கில்
இடமாய்எழில் பலவும் நீடும்
இன்பம் வாய்ந்த நாடு (எங்கள்)

## காலத்தினால் பழையாள்!
## கோலத்தினால் இளையாள்!

எங்கள் தமிழ்மொழிகற் கண்டுங் கனியுமென்ன
இன்பம் தருவதென்று சொல் சொல் சொல்கிளியே!
எங்கும் புகழ்பெறுமுச் சங்கம் தவழவரும்
பொங்கும் கடலிதென்று சொல் சொல் சொல்கிளியே! (எங்கள்)

குள்ளன் அகத்தியமுனி வள்ளல் இலக்கணமாம்
நல்லணி யைப்புனைந்த நங்கை என்பார்
உள்ளம் எனும்விழியில் கொள்ளும் அஞ்சனம்என்றே
எல்லவர்க் கும்எடுத்துச் சொல் சொல் சொல்கிளியே! (எங்கள்)

மேதினிக் கும்பொதுவில் நீதிவ குத்தகுறள்
வேதம்ப டைத்ததென்பர் மேலோர் — நூலால்
கோத கன்றபுலவர் நாவில் நடனமிடும்
நாத வடிவமென்று சொல் சொல் சொல்கிளியே! (எங்கள்)

காலத்தி னால்பழமை கோலத்தினால் இளமை
சாலப் பொருந்தும்தமிழ்த் தாயென் றோதாய்
கூழுக் குப்பாடியதோர் ஏழைக்கிழவி பன்னாள்
வாழக் கனிகொடுத்த செஞ்சொல் சொல்கிளியே! (எங்கள்)

பாச்சி வெண்சோச்சியென்று பாசங்கலந்த அன்பால்
ஆச்சி மொழிந்ததென்று சொல்லாய் பூவாய்!
வாச்ச மனைவிமக்கள் வாஞ்சையுடன் செவியில்
பாச்சும் அமுதமென்று சொல் சொல் சொல்கிளியே! (எங்கள்)

காவியக் கம்பன்இளங் கோவைப் புகழ்வடிவில்
பாவில் காட்டுகின்ற சீரார் செல்வி
காவலர் மூவர்களும் கண்போல் வளர்த்ததமிழ்
நாவினில் வாழ்கவென்று சொல் சொல் சொல்கிளியே! (எங்கள்)

சொல்லப் புரிந்துகிள்ளைப் புள்ளும் உடன்தொடர்ந்து
சொல்லும் மொழியிதென்று சொல் சொல் சொல்கிளியே
தெள்ளித் தெளிந்தமலர்க் கள்ளும் கரும்பின் — ரச
வெள்ளம் நிகர்த்ததென்று சொல் சொல் சொல்கிளியே! (எங்கள்)

## தமிழ்த் தாயை வணங்குவோம்!

தொல்லெ ழுத்தொடு சொற்பொருள் யாப்பணி
நல்லி லக்கணச் சீர்திகழ் நாற்கவி
வல்லு நர்திரு வாக்கில் நடஞ்செயுங்
கல்வி யாந்தமிழ்க் கன்னியைப் போற்றுவாம்

பாவி னங்கள் பராவிய கற்பனைக்
காவி யங்கள்பு ராணங்கள் காதைகள்
ஓய்வி லாமலொ லித்திடும் முத்தமிழ்ப்
பூவை தன்னெழில் பூங்கழல் பற்றுவாம்

பூத லம்பெறு மாந்தர் புலன்வழிக்
காத லுற்றுக் கலந்துற வாடிட
ஓதும் பாங்கில் உதித்த மொழிக்கெலாம்
ஆதி யாந்தமிழ் அன்னையைப் போற்றுவாம்.

முக்கு லத்தின் முடியுடை மன்னர்கள்
மக்கள் நன்மதி வாழ்க்கை வளம்பெற
அக்க றையுடன் அன்பில் வளர்த்த நற்
சக்க ரைத்தமிழ்த் தாயை வணங்குவாம்.

## நல்லவை யாவும் நாடிடும் நாடு!

கலை முதலாகத் தொழில்முறை யாவும்
காத்து வளர்ப்பது தமிழ்நாடு
முதல் முதலாக நல்லவை யாவும்
முயன்று முடிப்பதும் தமிழ்நாடு. (கலை)

பாட்டால் உணர்ச்சி யூட்டும் கவி
பாரதி சேர்தமிழ் நாடு!
நாட்டு மக்கள் முன்னேற்றந் தன்னை
நாடியே கவிதை பாடிவைத்த தமிழ் (கலை)

உலகம் வியக்கச் சுதேசிக் கப்பல்
ஓட்டியதும் தமிழ் நாடு
திலக மெனப்புகழ் ஓங்கும்
சிதம்பரம் பிள்ளை செயல்புரிந்த தமிழ்க் (கலை)

உலகில் முதலில் கள்ளை
ஒழித்ததும் எம்தமிழ் நாடு
உத்தமர் காந்தியின் சொல்லை நன்றாய்
உணர்ந்து நடப்பதில் எமக்கீடில்லை. (கலை)

— *நல்ல தம்பி*

## முத்தமிழ் மாநாடு வாழ்க!

முத்தமிழ் மாநாடு வாழ்க
மூதுரையால் பொது நீதியைப்பாடும் (முத்)

### இடை

புத்தியில் மேம்படும் புலவர் கொண்டாடும்
புத்தக வடிவினில் புதுமையை நாடும்! (முத்)

### தொங்கல்

பகுத்தறிவுக் கொவ்வாத பஞ்சாங்கப் பாடைதனைப்
பார்ப்பனர்கள் சரிபாதி பாய்ச்சி விட்டார்;
மகமதியர் மத்தியிலே மண்ணாட்சி புரிய வந்து
மறுபாதி தனிலுருதை வழங்க விட்டார்!

பகைத்துவைத்துப் பாராண்ட பரங்கியர்கள் ஆங்கிலத்தைப்
பதவிபெறும் படிப்பாகப் பரவ விட்டார்;
மிகுந்துநின்ற தென்மொழியின் வேரறுக்க இந்தியது
விருப்ப மென்றார்; கட்டாய விளைவு காணீர்!

### கமல்

வந்ததும் போனதும் வாழ்வது தேடும்
சந்தையு மானது தமிழ் நாடு;
சிந்தையி னாலிதைத் தெளிந்து மேம்பாடு
செய்திடக் கோவையில் தினமொன்று கூடும் (முத்)

### தொங்கல்

கந்தன் வள்ளி கல்யாணக் காதல் பாட்டு;
கண்ணன் பல கன்னியரைக் கலந்த பாட்டு;
அந்திவண்ணன் சுடுகாட்டி லாடும் பாட்டு;
அருத்தமற்ற சாமிகளுக் கனந்தம் பாட்டு!

முந்தினவர் பாட்டிலுள்ள மொழியை மாற்றி
முன்னேற்றத் தடையான மூடர் பாட்டால்
செந்தமிழும் தென்னாடும் சிதைந்தி டாமல்
சீர்திருத்தப் பாக்கள்பல திகழ்க நன்றே!

மழையொடு பூமி உழவையும் தெய்வ
மாண்பினும் மேலாய் மதி தோணும்;
அழகொடு வள்ளுவன் அறநெறி யோர்ந்த
அறிவுள ராலே வழிகாணும் இந்த (முத்)

## மொழிமேல் விழி வைத்தோர் நாடு!

மொழி மேலே விழி வைத்தே
　　முடிமன்ன ராண்ட தமிழ்நாடு — வட
மொழி யான ஆரியத் தால்
　　அழியாத கலை வாழும் தமிழ்நாடு! (மொழி)

மழைதனை அன்போடு மகிழ்ந்து கொண்டாடும்
　　உழுவோரால் உயர்வான வளநாடு
புலியுடன் ஆடு இரை தேடும்
　　புனலாடும் எழில்நீடும் புலவர்தம் நாடு! (மொழி)

மானங்காத்த மறக்குடியார் சொந்த நாடு — தினம்
　　மாற்றாரை வாழவைக்கும் அன்புநாடு — அபி
மான மலையாளந் துளு கன்னடம் தெலுங்கு
　　மரபோடு உறவாடும் தமிழ் நாடு! (மொழி)

மேருமலை மீதினிலே விற்கொடி நாட்டிக் — கனக
　　விசயர் தம்மை வென்ற சேரவீர நன்னாடு!
சீர்பெருகும் சிலம்பணிந்த கண்ணகி பேரால்
　　திருக்கோயில் சிலையமைத்த செந்தமிழ் நாடு!

செந்தமிழ்நாடு நல்ல திருவிட நாடு
எந்தையர்நாடு இதற் கேதினி ஈடு?

— *வனசுந்தரி*

## நாட்டுக்கொரு நல்லதம்பி

ஆழி நீங்கி வானின் மீது ஆதவன்
　　எழுந்தான் காணீர்,
கோழி உல கெல்லாம் வாழ வென்று
　　கூவி யழைக்குது கேளீர்!
பார் முழுதும் ஏர்முனையிலே — உழவன்
　　பாட்டினிலே கொண்டாட்டம் போடுது இந்தப் (பார்)

— *நல்ல தம்பி*

## நாடு செழித்திட நாடு

நாடு செழித்திடவும் உள்ளமே நாடு
நல்லமழை பெய்யவும் நலமே தேடு!
காடு கழனி எங்கும் கதிர்வளம் சூழ ...
மாடு மனை தேடும்மக்கள் மனம்போல் வாழ... (நாடு)

நீதி தவறாம லே அன்பாலே
நேசமும் குறையா மல் நாமே
ஜாதி மத பேதம் இல்லா மலே
தன்னலம் எண்ணா மலே மேலாம் (நாடு)

ஆணும் பெண்ணும் சமரசம் தான்
ஆருயிர் உடல் போலவே எந்நாளும்
காணரும் காதல் கலையுணர் வோடு
காட்சியுடன் செல்வம் கருணை நீடும்... (நாடு)

## தேசப்பணியே தெய்வப்பணி

தேசப்பணியே மேலான
தெய்வப்பணி யென்போம்
சித்தம் கொண்டே ரத்தம் சிந்தும்
யுத்தம் செய்குவோம்.

தேசம் காத்திடவே — வீரச்
சேயர் பெற்றிடுவோம்
தீங்கு தவிர்க்கும் தீரப்பாலை
ஊட்டி வளர்த்திடுவோம். (தேசப்)

சித்திரமும் வரைவோம்
கைத் தொழில்
வர்த்தகமும் புரிவோம்
தேர் வேந்தர் போலும்
திசைகள் பரவும் அரசும் சகல
வகையிலும் உயர்வோம். (தேசப்)

## வெறும் வாயை மெல்லாதீர்!

சுதந்திரம் வந்ததுன்னு சொல்லாதீங்க — சொல்லிச்
சும்மாசும்மா வெறும்வாயை
மெல்லாதீங்க — நீங்க (மெல்)

மதம் ஜாதி பேதம்
மனசை விட்டு நீங்கலே — காந்தி
மகான் சொன்ன வார்த்தை போலே
மக்கள் இன்னும் நடக்கலே. (சுதந்)

குடிக்கத் தண்ணீரில்லாது பெரும்
கூட்டம் தவியாத் தவிக்குது — சிறு
கும்பல் மட்டும் ஆரஞ்சுப் பழ
ஜூசு குடிக்குது. (சுதந்)

அடுக்கு மாடி மீது சிலது
படுத்துத் தூங்குது — பல
ஆயிரக் கணக்கான மக்கள்
பாயில்லாமல் ஏங்குது. (சுதந்)

ஊத்துக் கிணறு வெட்டச் சொல்லி
உதவி செஞ்சாங்க — பண
உதவி செஞ்சாங்க — அதில்
ஏத்தம் இறைக்கு தான்னு யாரும்
பாக்க வல்லீங்க (சுதந்)

சோத்துப் பஞ்சம் துணிப் பஞ்சம்
சுத்தமாக நீங்கலே — இதில்
சுதந்திரம் சுகம் தருமென் றால்
யாரு நம்புவாங்க? (சுதந்)

— *மணமகள்*

## நாடு நடக்கிற நடை!

நாடு நடக்கிற நடையிலே
நமக்கே ஒண்ணும் புரியலே!
நாகரீகத் தினுசுகளாலே
நல்லது கெட்டதும் தெரியலே!

லேடிகள் போடும் ரவிக்கைத் துணியில்
ஆடவரின் புஷ் கோட்டுகளாம்;
ஆடவர் மாதிரி பெண்கள் மேலே
அங்கி நிஜாரு வேட்டிகளாம்! (நாடு)

கலையைப் படிச்சவன்
காத்தாப் பறக்கிறான்;
காக்கா புடிக்கிறவன்
காரில் பறக்கிறான்

குலமகள் ராகிக்
கூழைக் குடிக்கிறாள்;
கூறுகெட்டுப் போனவ
கும்மாளம் கொட்டுறா! (நாடு)

உதவி என்று பல
நிதிகள் திரட்டுறான்;
ஊராரை ஏச்சுப் புட்டு
உண்டு களிக்கிறான்!

இதம் பல பேசி
எலக்ஷன் ஜயிக்கிறான்;
பதவிக்கு வந்ததும்
பச்சோந்தி யாகிறான்! (நாடு)

— *செல்லப்பிள்ளை*

## அந்தக் காலமும் இந்தக் காலமும்!

அன்னியர்கள் நமை யாண்ட
தந்தக் காலம்;
நம்மை நாமே ஆண்டு கொள்வ
திந்தக் காலம்!
பேசுதற்கும் உரிமை யற்ற
தந்தக் காலம்;
பிரச்சாரப் பெருமை யுற்ற
திந்தக் காலம்!
மனுசனை மனுசன் ஏச்சுப் பொழைச்சது
அந்தக் காலம்;
மடமை நீக்கிநம் உடமை கோருவது
இந்தக் காலம்! ஆமா (மனுசனை)

நெனைச்சதை எல்லாம் எழுதி வச்சது
அந்தக் காலம்; — எதையும்
நேரில் பார்த்தே நிச்சயிப்பது
இந்தக் காலம்! ஆமா (மனுசனை)

மழைவரு மென்றே மந்திரம் செபிப்பது
அந்தக் காலம்; — மழையைப்
பொழிய வைக்கவே யந்திரம் வந்தது
இந்தக் காலம்! ஆமா (மனுசனை)

இழிகுல மென்றே இனத்தை வெறுத்தது
அந்தக் காலம்; — மக்களை
இணைத்து அணைக்க முயற்சி பண்ணுவ
திந்தக் காலம்! ஆமா (மனுசனை)

துரோபதை தன்னைத் துகிலுரிஞ்சது
அந்தக் காலம்; — பெண்ணைத்
தொட்டுப் பாத்தாச் சுட்டுப் பிடுவான்
இந்தக் காலம்! ஆமா (மனுசனை)

சாஸ்திரம் படிப்பது அந்தக் காலம்
சரித்திரம் படிப்பது இந்தக் காலம்!
கோத்திரம் பார்ப்பது அந்தக் காலம்!
குணத்தைப் பார்ப்பது இந்தக் காலம்!
பக்தி முக்கியம் அந்தக் காலம்
படிப்பு முக்கியம் இந்தக் காலம்!
கத்தி தீட்டுவது அந்தக் காலம்
புத்தி தீட்டுவது இந்தக் காலம்!

பெண்ணைப் பேயெனப் பேசி அணைச்சது
அந்தக் காலம்; — பெண்ணைக்
கண்ணில் ஒன்றாய் எண்ணி நடப்பது
இந்தக் காலம்! ஆமா (மனுசனை)

— *நல்லதம்பி*

## கவனிச்சுப் போடுங்கோ ஓட்டு!

தேசபக்தர் போலே — போலி
வேஷக்காரர் உண்டு — தனித்
திறமைக் குறைவிலே — கூட்டணி
சேர்ந்தவங் களுண்டு!

காசுக் கொழுப்புகளுண்டு — சுய
ஜாதித் திமிருகளுண்டு!
கட்சிகள் மாறும் வௌவாலுண்டு
காக்கா புடிக்கிற ஆட்களுமுண்டு!

கவனிச்சுக் கோங்கோ முன்னாலே
கஷ்டப்படாதீங்க பின்னாலே — அது

தேர்தலுன்னா தெருத் தெருவாகத்
தேடித் தேடி வருவாங்க
தேவை முடிஞ்சா பொட்டி மக்களே
தேடுனாக் கெடைக்க மாட்டாங்க!

காருகள் வச்சி அழைப்பாங்க
கண்ணால விருந்தும் வப்பாங்க!
காரியத்துக்கு யாரானாலுங்க — உங்க
காலெக் கூடப் புடிப்பாங்கோ! (கவனிச்சுக்)

## சுதந்திர வாசல் திறந்தது!

வாசல் திறந்ததுவே — சுதந்திர
வாசல் திறந்ததுவே!

வாசல் திறந்தது மக்கள் யாவருமே
மன்னராக நல்ல வண்ணமாய் ... நுழையும் (வாசல்)

ஆகம் ஆவி பொருள் தியாகத்தா லடிமை
யகற்றவந்த காங்கிரஸ் கட்சிக்கும் — சட்டம்
அறிந்த மேலவர்கள் ஆங்கிலப் பெயரில்
அமைத்துக் கொண்ட ஜஸ்டிஸ் கட்சிக்கும் — பேச்சில்
பாகிஸ்தானம் பெற்ற லீக்குக்கும் — தாழ்த்தப்
பட்ட பேர்கள் கட்சி நோக்குக்கும் — மதப்
பாசஞ் சார்ந்த இந்து மாசபைப் போக்குக்கும்
பதவி வாக்குரிமை பொதுவில் வாய்க்கும் வழி (வாசல்)

பழைய காங்கிரஸ் வாதிகிழவர் திராவிடத்தின்
பகுத்தறிவுத் தந்தை தெளிவுக்கும் — அவர்
பக்கம் நின்று பணியாற்றும் தொண்டன் மெத்தப்
படித்த மேதையின் சொற் பொழிவுக்கும் — மேல்
முளைக்கின்ற கட்சிகள் பலவுக்கும் — சர்வ
மொழிகளாய்க் கலைகள் முழுமைக்கும் — மிகத்
தொன்மையான நல்ல உழவுக்கும் — புதுப்
புதுமையாய் வளரும் தொழிலுக்கும் — வழி (வாசல்)

## பாடுபட்டுப் பிழைக்கணும்

நாடு செழிக்க வேணும்
ஆமடி தங்கம்;
நாகரீகமாக வேணும்
ஆமா சொல்லு... (நாடு)

பாடுபட்டுப் பிழைக்க வேணும்
ஆமடி தங்கம்;
பசியாற உண்ண வேணும்
ஆமா சொல்லு... (நாடு)

— *நல்ல தம்பி*

## நாட்டில் பஞ்சம்!

சந்தோஷங் கொள்ளாமே
சாப்பாடும் இல்லாமே
தாய்நாடு திண்டாட்டம் போடுதே — தினம்
அந்தோ துன்பம் கொஞ்சமா
நெஞ்சமே அஞ்சுதே
பஞ்சத்தால் நாடு வாடுதே... (தி)

வேலையில்லே வேலையில்லே செய்தாக்
கூலியில்லே கேட்பார் யாருமில்லே நாட்டிலே — ஏழை
விவசாயம் வீணாச்சு நாட்டிலே — உயர்
விண்மாரிதான் விழியிலே
அழுகையாய்ப் பொழியுதே
நாடு பஞ்சத்தால் வாடுதே... (சந்)

— *காவேரி*

## சக்திக்கேற்ற உழைப்பு... தேவைக்கேற்ற வசதி...

விடுதலை... விடுதலை..

அடிமை யேழையென எவருமில்லை — இனி
உடல் பொருந்திடா இழிவையும்
யுக்தி மேவாத பழமையும்,
மடமையால் நிகழும் அழிவையும்
மதியில் வென்று மனிதரென்ற நிலைபெற (விடுதலை)

ஓடும் ஆற்றை இடை மறித்தும் — நீர்
உண்ண வைத்துப் பயிர் வளர்த்தும்
தேடும் சக்திக் கேற்ப உழைக்கவும்
தேவைக்கான வசதி பெருக்கவும் (விடுதலை)

— *நல்ல தம்பி*

## முதல் இல்லாத வாணிபம்

நாட்டுக்காகப்பல நன்மைசெய்வமென்று
　　கூட்டம் போட்டுப் பேசி நடிச்சுக்கோ — மக்கள்
ஓட்டைக் கொண்டு பெறும் எம்.எல்.ஏ. பதவி
　　சீட்டைச் சமத்தாகப் பிடிச்சுக்கோ — பண
வேட்டையாடத் தொழில் பர்மிட்டு லைசன்சு
　　வேண்டும்போர்க்கு வாங்கிக்
　　　　கொடுத்துக்கோ — அதில்
கூட்டுச் சேர்ந்து நம்ம சொந்தக்காரர் பேரில்
　　கொழுத்த செல்வக்கொள்ளை
　　அடிச்சுக்கோ — கை
முதலில்லாத பெரும் வியாபாரம் — ஜனங்க
முட்டாள்தனம் இதற்கு ஆதாரம் — முன்னே
நடந்தகால மெல்லாம் தியாகத்திலே — இப்ப
நடக்குங்காலம் நம்ம யோகத்திலே
காத்து வந்தபோது தூத்திக்கோ — நிகழ்
　　காலங்கண்டு கோலம் மாத்திக்கோ.
பாராளும் பதவிக்கு நீ — காசு
　　பணந்தேட உதவிக்கு நான்.

பொருளைத் தேடி வைத்துப்
　　பொட்டியிலே பூட்டு — எந்தன்
　　பொன்மொழி கேட்டு.　　　　(பொ)

## கலைகள் யாவும் வளர்த்த நாடு!

கலை முதலாகத் தொழில் முறையாவும்
　　காத்து வளர்ப்பது தமிழ் நாடே
முதல் முதலாக நல்லவை யாவும்
　　முயன்று முடிப்பதும் தமிழ் நாடே　　　　(கலை)

பாட்டால் உணர்ச்சி யூட்டும் — கவி
　　பாரதி சேர் தமிழ் நாடு
நாட்டு மக்கள் முன்னேற்றம் தனை
　　நாடியே கவிதை பாடி வைத்ததமிழ்க்　　　　(கலை)

— *நல்லதம்பி*

## நாட்டுக்கு நல்ல சுதந்திரம்

### பல்லவி

நாட்டுக்கு நலனுங் கண்டோம் — பட்ட
பாட்டுக்குப் பலனுங் கண்டோம் — நம்ம (நாட்)

### அநுபல்லவி

ஏட்டில் படிச்சதும் எல்லாருஞ் சொன்னதும்
எண்ணியிருந்ததும் உண்மையாக — நம்ம (நாட்)

### சரணங்கள்

நேசன் லஜபதி நெஞ்சமாகிய
நிலத்தில் பண்பட்ட சுதந்திரம் — புகழ்
வீசும் தாதாபாய் நௌரோஜி யென்பானிட்ட
வித்தில் முளைத்த சுதந்திரம்
தேசபக்தியாந் தெண்ணீரை வார்த்து — ஞானத்
திலகன் வளர்த்த சுதந்திரம் — மறு
மாசில்லாத எம் மகாத்மா காந்தி மன
வானில் படர்ந்த சுதந்திரம். (நாட்)

## மாதாவே கண் பார்!

பாரத மாதா நீயே — கண் பாராய்!
பாரது நம் சுதந்திரம் சீராய்,
பரவநின் மணிக்கொடி பறக்கவே அன்பாய்! (பாரத)

மாரத வீரர் ஆகஉன் மாந்தர்
மாண்பு சேரும்புய வாகாளராய்
வலிமை பெருகு ஜெய வாழ்வை நாடவே! (பாரத)

சமய விவாதம், ஜாதி விரோதம்
தாழ்வுயர்வெனத் தகாக் குரோதமே
தகர்ந்தெழில் சமரசம் தானுண்டாகவே! (பாரத)

## பாரதி பாட்டு

பாட்டுக்குள்ளே நல்லபாட்டு — எங்கள்
பாரதி பாட்டு! (பாட்டுக்)

வேதத்தி லேசொல்லும் நீதத்திலே — அதன்
போதத்தி லேபஞ்ச பூதத்திலே,
தீதற்ற தாயுற்ற, தெய்வப் பொருள் தன்னைச்
சித்தத்திலே சேர்க்கின்ற பாட்டு! (பாட்டுக்)

வானத்தி லேமின்னும் மீனத்திலே — செழுங்
கானத்தி லேசலத் தானத்திலே,
காணத்தகும் எழில் கண்டு புகழ்ந்திடும்
கற்பனைச் சொற்பொருட் பாட்டு! (பாட்டுக்)

பாசத்திலே மிகு மோகத்திலே — பகல்
வேசத்திலே சக வாசத்திலே
மாசுற்ற மாந்தர் மனத்தைத் திருத்தி
மனிதர்க ளாக்கிடும் பாட்டு! (பாட்டுக்)

பிறப்பினி லேமெய் யுறுப்பினிலே — யுள்
விருப்பினி லேபின் இறப்பினிலே
ஒருப்படும் மாந்தர்கள் ஓர்இனம் ஓர்குலம்
ஒன்றென்று சொல்லும் பாட்டு! (பாட்டுக்)

நாட்டுக்கும் நாட்டுப் பண்பாட்டுக்கும் — பாப்பாவின்
பாட்டுக்கும் மற்றுள்ள பாட்டுடனே
வீட்டுச் சிறைதன்னில் பூட்டிய பெண்கள்
விடுதலைக்கும் வந்த பாட்டு! (பாட்டுக்)

தேகத்தை யும்பொருள் போகத்தையும் — உயிர்
மோகத்தையும் இந்த லோகத்தையும் விடும்
தியாகத்தி லாகும்சுதந்திர தாகத்தின்
வேகத்திலே வந்த பாட்டு! (பாட்டுக்)

## காந்திநெறி காண வாரீர்!

நீதி கருணை பரிசுத்தம்
நேசம் நிறைந்த நெஞ்சுடனே
ஏதம் இல்லா எளிமைதனை
ஏற்றுக்கொண்ட காந்திமகான்.

போதம் அடைந்த உலகொன்றைப்
புதிதாய் அமைக்கும் நெறிகாட்டி
ஓதும் அன்பை உணர்ந்திந்நாள்
உய்ய வாரும் உலகீரே.

தந்தை காந்தி தம்முயிரைத்
தகைமை வாய்ந்த பலியாக்கித்
தந்த அறத்தின் புனிதமெங்கும்
தழைத்து வளர்ந்து நிழல்பரப்பி

விந்தை யான புதுயுகத்தை
விரைவில் வகுத்திவ் வுலகாளச்
சிந்தை செய்யும் அன்புநெறி
சேர வாரும் உலகீரே.

நீதி இரக்கம் சமரசத்தை
நிலையாய் நிறுத்தும் கருணைவள்ளல்
கோதில் அருளே கொண்டுதித்துக்
குணமாம் குன்றின் மீதமர்ந்த

தாதை காந்தி தாமுணர்ந்த
தகைமை சான்ற நெறியென்றே
ஓதும் அன்பின் உயர்வெல்லாம்
உணர வாரும் உலகீரே.

மண்ணை விழுங்க வாய்திறக்கும்
வஞ்சப் பகைத்தீக் கடப்பதற்கு
வெண்ணெய்ப் பாலம் அமைப்பீரோ?
வெல்லும் அருளே அணைக்குமன்றோ?

எண்ணும் இதய கமலத்தில்
இனிய அருளைத் தாங்கிநின்ற
அண்ணல் காந்தி அன்புமுகந்து
அணைக்க வாரும் உலகீரே!

நெஞ்சத் துணிவால் நேர்மையற்று
நேசம் அழியா அந்நியரை
வஞ்சித் தொழுகும் கொடியவர்கள்
மதங்கொண் டடித்து வதைத்தாலும்,

கிஞ்சித் தேனும் கேடெண்ணாக்
கேண்மை உடையார் காந்தி மகான்
செஞ்சொல் அமுத அன்பினிலே
சேர வாரும் உலகீரே!

அனைத்தும் அடைந்து வாழ்வதற்காய்
அயலார் உடைமை கவர்வதெல்லாம்
நினைக்கும் நினைப்பில் தோன்றாமல்
நிதமும் வாழ்வின் தேவைகளை

மனத்தில் திருத்திக் குறைந்தமைந்து
வாழும் வாழ்வே வாழ்வென்று
பணித்த காந்தி நெறியன்பைப்
பற்ற வாரும் உலகீரே!

கானம் உறைந்து சருகுண்டு
காயம் உலரக் கண்மூடி
மோனத் தமர்ந்தே தவம்செய்யும்
முயற்சி வீணாம்; அவரவர்தம்

தானத் தமைந்து செய்கடனே
தகைமை என்றே சான்றளித்த
ஞான குருவின் அன்புநெறி
நாட வாரும் உலகீரே!

சூழ்ந்த சுற்றம் கல்விசெல்வம்
சுகிர்த வாழ்வு காரணமாய்
ஆழ்ந்த செருக்கை அழித்தொழிக்கும்
அருளை அணியாய் அணிந்துலகில்

தாழ்ந்த சிந்தை உடையவராய்த்
தயங்காது அன்பின் நெறிசார்ந்து
வாழ்ந்த கருணை காந்தியெம்மான்
வழியில் புகுமின் உலகீரே!

## காந்தியின் அன்பு

கோலமாய் விளங்கிய
கோதிலா வாழ்க்கைச்
சீலமே காந்தியின்
சீர்மிகும் அன்பே,

காலமாம் தருவிலே
காதலாய் மலர்ந்து
ஞாலமீது இன்பமே
நல்கிடும் அன்பே,

நலங்கெட நாள்தோறும்
நாட்டிய சூழ்ச்சிக்
குலங்கெடக் கொதித்தெழும்
கோதிலா அன்பே,

விலங்கினை ஒத்தவர்
வெகுளுதல் கண்டால்
கலங்கிடா திருப்பது
காந்தியின் அன்பே.

அறத்தினைச் சிறையிலே
அடைத்து வைப்பவர்தம்
மறத்தினைத் திருத்திடும்
மாண்புயர் அன்பே.

வெறுத்திடும் வேற்றுமை
விளைத்தெழும் மனத்தைக்
கரைத்திடும் கருணையாம்
காந்தியின் அன்பே.

படிந்தடி பணிந்திடப்
பசி மிகும் ஏழை
படுந்துயர் கண்டுளம்
பதைத்திடும் அன்பே.

கொடுந்துயர் விளைத்திடும்
　　கோதெலாம் அகற்றிக்
கொடியரைக் காப்பதும்
　　காந்தியின் அன்பே.

பணந்தனைக் குவித்திடும்
　　பண்பறு நிலையைக்
கணந்தொறும் இகழ்வது
　　காந்தியின் அன்பே.

முனிந்தெழும் தீமையை
　　முற்றிலும் நலமாய்க்
கனிந்திடச் செய்வது
　　காந்தியின் அன்பே.

## நேரு எனும் மேரு

அடிச்சவர்க்குத் தொண்டாய், பிடிச்சவர்க்குப் பெண்டாய்
　　அடிமையான நாட்டைச் சீரு — செய்த
அண்ணல் காந்திக்குப்பின் அறிவு ஆற்றல் தன்னில்
　　அந்த ஸ்தானம் கொண்ட மேரு — மணி
முடிசூடாத மன்னன் நேரு — மேதை
　　மோதிலாலின் தவப் பேறு — தள்ளி
அடைக்கும் சிறைதன்னில் அன்னை நாட்டுக்காக
　　ஆயுள்தன்னில் பாதி கிடந்தார் — சொந்த
ஆஸ்தி பூஸ்தியுடன் அருமைப்பெண்டு பிள்ளை
　　அத்தனையும் விட்டுப் பிரிந்தார் — நான்
ஆவி நீத்தபின்பு தேகந்தன்னை நெற்றிக்
　　கணியும் சாம்பலாகச் செய்யுங்கள் — நம்ம
அகிலபாரதத்தின் நிலங்கள் தோறும் எந்தன்
　　ஆசைக்காக அள்ளிப் பெய்யுங்கள் — அது
வளத்துக்கான உரமாகட்டும் — மக்கள்
　　வறுமை நீங்கிப் பசி போகட்டும் — என்ற
தலைவரான அந்த தியாகமூர்த்தி ஆத்ம
　　சாந்திக்காக நம்ம நலத்துக்காக செய்த
..........................................

(பாடல் முடிவுறவில்லை)

## காந்தி அன்பால் வாழ்வோம்

மாண்டார் போல் மாநிலத்தில்
      மானமின்றி வாழவைத்த
தீண்டாமைப் பூண்டதனைத்
      தேடி நட்டுப் பேணிவிட்டோம்.

மாண்டார் உயிர்ப்பிக்கும்
      மா மருந்தாம் காந்தி யன்பால்
தீண்டாமைப் பூண்டதனைக்
      கீண்டெறிந்து வாழ்ந்திருப்போம்.

அறங் கடந்த ஆட்சிதனை
      அஞ்சுகின்ற நெஞ்சுடனே
புறங் கிடந்த அன்னியரைப்
      போற்றியடி பணிந்திருந்தோம்.

அறம் வளர்க்கும் அருள்பெருக்கும்
      அரு மருந்தாம் காந்தியன்பால்
அறந் துறந்த புல்லரெல்லாம்
      அறிவு பெற வாழ்ந்திருப்போம்.

பாடுபட்டுப் பயிரிட்ட
      பருத்திதனைக் கப்பலேற்றி
பாடுபடா நாட்டினரின்
      பண்புயர வாழ்ந்துவிட்டோம்.

பாடுபட்டு ராட்டுருட்டிப்
      பசிதணிக்கும் காந்தி அன்பால்
நாடுபட்ட வறுமையற்று
      நலம்பெருக வாழ்ந்திருப்போம்.

கொல்லவல்ல குண்டென்றால்
      குழைந்தொடுங்கும் கோழையராய்
அல்லலுற்றே அடிபணியும்
      அடிமைகளாய் வாழ்ந்திருந்தோம்.

கொல்லவல்ல குண்டுகளைக்
குளிர்விக்கும் காந்திஅன்பால்
அல்லலெல்லாம் அகற்றுகின்ற
அறம்வளர்த்து வாழ்ந்திருப்போம்.

நன்செய்புன்செய்ப் பயிர்துறந்து
நகராளும் துரைகளுக்கே
அஞ்சியடி பணிவதைத்தான்
அருமையென்று மதித்திருந்தோம்.

பஞ்சையெனப் பட்டினியாய்ப்
பசியறிந்த காந்தியன்பால்
நன்செய்புன்செய்ப் பயிர்வளர்த்து
நாட்டிலுண வாக்கிடுவோம்.

ஓதிவைத்த உண்மைதனை
ஒருபொழுதும் உணராமல்
சாதிமதச் சண்டையிலே
சமர்த்தரென்று பேரெடுத்தோம்.

ஆதிமுதல் வேதமெல்லாம்
ஓதுகின்ற காந்தியன்பால்
சாதிமதச் சண்டையற்ற
சாந்தரென வாழ்ந்திருப்போம்.

## கலைஞருக்குக் கவிதை மடல்!

கண்ணாலே காணாத புகழ் வடிவாம்
கருத்துணர் பேரறிஞரான
அண்ணாவின் நிழலாகும் அன்புடைய
தம்பியரில் முதல்வா! இன்பப்
பண்ணாகும் தமிழ்ச் செல்வா! பட்சமிகும்
உமைக்காண வேண்டும் முக்கியம்
தண்ணான மொழியாலே வருகவென
பதிலுடனே தருக நன்றே.

## இழிவை நீக்கிய பெரியார் வாழ்ந்த நாடு!

திராவிட மாநாடு வாழ்க!
செல்வத் திருநாடு (திரா)

பழமையான மூடப் பழக்க வழக்கத்தில்
பாழ்பட்ட நெஞ்சர்க்குப் புரியார்,
படித்துணர்ந்து பகுத்தறிவுக் கட்சி தன்னைப்
பரவச் செய்துவரும் நெறியார். (திரா)

இழிவை நீக்கும் ஈ.வெ.ராமசாமி என்ற
எங்கள் தந்தை உண்மைப்பெரியார் — மன
இருளை நீக்கி நம்மை மனிதனாக்கி மதவெறியைப்
போக்கி நல்ல நெறியைக் காட்ட வந்த (திரா)

## புத்தர் பிரான்

சாகாத சரித்திரப் புகழ் தாங்கும் தெய்வங்கள்
சரதமாகிய நிலையடைந்தவர்
தன்னலமற்றவர்கள் செத்தும் (சாகா)

முறிந்து கால் முடமாகிய ஆட்டைப்
பரிந்தணைத்துத் துயர் தீர்த்தார்.
முறையே தவறிய மிருகப் பலிதனை
முன்னின்றகற்றி உயிர் காத்தார்.
கருணைக் கடலாம் கௌதம புத்தர்
கற்றறிவாளர் கருதும் சித்தர்
அறிவில் வளர்ந்த அன்பின் வடிவம்
அவர்தான் எந்தன் கடவுள் என்றும் (சாகா)

— *நல்லதம்பி*

## தீனா... மூனா... கானா!

தீனா... மூனா... கானா... எங்கள்
தீனா.. மூனா.. கானா.
அறிவினைப் பெருக்கிடும் உறவினை வளர்த்திடும்
பகுத்தறிவோடு நாட்டினர் வாழ
திருக்குறள் தந்தார் பெரியார் — வள்ளுவப் பெரியார்!
அந்தப் பாதையில் நாடு சென்றிட வழி
வகுப்பதும் அதன்படி நடப்பதும் எங்கள்... (தீனா)

கருப்பு சிவப்பு என்ற பேதத்தை நீக்கும் — தலைக்
கனத்தைக் குறைத்து நல்லதன்மையை யுண்டாக்கும்
கள்ளர் மறவரோடு பள்ளுப் பறைகளென
உள்ள பேதங்களை ஒழித்துக் காட்டும் எங்கள்... (தீனா)

காந்தியடிகளின் அஹிம்சையும் — வள்ளுவன்
கருணையும் ஒன்றெனக் கொள்ளுவதும் எங்கள்... (தீனா)

தனயன் மாருக்கொரு தந்தையைப் போலே
தங்கைகளுக் கொரு தமக்கையைப் போலே
தம்பிமாருக் கொரு அண்ணா... போலே
சரியும் தவறும் இதுவெனக் காட்டும்
தமிழன் பெருமைதனை நிலை நாட்டும் (தீனா)

*— பணம்*

## நாட்டிய ஆசிரியர் தண்டபாணி அவர்கட்குப் பிறந்தநாள் வாழ்த்து

### அறுசீர் விருத்தம்

கண்கள்முகங் கரங்களோடு விரல்களாலும்
கவின்கொண்ட அங்கத்தின் அசைவினாலும்
பண்பொருளைத் தோற்றுவிக்கும் கலைஞன்; ஞான
பரதமுனி மரபினனும் இவனேயென்ன
மண்புகழும் நாட்டியத்தின் சக்கரவர்த்தி
மனந்தனிலே யாம் வைத்த அன்பால் நல்ல
நண்பர் தண்டபாணியவர் பிறந்தநாளை
நன்னாளாய்க் கொண்டாடல் நலமே யம்மா!

## பொன்னாள் இது போலே...

ஆண் : பொன்னாள் இதுபோலே வருமா இனிமேலே?
முன்னால் வந்தது எத்தனையோ நன்னாள் — அதிலே..(பொன்)

நல்ல மலர் வாழ் திருவின்
வடிவம் உனதல்லவா?
தமிழ் மறைபேசும் நிறை — உன் நிறை
மேலும் நான் சொல்லவா? பக்கம் மெல்லவா! (பொன்)

பெண் : குலமாதர்கள் கொண்டாடும் குணமாமணியே — நல்ல
குலமாதர்கள் கொண்டாடும் குண மாமணியே!
மாசறு பொன்னே! வலம்புரி முத்தே!
காசறு விரையே! கரும்பே! தேனே!
மலையிடைப் பிறவா மணியே என்கோ!
அலையிடைப் பிறவா அமிழ்தே என்கோ! — என்று
குலமாதர்கள் கொண்டாடும் குண மாமணியே! (பொன்)

— *பூம்புகார்*

## தாரா! தாரா! வந்தாரா!

தாரா தாரா வந்தாரா?
சங்கதியேதும் சொன்னாரா? — அவர்
சந்தோஷமாக வந்தாரா? — இல்லை
சஞ்சலமாகவே இருந்தாரா? (தாரா)

சீரான உன்னை ஜோடியோடு
தெரிசனம்தான் செய்தாரா?
தேவி என்னைக் காணோமென்று
சிங்காரமாய் வைதாரா? (தாரா)

பூத்தமுல்லை மலர்தன்னைப்
பார்த்து மெல்லச் சிரித்தாரா?
வாய்த்த இவளை மனதில் எண்ணி
மரத்தைக் கட்டிப் பிடித்தாரா? (தாரா)

— *தெய்வப் பிறவி*

## பகலில் வந்த நிலா

ஆண் : பட்டப் பகல் நிலவோ! — கண்ணம்மா!
பங்கயச் செம்மலரோ! — உன்
பால் வடியும் முகத்தைப் — பார்க்கையில்
பாட்டுப் பிறக்குதம்மா...! (பா)

பெண் : பாட்டுக்குள்ளே உயிராய்க் — கண்ணையா!
பண்படும் மெய்ப்பொருள்நீ — அன்புக்
கூட்டுச் சுவை கொடுத்தே — உள்ளத்தைக்
கொள்ளை யடித்துவிட்டாய்... (கூ)

ஆண் : முல்லைமொட்டின் வகுப்போ — கண்ணம்மா
முத்துமணித் தொகுப்போ! — உன்
பல்வரிப் புன் சிரிப்பால் — என்னையோர்
பாவலன் ஆக்கிவிட்டாய்...! (பல்)

பெண் : பாவலன் ஆனாலும் — கண்ணையா!
நாவலன் ஆனாலும் — மெய்க்
காவலன் நீயெனவே — என்னையுன்
கருத்தில் கலந்துவிட்டாய்... (கா)

ஆண் : இன்பக் கனிச்சாறோ? — கண்ணம்மா!
இனித்திடும் தேனாறோ! — உன்
அன்பு மொழியாலே — என்னையுன்
அடியவ னாக்கிவிட்டாய்...! (அன்பு)

பெண் : அடியவனா னாலும் — கண்ணையா!
உன் உடையவள் நானாவேன்! — (உன்னுடையவள்)
நம் — உடலிரண்டானாலும் — கலந்த
உறவினில் ஒன்றல்லவோ — (நம்முடல்)

## நடை யலங்காரம் கண்டேன்!

### பல்லவி

நடையலங்காரம் கண்டேன் அன்னப்
பெடையும் பின்னடையும் பொற்
கொடி யிவள் மலரடி (நடை)

### அநுபல்லவி

நடையலங்காரம் நளின சிங்காரம்
இடையலங்காரம் பின்னல் நடையலங்காரி (நடை)

### சரணம்

தேடக் கிடைத்திடாத் தெய்வீக மருந்து
தெரிசனம் கண்கள் பெறும் விருந்து
ஆடிடும் மாமயில் ஆகும் மின்னாள் — ஒயில்
ஆனந்தப் பரவசக் கானம் தரும் குயில்
பாலென மொழி
பகரெழில் சுகமருவு
சா ரீர வதன
மதியின் மாண்பாகும்
நீள் விழியினலங்காரம்
நிலா நிகர் ஒய்யாரம்
நிலவிய சிங்காரம்
தனையுமிது நேரம்
காண மோகமீறி — எனதுளம்
பொன்னாள்
வடிவின் பின்னே செல்லுது
என்னே புதுமை! (நடை)

— *குபேரகுசேலா*

## காதல் ஆட்சி

பெண் : மாவொடு தழுவும் மலர்க்கொடி போலே
மாது நான் மருவ முடியாதோ?

ஆண் : மாதுன்னால் முடியும் ஆனாலும் மாண்பெனும்
மணிமுடி தடையுண்டு தெரியாயோ...?

பெண் : மேவும் காதலில் உயர்வு தாழ்வெனும்
வித்தியாசம் நினைப்பதும் இயல்பாமோ?

ஆண் : விழியால் தொழிலால் வித்தியாச மில்லாது
வினவுகிறாய் பதில் சொல்லப் போமோ?

கலப்பை தூக்கி முன்னாலே — கஞ்சிக்
கலயம் தாங்கிப் பின்னாலே
கழனி செல்லும் அழகைப் பாரு
கண்ணாலே! — புருஷன் மனைவி (கழனி)

— *சொர்க்கவாசல்*

## குறையாத வட்ட நிலா!

அஞ்சுவகைப் பூ மலர்ந்த நந்தவனமோ! — இவள்
அழகு சுமந்து வந்த அங்க ரதமோ!
கொஞ்சுகின்ற பஞ்சவர்ணக் கிளி யிவளோ! — இவள்
கோலமது கண்கள் உண்ணும் ஆரமுதோ!

வாசமிகும் கூந்தலது வான் முகிலோ!
வளர்ந்து குறைந்திடாத வட்டநிலவோ!
அஞ்சுகம் போல ரஞ்சிதப் பெண்மணி வந்தாள்!
ஆனந்தம் பெற அழகு லிருந்து தந்தாள்!! (அஞ்சுவகை)

## உவமானம் அவமானம்!

### பல்லவி

பாராத கண்பாபம் செய்த கண்ணடா! — அவள்
பார்மீது வந்தவொரு தெய்வப் பெண்ணடா! — அவள்

### அநுபல்லவி

நீராரும் கடல்தந்த நிதிமாது — மா
நிலமென்னும் பொறைமாது கலைமாது
சீராரும் திருமாதர் ஒன்றாகத் திகழ்மாது!
நேராகப் பூங்காவில் நான்கண்டேன் நிஜமிது! (பாராத)

### சரணம்

நாற்றந்தரும் மீனை நங்கையின் கண்களென
நாம் சொல்லும் உவமானம் அவமானம்!
ஏற்றிடும் சுரஞானம் இல்லாத குயில்தன்னை
ஏந்திழைக் கிணைசொல்லல் அஞ்ஞானம்!

சாற்றிடும் வண்டுமிழும் தேன்பானம் — அந்தத்
தருணியின் மொழியென்றால் மதியீனம்
போற்றிடும் குலமாதர் புகழ்ந்திடும் குருஸ்தானம்!
பொய்யல்லடா அவளுக்கவளே சமானம்! (பாராத)

## மொட்டு மலர்ந்தது!

தோழிகள் : ரோஜா மொட்டு மலர்ந்தது!
மலர்ந்த மட்டும் சிவந்தது!
ரூப சுந்தரம் சோபிதமாய்ப்
புதிய மாற்றம் அடைந்தது! ஏமாற்றம் அடைந்தது!

இதை
ராஜா கையில் பெருமைக்காகப் பிரியத்தோடு
கொடுக்கலாம்... அவர்
ஆசையோடு சுகந்த வாசம் பிடிக்கலாம் -
இதை ரசிக்கலாம். (ரோஜா)

பூவுமாகிப் பிஞ்சுமாகிக் காயுமாக முதிர்ந்ததாம் — அதில்
புளிப்பும் மாறி இனிப்பதான கனியுமாகத் திரண்டதாம்
(ரோஜா)

பாடித்திரிந்த குயிலுக்குஞ்சும் பறந்து பாட
முனைந்ததாம் — அது
பருவக்காலக் கோளாறுன்னு பாக்கப் பாக்கத்
தெரிஞ்சுதாம். (ரோஜா)

## பொற்கொடியோ? பூங்கொடியோ?

### பல்லவி

பொற்கொடி மேல்கண்ட புதுமையெல்லாம் — இந்தப்
பூங்கொடி மேல் காணேனே — நானே என் (பொற்)

### அநுபல்லவி

கற்பனையால் வந்த காவியப்பொருள் யாவும்
காரிகையாய் வந்தென் கருத்தினிலேமேவும் (பொற்)

### சரணம்

வெண்மதித் துண்டொன்றில் வில்லிரண்டும் கெண்டை
மீன்களிரண்டும் கண்டேன் — நானே (வெண்மதி)

தண்டுலாவும் வாழைத் — தார்களும் — தேனூறும்
செம்பவளங்கள் கண்டேன் நானே

சந்திர பிம்பங் கண்டேன் — அதன்மேல்
கொண்டலுலாவக் கண்டேன்

இன்பந்தரும் இந்த எழில்வளம் கண்டேன்
இனியவை யாவும் கண்டேன் — நானே. (பொற்கொடி)

## சின்னப் பாப்பா

நான், தென்ன மரத்திலே குந்தியிருப்பதைச்
சின்னப்பாப்பா — அவ
தெருஞ்சுக்கிட்டாச் சிரிச்சிக்கிட்டே என்னப்பாப்பா!
எதித்த ஊட்டுப் பாப்பா!

எம், பாட்டுச் சத்தம் கேட்டுதின்னாச் சின்னப் பாப்பா!
எங்க சின்னப் பாப்பா — அவ
ஆட்டத்தோடு அபிநயத்தப் புடுச்சுப் பாப்பா!

கொடுங், கோடையிலே குளுகுளுங்கற குமரிப் பாப்பா — எங்க
குமரிப் பாப்பா — பனி
வாடையிலே வெதுவெதுங்கிற
வயசுப் பாப்பா!

யேன், ஆசையெல்லாம் நீதான்னா சின்னப்பாப்பா!
எங்க சின்னப்பாப்பா! — ஐயோ
அப்படி எனக்கும் இருக்குதும்பா
அறிவுப் பாப்பா — நல்ல
அழகுப் பாப்பா!

நான், எறங்கி வந்து எதுக்க நின்னாச் சின்னப் பாப்பா
எங்க சின்னப் பாப்பா — நீங்க
இங்கே எப்படி வந்தீங்கோன்னு என்னைக் கேப்பா!

நான், அக்கம்பக்கம் பாக்கையிலே சின்னப் பாப்பா!
எங்க சின்னப் பாப்பா! — இங்கே
யாருமில்லே சொல்லுங்கோன்னு
வாயப் பாப்பா — என், வாயப் பாப்பா

நான், போட்டுக்கவா அதைப் போட்டுக்கவா
நான் போட்டுக்கவா தாலியின்னா — சின்னப்பாப்பா
எங்க சின்னப் பாப்பா — சர்தான்
போட்டுக்கோன்னு கழுத்தெ மெல்ல
நீட்டிப் பாப்பா — கழுத்தெ, நீட்டிப்பாப்பா.

பாப்பா... பாப்பா... யப்பா... தப்பா
யப்பாப்பா... பப்பா (நான் தெனன)

— *பேசும் தெய்வம்*

## சிங்காரப் பைங்கிளியே! பேசு!

சிங்காரப் பைங்கிளியே பேசு!
செந்தமிழ்த் தேனை யள்ளியள்ளி வீசு! (சிங்கார)

சங்கம் புகழ் முரசுகொண்ட தனியரசு — என்
தமிழ் மொழிக் கெதுவோ நீதரும் பரிசு? (சங்கம்)

திங்கள் நிறை மலர் முகத்தில்
செவ்விதழ் சேர்த்து நித்தம்
திருவே தருவேன் மனம் போல்
குறையாதொரு நூறு முத்தம் (திங்கள்)

நீரே சொந்தம் ஆனீர் பேச்சிலே — எதிரில் அந்த
நினைவே மறந்தேன் உன் கண் வீச்சிலே!

இந்த வீரர் எங்கள் நாட்டுக்கினி அதிபதியே!
விஜயாள் ஒன்றே போதும் வெகுமதியே!

ஆ....
ஊம்... (சிங்கார)

பாண்டிய நாட்டுப் பூங்குயில் பேடு
ஊஞ்சல் ஆடுதே...! ஊஞ்சல் ஆடுதே! (பாண்டிய)

அது வேண்டிடும் சோழ மண்டலத் தென்றல்
ஓடிவீசுதே...! ஓடோடி வீசுதே!

ஆசைக் கொடி தனியே பிணைந்தாடிடும்
வேளையிலே (ஆசைக்)

ஆணொடு பெண்ணும் கண்ணொடு
கண்ணும் ஜாடை பேசுதே! — ரெண்டும்
காதல் பேசுதே!

பளிங்கு போலே தெளிந்த நீரில்
மீன்கள் துள்ளி யாடுதே! — இரு
மீன்கள் துள்ளியாடுதே!

விளங்கும் எந்தன் விஜயாவின் கண்
மீன்கள் ரெண்டும் ஆடுதே! — விழி
மீன்கள் ரெண்டும் ஆடுதே! (விளங்கும்)

அலையோடு அலைதாவி ஒன்று சேர்ந்ததே! (அலை)

ஆம்! அதுபோல் நம் இரண்டுள்ளம் ஒன்றுசேர்ந்ததே!

பளிங்கு போலே தெளிந்த நீரில்
மீன்கள் போலே ஆடுவோம் — இரு
மீன்கள் போலே ஆடுவோம்!

— *மனோகரா*

## நீல வான வீதி மேலே...

### பல்லவி

இன்ப, லோக ஜோதி ரூபம் போலே
நீல வான வீதி மேலே
சந்திரிகா நீ வந்தாய் அன்பாய் ஆடவே — இன்பச்
சந்திரிகா — நீ வந்தாய் அன்பால் ஆடவே!

### சரணம்

மின்னும் சொக்க வெள்ளிப் பொட்டு வேலைதான் — செய்த
மேக நீல வர்ணப் பட்டுச் சேலைதான் — சுற்றி
வெண்ணெய்க் குன்றம் என்னும் பெண்மைக்
கோலம் தான் — பெற்ற

உன்னைக் கண்டு காதல் கீதமே — கடல்
முன்னும் பின்னும் தாவிப் பாடும் நேரமே! — வாழ (உன்னை)

எண்ணும் ஆசைப் பெண்ணும் நேச ஆணுமே — காணச் (சந்த்ரிகா)

சொந்தம் என்றே சூடும் மணமாலைதான் — கொண்ட
ஜோடி யொன்றுகூடும் முதல் மாலைதான் — இன்றே
அந்தம் கொள்ள என்றே நல்ல வேளை தான் — கண்டு (இன்ப)

— *தூய உள்ளம்*

## விண்ணோடும் முகிலோடும்...

விண்ணோடும் முகிலோடும் விளையாடும் வெண்ணிலவே!
கண்ணோடு கொஞ்சும் கலையழகே! இசையமுதே! (விண்ணோடும்)

அலைபாயும் கடலோரம் இளமான்கள் போலே
விளையாடி... இசைபாடி... விழியாலே உறவாடி இன்பங் காணலாம்.

விண்ணோடும் முகிலோடும் விளையாடும் வெண்ணிலவே
கண்ணோடு கொஞ்சும் கலையழகே! இசையமுதே! (விண்ணோடும்)

தேடாத செல்வ சுகம் தானாக வந்தது போல்
ஓடோடி வந்த சொர்க்க போகமே!
ஓடோடி வந்த சொர்க்க போகமே!

காணாத இன்பநிலை கண்டாடும் நெஞ்சினிலே
ஆனந்த போதையூட்டும் போகமே — வாழ்விலே
விளையாடி இசைபாடி விழியாலே உறவாடி
இன்பங் காணலாம்! (விண்ணோடும்)

சங்கீதத் தென்றலிலே சதிராடும் பூங்கொடியே
சந்தோஷம் காண உள்ளம் நாடுதே!

மங்காத தங்கமிது! மாறாத வைரமிது!
ஒன்றாகி இன்பகீதம் நாடுதே — வாழ்விலே!
விளையாடி இசைபாடி விழியாலே உறவாடி
இன்பம் காணலாம்! (விண்ணோடும்)

— *புதையல்*

## வந்தனள் ஒரு சுந்தரி!

வந்தனள் ஒரு சுந்தரி — திரு
மங்கை போலொரு மாது — கொஞ்ச
வயதுதான் நல்ல சாது — வீசு
வாச மேவும் ஜவ்வாது — அன்று
மாலை வீசியுன் மாலையே கொண்ட
மாதவி என்னும் போது;

கந்தமார் குழல் வண்டினம் — கொன்றைக்
காயுடனிருள் மேகம் — நுதல்
கலாமதிக் கொரு பாகம் — புருவம்
ககன வில்லுடன் ஸ்நேகம்
கானில் வாழ் மடமானையும் — நுதல்
மீனை மானுதலாகும்!

மாசில்லாள் முகம் தேசுலாவிய
வானகச் சுந்தர பிம்பம் — படர்
மதன மோகன டம்பம்! — கண்டம்
வாரி தோய்ந்த வெண்சங்கம் — திகழ்
மார்பிடந்தனில் வார்பெறுந் தனம்
சீர்பெறும் செம்பொற் கும்பம்! (வந்தனள்)

*— கண்ணகி*

## காக்கை விடு தூது

கொண்டல் வண்ணம் போலே நிறம் கொண்ட காக்கா! — நீதான்
கொண்டவர்க்குக் கோபமேனோ கூறு காக்கா!
காலைத் துயில் எழுந்து கத்தும் காக்கா — எந்தன்
காதலர்க்கு என் மீது கோபம் ஏது காக்கா!

வரும் விருந்தைக் கரைந்து சொல்லும் காக்கா நீதான்!
வள்ளல் திருவாய் திறக்கச் சொல்லு காக்கா!
காக்கரட்டன் காயைப் போலே காணும் மூக்கா! — நான்
காமன்அம்பால் வாடலாமோ சொல்லு காக்கா!

காகா காகா எனவே ராகம் பாடும் காக்கா!
கட்டழகன் காதை மெல்லக் கொத்து காக்கா!
உட்கார்ந் திருக்கிறாரே ஊமை போலே சும்மா — அவர்க்கு
உண்ண என்ன வேணு மென்று கேளு காக்கா!!

*— பத்ருஹரி*

# மாலையிட்ட மங்கை யாரோ?

மாலையிட்ட மங்கை யாரோ? என்ன பேரோ?
அந்த மானினியாள் எந்த ஊரோ? — உங்கள்
மனம் நாடியே சுகமே தரும்
மதிமேவிய வனிதாமணி
மாமதவேள் தென்றல் தேரோ? — திரு
வாய் மலர்ந்தே அருளீரோ?

முகிலுக் கிணையு மென்ற
குழலைத் தழுவி நின்ற
முகவட்டமது சந்த்ர பிம்பமோ? — பிறை
நிகர் நெற்றி அவள் கண்ட சங்கமோ?
முல்லையோ? இடையில்லையோ?
மலர்க் கொல்லையோ? வளர் செல்வியோ? — தொடை
மகரத் துவஜன் கோயில் தம்பமோ? — தங்கள்
சகபத்தினி உடலுந் தங்கமோ?

கெண்டை மீனும் மானும்
கண்டு நாணும் சுழல்
வண்டு நேரும் விழி வல்லியா? — கற்
கண்டு தேன்மருவும் சொல்லியா? — தமிழ்ச்
சிந்து பாடி மணித் தண்டையோடு பாதம்
கொண்டு ஆடுகின்ற மெல்லியா? — எந்தன்
சிந்தைதான் மகிழச் சொல்லையா!
காவியக் கலையோ? — சிற்ப
ஓவியச் சிலையோ? — அந்தக்
காமனவன் சிலை
பூமியின் மிசைக் காரிகையா யுருமாறி வந்தாளோ?

காவின் மலர்க் கொடியோ? — கல்வி
கேள்வியி லெப்படியோ? — உங்கள்
காதலி எந்தன் மாதிரி — யன்
போடு காமுறுஞ் சல்லாப
ரசப் பெண்ணோ? கற்பனையின் சீரோ? கட்டழகி யாரோ?
அற்புத மின்னோ? குணவதி அவளும் உமக்குத் தகுந்தவளோ?

— *இரத்தக் கண்ணீர்*

## ஆகாய வீதியில் அழகான வெண்ணிலா!

ஆகாய வீதியில் அழகான வெண்ணிலா
அலங்காரத் தாரகையோடு அசைந்தூஞ்சல்
ஆடுதே! ஆனந்தம் — தேடுதே! (ஆகாய)

இருளான மேக மென்னும் திசையின் பின்னாலே
மறைந்தே இந் நாளே

உறவோடு ஓடியாடி உயர் காத லாலே
உவந்தே மென் மேலே

அலங்காரத் தாரகையோடு
அசைந்தூஞ்சல் ஆடுதே!
ஆனந்தம் தேடுதே!

ஆகாய....
ஆ..... ஆ......

ஓ... ஓ....
இன்னலாகத் தோன்றும் மின்னல்
இடைமறித்தாலும் இடியெதிர்த்தாலும்

கண்மணித் தாரகை தன்னைக் கைவிடேன் என்றே
களிப்போடு சென்றே
அலங்காரத் தாரகையோடு
அசைந்தூஞ்சல் ஆடுதே!
ஆனந்தம் தேடுதே!

ஆகாய....
ஆ....... ஆ....
ஓ.... ஓ.....

ஆகாய வீதியில்
அந்தோ மின்னல் மின்னுதே!
ஆபத்து வருகிற தென்றே!
அடாத மழை யிடி
யிடிக்குதே! ஆனந்தத்தைக் கெடுக்குதே!

*— மஞ்சள் மகிமை*

## கோடை மறைந்தால்...

கோடை மறைந்தால் இன்பம் வரும் — கூடிப்
பிரிந்தவர் சேர்ந்தாலே சொந்தம் வரும்!
ஓடும் தென்றல் முன்னால் வரும் — இசை
பாடும் குயிலோசை தன்னால் வரும்!

வாசமா மலர் வாவென் றசைந்ததே!
ஆசையால் வண்டு தானே பறந்ததே!
பேசினால் சுகம் ஓடோடி வருதே!
மாசில்லா இன்பம் இனிமேல் நமதே! (கோடை)

பாரிங்கே கண்ணே நேராய்ச் சந்த்ரோதயம்
பகலில் தோன்றிடுமாமோ? அதிசயம்!
பாதை தேடி அலையும் என் விழியில்
பாவை உன் திருமுகமே உதயம்!
ஆனந்தம் அது எங்கே பிறந்தது?
அமைந்த ஆண் பெண் அன்பால் மலர்ந்தது!
ஊனும் உயிரும் ஒன்றாய்க் கலந்தது!
உண்மைக் காதலில் உள்ளம் கனிந்தது! (கோடை)

— *மஞ்சள் மகிமை*

## பொழுது விடிஞ்சா...!

பொழுது விடிஞ்சா ராஜாராணி — நாம்
பூமியறிய புருஷன்நீ; மனைவி நான் (பொழுது)

கண்டோர் எவருமே கடவுளாய் வணங்கவே
கற்றோர் புகழவே கனிவுபெறும் இன்பம்தரும் (பொழுது)

எளியவரை லேசாக மதிப்போம்
இரவிலே குடையதனைப் பிடிப்போம்;
அழகின் விலாசம் அணியின் விசேஷம்
அளவற்றதோர் சுக முற்றும் நாம்
அடைந்து விளங்க வரும் (பொழுது)

— *வனசுந்தரி*

## சரச ராணி

ஆண் : சரச ராணி கல்யாணி — சுக
சங்கீத ஞான ராணி மதிவதனி!

பெண் : புதின ராஜா குலதிலகா! தவப்
பூலோகம் போற்றும் அழகா! — குணரசிகா! (புனித)

கனியில் மேவு(ம்) ரச
இனிமைபோல — இந்த
வனிதை வாழ்வில் நீர் அல்லவா! (கனி)

ஆண் : நான் எனது வாழ்வில் பெறும்
பெருமை யாவும் உந்தன்
மகிமையால் வருவ தல்லவா!

பெண் : எனைப் புகழ்ந்து பேசுவது தகுமா?

ஆண் : மனம் மகிழ்ந்து கூறும் மொழி நிஜமாய்!

பெண் : நிலை மறந்தேன் கண்ணா!

ஆண் : உளம் தெரிந்தேன் கண்ணே!

இருவரும் : இல்லறமாம் நல்லறம் நாடும் முறையாலே
இணையான இருவரால் வளரும் நேசம்! — அதில்
ஏற்படும் சந்தோஷம் விசேஷம்!

— *தேசிங்குராசன்*

## அருகில் ஒரு தங்கத்தேர்!

அழகைத் தாங்கும் தங்கத்தேர்
அருகில் வந்து நிற்குதுபார்!
மழையைத் தாங்கும் முகிலைப்போலே
குழலைத் தாங்கி நிற்குதுபார்!

## அன்பாலே தேடிய செல்வம்!

அன்பாலே தேடிய என்
அறிவுச் செல்வம் — தங்கம்!
அம்புவியின் மீது நான்
அணி பெரும் ஓரங்கம்! (அன்பாலே)

இன்பம் தரும் தேனிலவு....
இதற்குண்டோ ஆதங்கம்?
ஏகாந்த வேளை வெட்கம்
ஏனோ வா என் பக்கம்! (அன்பாலே)

உடல் நான்; அதில் உளம் நீயென
உறவு கொண்டோம் நேர்மையால்
கடல் நிலவாய்க் காட்சியிலே
கலந்து நின்றோம் ப்ரேமையால்!(அன்பாலே)

புடம் நிறை மாற்ற றியாப்
பொன்னே! சொல்! ஏன் ஜாலம்?
போனால் வராது இது போலே
காலம் இனி... (அன்பாலே)

— *தெய்வப்பிறவி*

## மாலைசூட வந்தேன்

மாலைசூட வந்தேன் மல்லிகா
மாசில் குசேலன் உந்தன் நேசன் மாமண (மாலை)

சீலமிகுந்திடும் வானோர்க்கும் சிறந்து தோன்றும்
ஜெனனம் பலகோடியில் தேர்ந்திடத் தகுந்தோன்
மால்பெரும் மானிடனாகவும் பிறந்தேன்
மதிகுலாவு புவி மாமறையோன் (மாலை)

காதலின் கலையைக் கருத்துணர் பூமான்
கன தன பாக்கியம் தனிலும் சீமான்
ஆதரவாய் மணம் அடைந்திடுங் கோமான்
அழகு வாய்ந்த திருமாதுனையே (மாலை)

— *குபேரகுசேலா*

## ஆட வந்த ஓடம்!

மழையைத் தாங்கும் முகில் குழலைத் தாங்கும் — உந்தன்
வதனம் போன்றது சந்த்ரோதயம்! — புருவச்
சிலையைத் தாங்கி நுதல் பிறையைத் தாங்கி — இதழ்
பவளந் தாங்கி நின்ற ஓவியம்! — நீ. (மழையை)

அழகைத் தாங்கி வந்த பீடமோ? — மாறன்
அணியும் ரத்ன மணிக் கிரீடமோ — காதல்
கலையை யோதும் பள்ளிக் கூடமோ? — இன்பக்
கடலில் ஆடவந்த ஓடமோ! (வானில் மழையைத்)

உந்தன் — விழியைக் கண்டு மான்கள் அடவிக்குள்
மறைந்து சென்றதோ! — பல்லின்
எழிலைக் கண்டு முத்துக் கடலில்
சிப்பிக்குள் புகுந்து மறைந்ததோ!

பட்டுப் பாதம் பூமி
பட்டு நிற்பதாலே வலிக்குமே! — அதைப்
பார்த்துக் கொண்டிருந்தால்
பாவம் என்னை வந்து பிடிக்குமே! — கண்ணே!
பக்கமாக இங்கே வந்திடு! — அந்த
வெட்கம் தன்னைக் கொஞ்சம் மறந்திடு! (வானில் மழையைத்)

கட்டில் மெத்தை மீது வந்து அமர்ந்திடு! — நேரம்
பக்குவந் தெரிந்து நடந்திடு!
அன்னத்திற்கு நடைதன்னைப் பயிற்றிடும் அன்னமே! — இன்று
அமிர்தயோகமென்று அறிந்துகொள்ள வேணும் சொர்ணமே!

(வானில் மழையைத்)

## அன்னநடையில் ஒரு சின்னநடை!

அன்ன நடை தனிலே
சின்ன நடை தான்கலந்தே
முன்னாலே போகுதடா
முத்துப் பல்லுச் செவலக் கண்ணு — நன்னானே — நானே

தண்டட்டிக்கு மேலட்டிக்கு
தங்கந் தயிலாளே — நல்ல
சலங்கே மாலை சலசலங்குது
பொன்னுங் குயிலாளே — ஹை — (தண்டட்டிக்கு...)

கண்டவர்கள் மெய்மறந்து
கருத்துங் கலங்கிடவே
கொம்புகளை யாட்டிக்கிட்டு
கொஞ்சு நடை போடுதடா

சந்தனச்சாலை யோரத்திலே
சாயங்கால நேரத்திலே
ஜாடையாக நாம காட்டும்
சமாச்சாரம் புரியலே
நன்னானே - நானே - (தண்டட்டிக்கு...)

பின்னாலே வரும் வண்டியே — கடைக்
கண்ணாலேதான் பாக்குது;
கன்னாபின்னான்னு காடுமேடு
கல்லிலும் முள்ளிலும் நடக்குது;

தன்னாலே இது தவிக்குது — நல்ல
தடம்விட்டுத் தடம் கடக்குது;
சொன்னா ஆளை மொறைக்குது — துடி
துடிக்குது சும்மா வெடைக்குது:
நன்னானே - நானே - (தண்டட்டிக்கு...)

## தேனில் சீனி கலந்த பொம்மை!

ஆண் : சிங்காரப் பொம்மெ! — என் சிங்காரப் பொம்மெ! — செந்
தேனதிலே வெண்சீனிகலந்து செய்தானோ பிரம்மன்?
உன்னைச் செய்தானோ பிரம்மன்?

பெண் : மச்சானே வாங்க யெம் மச்சானே வாங்க — உம்மெ
மனுஷனாகவே மதிச்சாப் பாவம்!
அவதாரம் நீங்க — ஏதோ
அவதாரம் நீங்க!

ஆண் : முன்னழகும் பின்னழகும் முகத்திலே ரெண்டு கண்ணழகும்
முடியழகும் சடையழகும் முப்பத்திரண்டு பல்லழகும்
நடையழகும் இடையழகும் நாக்கு மூக்கு வாக்கழகும்
இன்னம் மற்றதெ யெல்லாஞ் சொல்லட்டா
இதோட விஷயத்தெ நிறுத்திக் கொள்ளட்டா (சிங்கார)

பெண் : பொண்ணெத் தவிரப் புகழ்ந்து பேச
மண்மேல் ஒண்ணுங் கிடையாதா?
கண்ணுக் கழகாம் கடவுள் சிருஷ்டியை
எண்ணிப் பார்க்கவும் கூடாதா? (மச்சானே)

ஆண் : பொம்பளைக்கிணெ பொம்பளெதான்
புலவோர் சொன்னதும் இதையேதான்,
புராண காவிய நூல்களெப் பாரு!
புதுசா வருகிற நாவலெப் பாரு!
காணும் சித்திரக் கலைகளைப் பாரு!
கல்லால் சிற்பச் சிலைகளைப் பாரு!
இன்பப் பொருளாய் சக்தியானதாய்
எங்கும் நெறஞ்சது அதுவே நீதான்! (சிங்கார)

பெண் : படிச்சது நல்லாத் தெரிஞ்சுது — நீ
பாசாகாததும் புரிஞ்சுது
கொடுக்கணும் இதுக்கே ஒனக்கே ஏதாச்சும் ஒண்ணும்
கையிலில்லையே என்னசெய்வது? (மச்சானே)

## இருவர் ஒன்று பெறுவோம்!

பெண் : அறிவாளி உனைமுன்பு நானே — வீணில்
அவமாக மனம் எண்ணினேனே!
மண்ணில் சிறுபேதை எனையே பூமானே —
வாராய்...
எந்த நாளுமே நாமே!
இருவரொன்று பெறுவோமே
இருவரொன்று பெறுவோமே!
இணைந்த அன்பினால் இனிமேல் (எந்த)

ஆண் : இணைந்த அன்பினால் இனிமேல்

இன்பலோகம் நீதானே
இணையிலாத எழில்மானே
இணையிலாத எழில்மானே
இகத்தின் பாக்யம் அடைந்தேனே (இன்ப)

பெண் : மனமாகிய கோவிலில் வைத்து
மகிழ்வுகொண்டு உனைச் சேவித்து
மதுவார் மலர்மாலைசூடி
வணங்கிடுவேன் பதமேபாடி (எந்த)

கண்மூடும் நேரம் மாங்காய்ச்செடியும்
காயும் கனியாம் உன்னாலே
காணும் நாழிகை மூணேமுக்கால்
ஆனால் மறையும் தன்னாலே
எண்ணிப்பாரு இதுவெல்லாம் பொய்யே
எதுக்கும் உதவாதே.... மாயப்

பில்லி சூனியம் செய்வார் தமக்குப்
பெண்சாதி பிள்ளையும் தக்காது
பித்தலாட்டமே ஆனது செப்படி
வித்தைகள் எல்லாம் வெறும் சூது
நல்ல காரியம் எதுவும் அதனால்
நடைபெற முடியாதே. (மாய)

## ஆணுக்கொரு பெண் பெண்ணுக்கொரு ஆண்

ஆண் : ஆணுக்கொரு பெண்பிள்ளே
பெண்ணுக்கொரு ஆண்பிள்ளே
வேணும் வாழ்வில்!
இல்லாவிட்டாச் சுகமில்லே!
வாழ்வில் வேணும் — இல்லாவிட்டாச் சுகமில்லே. காணும்
என்னைப் பார்த்துக் காப்பி யடிச்சுக்கோ! (காணும்)

பெண் : என்ன எப்படிச் செய்யணும்...?

ஆண் : கட்டழகனாக ஒரு ஆளெப் புடிச்சுக்கோ
கல்யாணத்தை முடிச்சுக்கோ
காதல் கலையைப்படிச்சுக்கோ
வேணும் — இல்லாவிட்டாச் சுகமில்லே வாழ்வில்
வேணும் — இல்லாவிட்டாச் சுகமில்லை.

பெண் : ஆம்பிள்ளே வாசம் ஐயோ
ஆகாது மோசம்.

ஆண் : அல்லி ராணி போலே நீ
சொல்லாதே! தள்ளாதே!
ஆம்பிள்ளெ வாசம்
அதுபோலுண்டோ? சந்தோஷம்?

பெண் : பாம்பைக்கண்டு பயந்தொடுங்கும் தவளையைப் போலே — சில
பாவையரை ஆடவர் முன் கண்டேன் கண்ணாலே
படிப்பிருந்தாப் பணமில்லே! பணமிருந்தாக் குணமில்லே
குடித்தன முறை பழக்கமில்லே வழக்கமில்லே
ஆகையாலே (ஆம்பிள்ளெ)

— *மருமகள்*

## காதல் — காதில் இனிக்கிறது!

பெண் : காதல் எந்தன் மீதில் என்றால்
காதல் இனிக்கிறது — தாலி
கட்டிக் கொள்ளத் தட்டிக் கழித்தால்
கவலைப்படுகிறது — மனது —
கவலைப்படுகிறது!

ஆண் : கட்டிக் கரும்பே! கனியே! உன்னைத்
தட்டிக் கழிப்பேனோ? — நேரம்
காலம் பார்த்து முறையாய்ப் பெண்ணும்
கேட்டுக்க வேண்டாமோ? — நாளும்
பாத்துக்க வேண்டாமோ? (காதல்)

பெண் : காலம் நேரம் கடந்தால் இனிமேல்
உனக்கு நானில்லை — அன்பே!
வேலி போட்ட நிலம் போலக் காக்கத்
தாலி போடோணும் — கழுத்தில்
மாலை சூடோணும்!

ஆண் : எண்ணம் போலே எல்லாம் நடக்கும்
எதுவும் தப்பாது — இனிமேல்
எதுவும் தப்பாது — இன்னும்
என்ன என்ன வேணும் கேளு
என்னை இப்போது — நீயும்
என்னை இப்போது! (காதல்)

பெண் : வீட்டைக் கட்டிக் குடித்தனம் நடத்திப்
பாத்துக்க வேணும்
பட்டினில் மெத்தை கட்டில் அங்கே
போட்டுக்க வேணும்!

ஆண் : முகத்துக்கு மேலே முகத்தை வச்சு
ஒண்ணு கொடுக்க வேணும்
கொடுத்ததைத் திருப்பி
எடுக்க வேணும் — பிறகு
தொட்டில் போட வேணும் —
குழந்தையைத் தூங்க வைக்க வேணும்
நீயும் பாட்டுப் பாட வேணும்! (காதல்)

— ***விவசாயி***

## மஞ்சள் வெயில் மாலையிலே...

ஆண் : மஞ்சள் வெய்யில் மாலையிலே
வண்ணப் பூங்காவிலே
பஞ்சவர்ணக் கிளிகள் கொஞ்சும்
பரவசம் பார்!

பெண் : அஞ்சுகத்தின் பாஷையிலே
ஆணும் பெண்ணும் பேசயிலே
ஆனந்தக் காட்சி யங்கே
காணுது பார்!

ஆண் : செண்பகத்தின் மேனியிலே
தென்றலது மேவி
அன்போடு முத்தாடும் சல்லாப
அழகினைப் பாராய்

பெண் : ஒன்றுபடும் காதல் சிங்காரம்
ஒற்றுமையைப் பார் இந்த நேரம்
இன்பரச வாழ்க்கை வைபோகம்
என்றும் நமதாகுமே — (மஞ்சள்)

ஆண் : நினைத்தாலும் பார்த்தாலும்
இனிக்கும் அன்பே! நிஜமாகவே

பெண் : ஆ..?
மனத்திலே நான்...

ஆண் : மனக்கோயில்தனில் வாழும் மகாராணியே என்(என்)
உனக்காக நான்

பெண் : ஊம்!
எனக்காக நீ....

ஆண் : கனியது உருமாறி வந்ததுபோல் கண்ணே!
கண்காணும் காட்சி நீயல்லவோ?

பெண் : துணையாக எனையாளும் சுவாமியன்றோ?
சொந்தம் இனிமேல் இருவருமே
இணைபிரியாச் சதிபதி நாம்!

இருவரும் : மஞ்சள் வெய்யில் மாலையிலே
வண்ணப் பூங்காவிலே
மாறாத ப்ரேமை கொண்டே
மகிழ்ந்திடுவோம்!....

— *காவேரி*

## ஒன்றாய் வாழணும்! நன்றாய் வாழணும்!

அன்பினால் என்றும் நீங்கள்
ஒன்றாய் வாழணும் — ஓர்
ஆயிரம் காலம் சேர்ந்து
நன்றாய் வாழணும்!

அன்பினால் மேவும்
சொந்தமாய் என்றும் — நீங்கள்
ஒன்றாய் வாழணும்!

கொண்டவரை உள்ளம் என்னும்
கோயிலுக்குள் வைக்கோணும்!
கொழுந்தனைத் தானே பெற்ற
குழந்தையாக நினைக்கணும்!
பந்து ஜனம் எல்லோருக்கும்
பட்சமாக இருக்கணும்!
பர்த்தாவைப் பெற்றோர் தம்மைப்
பாதுகாத்து மதிக்கணும்!

அன்பினால் கண்ணே! சொந்தமாய் என்றும் — நீங்கள்
ஒன்றாய் வாழணும் — ஓராயிரம் காலம் சேர்ந்து
நன்றாய் வாழணும்!

இன்ப துன்பம் ஏதானாலும்
பங்குடையாள் சம்சாரம்
இல்லாளும் இல்லா வீட்டில்
ஏற்படாது அலங்காரம்;
அம்புவியில் ஆணில் பாதி
பெண்ணென்பது நீதிசாரம்!
அறிந்துநட தம்பி இருவரும்
ஒருவருக்கொருவர் ஆதாரம்!

அன்பினால் என்றும் நீங்கள் ஒன்றாய் வாழணும் — ஓர்
ஆயிரம் காலம் சேர்ந்து நன்றாய் வாழணும்!

தந்தை தாயின் பேருக்குன்னால்
தாழ்வு வர நடக்காதே!
சம்பத்து வந்தாலும் — நீ
தற்பெருமை யடிக்காதே!
சந்ததமும் கணவன் சொல்லைத்
தடுத்துமுகம் சுளிக்காதே!
சமயம்தான் கிடைக்கும் போது
தலையணை மந்திரம் ஜெபிக்காதே!

அன்பினால் கண்ணே!
சொந்தமாய் என்றும் நீங்கள்
ஒன்றாய் வாழணும்!

— *பொம்மைக் கல்யாணம்*

## சந்திரோதயம்

சந்திரோதயம் இதிலே காணுவதும்
செந்தாமரை முகமே ஆனந்தம்! (சந்த்)

சந்தோஷம் தானடைந்தேன் யானும் — மனச்
சந்தோஷம் தானடைந்தேன் — வானுலவும்
அந்தம்பொலிந்தமுது சிந்தும் கலை நிறைந்த (சந்த்)

பாந்தம் மிகும் பசுவிலே உயர்சாந்தம் தோன்றுவதுன்
சாந்தம் கடவுள் தன்மை சார்ந்தும் விளங்கும் ருது (சந்த்)

தோய்ந்த மருமலரிலே மது(தோ) உனது நகை
வாய்ந்த அழகினை ஆராய்ந்தேன் அது நீயாகும் (சந்த்)

## மனக்கோயிலில் ஒரு சிலை!

ஆண் : செந்தா மரை மனக் கோட்டையில் நானொரு
தேவியின் சிலையமைத்தேன் — என்
சேம லாப சுக வாழ்வில் அவளே
செல்வமாக நினைத்தேன் — நான் (செந்தாமரை)

பெண் : தாமரை மனக் கோயிலில் நானொரு
சாமியைக் குடிவைத்தேன் — என்
தந்தை தாய் முதல் சகலமும் அவராய்ச்
சந்தோசம் படைத்தேன்! (தாமரை)

ஆண் : அறிவுத் தந்தையும் அழகு அன்னையும்
உறவு கொண்ட கருவாம் — நல்ல
அச்சம் நாணம் மடம் பயிர்ப்புப் பெண்மையாய்
அங்கங் கொண்ட திருவாம் — என் (செந்தாமரை)

பெண் : கருணை ஈகை யருள் கடமையாம் உடமை
பொறுமை யாவு மொன்று
கலந்ததோ யெனக் கவிஞர் கற்பனை
காட்டும் ஞானக் குன்று — என் (தாமரை)

ஆண் : இன்பமாகிய கடலிலாடிட
இசைந்த தங்க ஓடம் — நல்ல
இல்லறந்தனை நல்லறஞ்செய
இணைந்த தேவி சேடம்

பெண் : பொன்னைச் சார்ந்த நவமணிகள் மின்னிடும்
பூடணங்கள் எதற்கு?
என்னை யாள்பவர் அருகே யமர்ந்து
இருந்தாலே யெனக்கு (தாமரை)

## கூட்டுக் கிள்ளையும் வீட்டுக் கிள்ளையும்

ஆண் : நாம,
சொன்னாத்தான் பின்னே சொல்லும்
கூட்டுக்கிள்ளை — அது
காட்டுக்கிள்ளை — நீ.
சொல்லாமெப் புரிஞ்சுகொள்ளும்
வீட்டுக்கிள்ளை — தமிழ்
நாட்டுக்கிள்ளை.

பெண் : நீ
பள்ளியில் படிப்பதிலே
சிங்கக்குட்டி — இளஞ்
சிங்கக்குட்டி — சேர்ந்து
பழகுவதில் பத்தரைமாத்துத்
தங்கக் கட்டி — பசுந்
தங்கக் கட்டி (நாம)

ஆண் : பெண்ணை
வாசமுள்ள பூவென்று
சொல்லுவாங்க — பலர்
சொல்லுவாங்க — நாஞ்
சொல்லமாட்டேன்!

பெண் : யேஞ் சொல்லமாட்டே?

ஆண் : விசு
வாசமதில் இல்லை என்று
தள்ளிப் போட்டேன் — ஒதுக்கித்
தள்ளிப் போட்டேன்.

பெண் : ஆணை
அருச்சுனன் என்று கூடச்
சொல்லுவாங்க — யாரும்
சொல்லுவாங்க — உன்னை
அப்படி நான் ஒப்பிட்டுத்தான்
சொல்லமாட்டேன்

ஆண் : யேஞ் சொல்லமாட்டே?

பெண் : அவெ
உருப்படியா ஒருத்தி யோடு
வாழ்க்கை நடத்தலே — குடும்ப
வாழ்க்கை நடத்தலே — அந்த
ஊரை மேச்ச அருச்சுனனை
எனக்குப் பிடிக்கலே!

ஆண் : கடவுள்
புத்தியெல்லாம் சேர்த்து வச்சு
பொண்ணைப்போலே — சின்னப்
பொண்ணைப்போலே — உன்னை
யுக்தி பண்ணி படைச்சுப் பிட்டான்
கண்ணைப் போலே

உனக்கு
சந்தோஷந்தான் உண்டாக்க நான்
பார்க்கறேன்.

பெண் : அது
எந்தக் கடையில் விக்கிற தின்னு நான்
கேக்கறேன் — மேலும் நான்
கேக்கறேன்.

ஆண் : அது
வாங்கறதல்ல, விக்கிறதல்ல
தெரிஞ்சிடு (கடையில்)

பெண் : நான்
வான்னு சொன்னா இப்போ
இங்கே வந்துவிடும்

ஆண் : எங்கே வரச்சொல்லு

பெண் : சொல்லட்டுமா

ஆண் : சொல்லு

ஆண் : உன்னை
வருணிச்சுத்தான் கவிதை யொண்ணு
பாடவேணும் — அதுக்
கென்னவேணும்?

பெண் : எனக்கொண்ணும் வேண்டாம்

ஆண் : அட, என்ன வேணும்

பெண் : உங்க
வாயைக் கொஞ்சம் மூடிக்கிட்டு
இருக்க வேணும்!

## பக்கம் வா!

ஆண் : பக்கம் வந்தா நல்லா யிருக்கும் — வா!

பெண் : யாரும்

பார்த்துக் கிட்டா நல்லா யிருக்குமா? — இதப் (பார்த்துக்)

வெள்ளங் கொண்டு போகாதுங்க
கேணித் தண்ணீரு — நீங்க
வேணுமுண்ணாச் சாப்பிடலாம்
இப்பத் தயாரு! அடி!
சக்கரக் கட்டி ஜவ்வாது — நம்ம
தனிக் குடித்தனம் எப்போது?

பெண் : நீங்க

அக்கரைப் பட்டா அப்போது — இல்லே
இப்போச் சொன்னா இப்போது!

ஆண் : அப்படிச்சொல்லு! அதாங் கேட்டே!

வெட்கப்பட்டுக் கொள்ளாதே
விலகி விலகித் துள்ளாதே!
அக்கம் பக்கம் யாருமில்லே
அத்தான் தா பரவாயில்லே! (பக்கம்)

## எனக்கென்ன பஞ்சம்?

எனக்கென்ன பஞ்சம்? — இன்பத்திற்கு
எனக்கென்ன பஞ்சம்?
எனக்கென்ன பஞ்சம் இன்பத்திற்கு
எனக்கென்ன பஞ்சம்?

ஆண் : வெண்ணிலாவும் குடை விரிக்குது
வேனில் காற்று சிறகடிக்குது
வண்ணமலர்கள் பாய் விரிக்குது
வயது வந்தது பக்கமிருக்குது. (எனக்)

பெண் : பூங்கொடி செடி மறைப்பிருக்குது
புதிய மணலு விரிப்பிருக்குது
பாங்கினியற்கை வனப்பிருக்குது
பருவக்காளை பக்கமிருக்குது. (எனக்)

ஆண் : அமுதத் தமிழின் மொழியிருக்குது
அதுக்குத் தகுந்த கிளியிருக்குது
சமயங்கூட அமைந்திருக்குது
தன்னால் அதிஷ்டம் முன்னால் நிக்குது (எனக்.)

பெண் : ஆசைத் தெய்வம் பேச நின்றது
அன்பில்இன்பம் தேட வந்தது
பூசித்த பயன் உருவமாச்சுது
பொண்ணுக்கேத்த புருஷன் வாச்சது. (எனக்)

## நாணம் நகையில் ஒண்ணு!

ஆண் : நான் நெனச்சது உனக்குந் தெரியும்!
பெண் : நீ நெனச்சது எனக்குந் தெரியும்!
ஆண் : நாணம் நம்ம நாடகத்தே தடுக்கிறதுந் தெரியும்!
பெண் : நாணம் நகையில் ஒண்ணு அதைப்
பூணுகின்றவள் பொண்ணு —

ஆண் : அது ஆணும் பெண்ணும் அணுகும் போது
அடங்கிடும் கம் முண்ணு. (நான்)

மரிக் கொழுந்துப் பந்தலிட்டு மல்லிகைச் சரம் தொங்கலிட்டு
அருகம் புல்லுப் பாய் விரிச்சு அடுத்ததென்ன நீ சொல்லு (நான்)

## விழி வாசலில் வெளிவந்த இதயம்

பெண் : வெண்ணிலாக் குடைபிடிக்க வெள்ளிமீன் தலையசைக்க
விழிவாசல் வழிவந்து இதயம் பேசுது!

ஆண் : இனி நீ என் வசமே! இணையாய் நாம்
காணும் ஆனந்தம் நேசமே! (வெண்ணிலா)

கொல்லாமல் கொல்லுகிறாய்
கோமளமே விழியாலே!

பெண் : சொல்லாமல் சொல்லுகிறாய்
சுத்தத் தமிழ் மொழியாலே! .... ஆ... ஆ....

ஆண் : ஒண்ணுமே புரியலையே

பெண் : எண்ணமே சரியில்லையே

ஆண் : சரியாக இதுவேளை தனிமை வேணுமே!

பெண் : பழமும் பழுத்திருக்க பருவம் அமைந்திருக்க
பசிநோய் தீராமல் பார்த்தாலே போதுமா?

ஆண் : எல்லாம் தெரிந்து கொண்டான் இதயமுள்ள
சொக்கனுமே
உல்லாச மாயிருக்க யோசனைக்கு
இடம் கொடுப்பாய் ... ஆ... ஆ

பெண் : எழிலின் இருப்பிடமே! எனக்கில்லை மனத்திடமே!

ஆண் : எளியேன் மேலின்னும் ஏனிந்தக் கோபமே? (வெண்ணிலா)

*— அபலை அஞ்சுகம்*

## அன்பில் விளைந்த அமுதம்!

### பல்லவி

அன்பில் விளைந்த அமுதமே!
அன்னமே! என் கண்ணகி...!

### அநுபல்லவி

கன்னல் தெளிதேன் பாகு சீனி
கனியும் சேர்ந்த கற்கண்டாம் உன் மேனி! (அன்பில்)

### சரணம்

காணும் கலை நீ! கலாப மயில் நீ!
காதல் உலகக் கடலும் நீயே!
மானி நீ! என் மா தவம் நீ!
மாசில்லாத இல் வாழ்வில் நலம் நீ! (அன்பில்)

*— கண்ண*

## எண்ணத்திலே பேதம் உண்டு

ஆண் : சொந்தமாக நெனைச்சு நானும்
தொட்டுப் பார்த்தேன்!
சொந்தமாக நெனைச்சு நானும்
தொட்டுப் பார்த்தேன்!!

பெண்: நீ தொட்டதாலே மதிப்பு மானம்
கெட்டுப் போச்சு! — கற்பு
கெட்டுப் போன பெண்ணை
யாரு கட்டுவாங்க?

ஆண் : ஏம்மா உன்னை,
அண்ணன் தம்பி தொடலையா? — உங்க
அப்பா தொடலையா? — உங்க
அம்மா கூடப்பொறந்த மாமன்
தொடாமெத்தான் வளந்தையா?

ஆம்பளை தொட்டா
பொம்பளை கெட்டுப் போகுமா?
அனுபவத்துக் கது
பொருத்தமான தாகுமா?

பெண்: அண்ணந்தம்பி அப்பாவுக்கும்
அடுத்தவங்க தொடுவதற்கும்
எண்ணத்திலே பேதமுண்டு புரிஞ்சுதா? — இனி
இப்படியெல்லாம் செய்யப்படாது தெரிஞ்சுதா?

— *வனசுந்தரி*

# அன்பே என் ஆருயிரே!

ஆண் : அன்பே யென்னாருயிரே! அங்கு நிற்பதேனோ?
யாருமில்லா வேளையிலே இந்த வெட்கமேனோ?

பெண் : இன்பமாம் ராஜபோகம் ஏழைக் கேதுஸ்வாமி?
இருவர் நாளும் உறவுகொண்டால் ஏற்குமோ இப்பூமி?

ஆண் : அரசனென்றாலும் ஆண்டியென்றாலும்
மருவிய காதலிலே பேதமுண்டோ?

பெண் : ஆசையினால் பேசும் வாசகமா? நிஜமா?
அன்பாலென்றும் ஒன்று சேருமா?
சந்தோஷந் தீர்ந்தால்பின் மாறுமா?

ஆண் : கற்ற கலை ஞானமென்னும்
கடவுள் மீதில் ஆணை
கனவிலும் என் நினைவிலும் நான்
கைவிடேனே மானே

பெண் : வெற்றியும் நீரே வீரமது நானே
உற்றதுணை நாமேதான் உலகினிலே.

ஆண் : வேண்டுமென் பாக்க்யமெல்லாம் வேல்விழி நீயல்லவோ?

பெண் : வேண்டாத வீண் புகழ்ச்சி வேணுமா?

ஆண் : கண்ணே இன்னுங்கூட நாணமா?

பெண் : அன்பே யென்னாருயிரே
அறிவொடு நாமே!

ஆண் : என்னைவிட்டு எங்கே போனே மானே?
இன்பதுன்பம் இருவகையில் இசைந்து வாழுவோம்!!

— *காவேரி*

## கரும்பும் எறும்பும்

ஆண் : ராசாக் கண்ணு ரோசாப் பூவே! — கொஞ்சம்
ஆசையாய்ப் பேசலாம் பக்கம் வா வேய்யே (ராசாக்கண்ணு

பெண் : ஆசையோடு நீங்க பேசணுமுன்னா — அதை
அல்லாண்ணு மறுத்துச் சொல்லவா கண்ணா (ராசாக்கண்ணு

ஆண் : நீ இன்பரசம் தங்குகின்ற இளங்கரும்பு — நான்
அன்பு வழியாய் உண்ண வந்த எறும்பு!

பெண் : கவியழகுக்கு பேசுவீங்க குறும்பு — வேணாம்
கரும்பைக் கடுச்சுப் புடும் எறும்பு! (ராசாக்கண்ணு)

ஆண் : நல்ல வாசனை வீசு மலர்மீது புரண்டு — விசு
வாசமொடு தேனை உண்ண எண்ணுது வண்டு!

பெண் : பூத்த நறு மலரைக் கேட்டிருக்குமா — வண்டு
பார்த்துப்பிட்டுத் தேன் உண்ணக் காத்திருக்குமா?
(ராசாக்கண்ணு)

ஆண் : வட்ட நிலவு முகத்துக்குள்ளே — சின்னக்
குட்டி நிலவு எங்கெ வந்தது?

பெண் : என் இஷ்டமூர்த்தி நெற்றி மேலே
பொட்டு வைக்கும் தினுசாய் ஒட்ட வந்தது! (ராசாக்கண்ணு)

## சொல்லுங்க மச்சா(ன்)!

அழகை யெல்லா ஒண்ணு சேத்தி ஆண்டவ
உன்னெப் படச்சா — அதுக்கு
அறிவை யெல்லா ஒண்ணு சேத்தி அளவு வச்சு
என்னெப் படச்சா
இரண்டு பேரையும் ஏம்படச்சா? — அதை
என்னாத்துக்குண்ணு சொல்லுங்க மச்சா!

## வனதேவ ராஜகுமாரா!

பெண் : வனதேவ ராஜ குமாரா!
எனதாசை ஆருயிர் மாரா!
புகழ்மாலை சூடிடும் வீரா!
புதுவாழ்வு தேடிட வாராய்!!

ஆண் : வனதேவ ராஜ குமாரி!
மதிமேவும் ஆருயிர்ப் பாரி!
மணவாழ்விலே சுகங்கோரி!
உனைநாடினேன் மையல் மீறி!!

பெண் : வாடாத மருக் கொழுந்தே!
வாசமுள்ள பூங்காவே!
தேடாமலே வந்த திரவியமே!
தீட்டாத இயற்கைச் சித்திரமே!! (வனதேவ)

## எனக்கு வாய்த்த உயிர் ஓவியம்!

எனக்கு வாய்த்தது நல்ல உயிரோவியம் — அதற்கு
எழுதினால் தகும் இன்ப ரச காவியம்! (இப்ப)

கொடுத்து வைத்தவ இன்று நானல்லவா? — முகக்
குறிப்பில் காணலாம் அதைத்தான் சொல்லவா? — கை (கொடுத்து)

இனிக்குந் தமிழ்போல இளமை மாறாதது — என்
இதய பீடத்தை விட்டு நீங்காதது! (இப்ப)

செடிவளர்த்து மலரெடுத்துச் தெய்வப் பூசனை நான்
செய்ததாலே வந்ததிந்த ஜென்ம வாசனை; — அருள்
வடிவெடுத்து வந்தசர்வ குணநேசனை — இக
வாழ்க்கை மலரக் கொண்டேன் எனக்கேன் யோசனை? (இப்ப)

## ராஜாமகள் ராணி!

ராஜா மகள் ராணி — புது
ரோஜா மலர்மேனி
பேஷான ஒரு மாமி
வரப்போறாள் பாரு நீ (ராஜாமகள்)

சீனிக் சக்கரைக் கட்டி — வாய்
சிவந்த பவளப் பெட்டி — அவள்
சிரிச்ச முகத்துச் சிங்காரக் குட்டி
உன்போல் படு சுட்டி (ராஜாமகள்)

வக்கணைப் பேச்சுக்காரி — விழி
வாளின் வீச்சுக்காரி — சுகவாரி
அலங்காரி சுகுமாரி எந்தன்பாரி! (ராஜா மகள்)

வீணை மீட்டி அவள் பாடுவாள் உடன்
விதவிதமாக நீயும் ஆடலாம்;
வேடிக்கை பல செய்வாள் — உன்னை
விருப்பமாக வைவாள்; வேண்டுவாள்,
உன்னை மின்னே பொன்னே கண்ணேயென்பாள்! (ராஜா மகள்)

— *சொர்க்க வாசல்*

## காதலா! சாதலா!

காதலா உன் கடமை யாது சாதலா?
கலையானதுன் செயலால் கெடல் ஞானமா?
அழகு மேனி ஆசையாலே அழிவு தேடல் அவசியமா?
அருளாகிய குருநேர் சொன்ன நெறி மாறுதல் யோக்கியமா?
(காதலா)

உனதிசையாம் உணவை நாடும்
உலகமிதனைப் பாருமே!
உதார குணம் இதா எனது
உயிரே பதில் கூறுமே! (காதல்)

காணும் போது நாணந் தோணும்
காதலின் கலையே — அதற்
கேதும் ஈடிலையே! (காதலா)

## வட்ட நிலாவுக்குள் குட்டி நிலா

பட்டப் பகல் தனிலே — தங்கமே
வட்ட நிலாவைக் கண்டேன் — அந்த
வட்ட நிலாவுக் குள்ளே — தங்கமே
குட்டி நிலாவும் கண்டேன்!

குட்டி நிலா முடிமேல் — தங்கமே
கொண்ட லுலாவக் கண்டேன் — நிலவில்
ஒட்டிய செஞ்சிலைகள் — தங்கமே
ஒப்பனை மீன்கள் கண்டேன்!

மொட்டு முல்லைச் சரங்கள் — பவளப்
பெட்டிக்குள் சேரக் கண்டேன்;
கட்டழகே சிலைமேல் — எழிலைக்
கற்பனை செய்து கண்டேன்!

கொல்லன் உலைதனிலே உருகாக்
கோமளப் பொன் சிலையோ?
வல்ல தமிழ்ப் புலவோர் புகழும்
வஞ்சி இவள் வடிவோ?

## தேவமகள் இவள் யார்?

தேவமகள் இவள் யார்? — இவள் யாரோ?
தேனின் மொழியாள் தென்றலின் ஒயிலாள்
பூவிலயன்மால் புரமெரித்தோனும்
யாவரும் மயங்கும் மோஹினி தானோ?
லோக மோஹன யோகினி போலே
ஜாடை காட்டும் அன்னப்பேடையன்போடு
கூடிக்குலாவும் அந்நாளும் எந்நாளோ?

— *கண்ணகி*

## மனங்கொண்ட மாப்பிள்ளை

மனதினில் நான்கொண்ட மாப்பிள்ளை வாய்த்தார்
வாழ்க்கையில் வேறோர் பாக்கியம் உண்டோ...? (மனதினில்)

கனவினில் நான் கண்டு களிப்புறும் விசுவாசன்
காசினியோர் துன்பம் காணாத குணநேசன்
மணமகன் விஜயனே மாப்பிள்ளை யென்றால்
வாழ்க்கையில் வேறார் பாக்கியம் உண்டோ...

மதிகுலாவு மெழில் சுந்தரி — யென்
மல்லிகா விபரம் நீதெரி
இது தினம் சபையில் தந்தையார்சரி
என்றார் உறுதியாய் அதனாலெனதொரு (மனதினில்)

அவரும் நானும் தனித்திருந்தால் நீயும்
அங்குமிங்கும் ஓடிக்குதிப்பதுங் கூடாது.
தவறேதும் புரியாமல் சந்தோஷம் குறையாமல்
சமயங் கண்டே நடக்கவேணும் முறையோடு.

ஸாரீம, பநிபமநிநிப, மகமநிதா, மநிபமகம,
காரிஸநி ஸரி காமா, த நிரி நி பமகம காரி,
கமநி பாம கரிஸரி நீஸரீம பாநிமப
மாபநீரி நிஸ ரிஸாநிப கமநிதா மாப கரி

யெனவரும் சரளிபாடி அவரோடு
நடனமாடி மகிழ்வது பெற (மனதினில்)

— *காவேரி*

## காதல் ஆட்சி!

உழைப்பினிலே பழக்கத்திலே ஒன்றுபட்ட
இன்பக் காதல் தன்னாலே — அவர்
உடல் நிழலாய் வாழ வந்தார் மண்மேலே!

பாத்தியிலே நீர் பாய்ச்சும் பாவையைப் பாரீர்! — அதைப்
பாத்துக் கணவன் ஏத்தம் இறைக்கும்
நேர்த்தியைப் பாராய்!

ஆத்துக்குள்ளே ஆடை துவைக்கும் அழகியைப் பாரீர் — அவள்
அருகில் நிற்கும் உரிமை கொண்டான்
ஆனந்தம் பாராய்!

காணும் காட்சியே! காதல் ஆட்சிதான்!!

சாரசம்... வசீகரக் கண்கள்!

சாரசம்... வசீகரக் கண்கள் சீர்தரும்
முகம் சந்த்ர பிம்பம்
மனோகர ஓவியப் பெண்ணாள்
வாய்த்தால் பேரின்பம் சுவாரஸ்யம்
ஆடும் மயிலாள் அபிநய மொழியாள் — இவள்
அன்பை நாடும் புவிமையலால்
ஈடில்லாத் தேவகுமாரி சிங்காரி — மிகும்
இகாதி சாரசவாரி (சாரசம்)

*— கிருஷ்ணபக்தி*

## பார்த்துக் கொண்டிருந்தால் போதும்

பார்த்துக் கொண்டிருந்தாலே போதும் — உன்னைப்
பார்த்துக் கொண்டிருந்தாலே போதும் — எந்தன்
பக்கத்தில் வைத்தே எப்போதும் உன்னைப் (பார்த்துக்)

வார்த்தையில் அடங்காது வர்ணிக்க முடியாது
வனிதை நின்போல் நீயே! வேறேது?
நேர்த்திகொள் கலைமாதும் மலர்மாதும் மலைமாதும்
நிகரிலாத ஜெகன் மோகினி எழில்தரு — கண்ணம்மா!
தெய்வீகமான உன் ரூபம் (பார்த்துக்)

கனியோ கனியின் ரசமோ நின்கானம்
கேட்டுக் கொண்டிருந்தாலே போதும்;
கலைமயில் நீ ஆடும் ஆடலுக்கே தாளம்
போட்டுக் கொண்டிருந்தாலே போதும்;
மனமது மறவாது மற்றொன்றை நினையாது
துணை கொண்டுமே நேசம் பிரியாது — சொந்தம்
விலகிடாது கண்கள் இமையாது (பார்த்துக்)

கேட்டுக் கொண்டிருந்தாலே போதும்
நிஸதா — மதநீ — பநிதபமகா — மதப கரிஸா
ஸநிதா — நிதநிரிஸா — கானம்
கேட்டுக் கொண்டிருந்தாலே போதும்!

*— சித்தூர் ராணி பத்மினி*

## "உயிரை விட்டிடுவேன்!"

ஊன்னு ஒருவார்த்தை சொல்லம்மா
இல்லேன்னா — உயிரையே
விட்டுடுவேன் — நிஜமாச் சொல்லம்மா
ஊம் — அப்படி இல்லை ஊன்னு சொல்லு

## என்னை விட்டு எங்கே போனே மாமா?

பெண் : ஏழெட்டு நாளாகத் தானே மாமா — நீ
என்னைவிட்டு எங்கே போனே வாமாமா!

ஆண் : போகாத ஊருக்கெல்லாம் போனேண்டி — எம்
பொண்டாட்டியொனை நெனைச்சே வந்தேண்டி!

பெண் : என்னென்ன வாங்கிவந்தே யேமாமா — என்னை
ஏமாத்தாமே எங்கெஇப்படி தாமாமா!

ஆண் : காணாத துணிமணியும் கண்டேண்டி
காசில்லாமத்தா வாங்காமெ நா வந்தேண்டி!

தங்கிட்டிப் புங்கிட்டித் தாந்திமிக்கிட்டி
தங்கிட்டிப் புங்கிட்டித் தை!

ஹை
தாந்திமிக்கிட்டி தங்கிட்டிப் புங்கிட்டி
தங்கிட்டிப் புங்கிட்டித் தை!

அங்கே சுத்தி இங்கே சுத்தி ஐயா புத்தி சரியில்லே!
அதனாலே இங்கேவொரு அம்மா புத்தி சரியில்லே!
அம்மா சும்மா ஐயாவைத்தாம் பார்க்கிற பார்வையும்
ஐயோ இப்பச் சரியில்லே!

தங்கிட்டிப் புங்கிட்டித் தாந்திமிக்கிட்டி
தங்கிட்டிப் புங்கிட்டித் தை!

ஹை
தாந்திமிக்கிட்டி தங்கிட்டிப்புங்கிட்டி
தங்கிட்டிப் புங்கிட்டித்தை!

ராசாவுக்காகவே ரோசாப்பூக் கொண்டு வந்தோம்
நேசமாகத் தருவோமின்னா நேரங்காலம் சரியில்லே!

மன்னவனைத் தேடி மல்லிகைப்பூக் கொண்டு வந்தோம்
மாலையிட்டுப் பார்ப்போமின்னா மார்க்கமொண்ணுந் தெரியல்லே!

சுந்தரனுக்காகவே தோகைமயில் கொண்டு வந்தோம்
சொந்தமாகத் தருவோமின்னா வந்தவேளை சரியில்லை!

முடியாது என்றே எதையும் முயற்சி பண்ணிப் பார்க்காமல்
முன்வைத்த காலை நாமே பின்வைப்பது முறையில்லே!

ஆத்துக்குள்ளே ஓசந்ததெது? — காவேரி!
    ஓசந்ததெது காவேரி — கரை
அழகினிலே சிறந்ததெது? — காவேரி!
    சிறந்ததெது? காவேரி!
சோத்துப் பஞ்சம் தீர்ப்பதெது? — காவேரி!
    பஞ்சம் தீர்ப்பதெது? — காவேரி!
சோழ வளம் தருவதெது? — காவேரி!
    வளம் தருவதெது? — காவேரி!
காவேரி நல்ல காவேரி! இன்பக்
    காவேரி! நம்ம காவேரி!

*— காவேரி*

## எப்படிச் செஞ்சே கடவுளே?

மேலிருந்து பாக்கையிலே
    மினுமினுப்புத் தட்டுதப்பா!
கீழிறங்கிப் பாப்பமின்னா
    கிடுகிடுன்னு நடுங்குதப்பா!

மானிருக்குது கீழே!
    நானிருக்கேன் மேலே!
மனசு நடுவே மாட்டிக்கிட்டு
    அலையுதே தன்னாலே!!

மீனிருக்கணும் குளத்திலே — அது
    மேலே வந்தது என்னத்துலே?
மேயுதப்பா அதோ அந்த
    வெளுத்த நிலா முகத்திலே!

தேனே வடிச்சுப் பழத்திலே
    சேத்து அமைச்ச விதத்திலே
காணும்போது இனிக்கும் உடம்பெ
    எப்படிச் செஞ்சே கடவுளே!

## சம்மதி — நிம்மதி

ஆடுகின்ற மாமயில், பாடுகின்ற பூங்குயில்,
அழகிய பெண்ணைப்பார்!
ஆசை மனமோகனம் வீசுதென்றல் வாகனம்
பேசிடும் கண்ணைப்பார்!
தராதரம் யாவையும் எண்ணிப் பார்;
எனைக் கொஞ்சம் பாராய் சிநேகமாய்,
உனக் கின்பம் தாரேன் அமோகமாய்,
காதல் உணர்வுதான் நிம்மதி — சம்மதி
காணும் உலகில்நாம் இருவரும் சதிபதி
காலம் தவறாமல் சுபகாரியம் செய்குவோம்
கருணை புரிவாய்! (ஆடுகின்ற)

## காதலன் எதிலே வருவான்?

வருவார் வருவாரென்று பார்த்தேன்
வழிமேல் விழிவைத்து உடல் வேர்த்தேன்.
ஒருவார மாகியும் வரக்காணேன் சகியே!
ஒரு நிமிஷம் கூட இனிமேல் சகியேன். — ஸ்வாமி
வருவார் வருவாரென்று பார்த்தேன்!

பொம்பளை மேலே ஆசைப்பட்டவன்
எதிலே வருவாண்டி?
புகை நுழையாத இடத்தில்கூட
புகுந்து வருவாண்டி!
வித்தாரக் கள்ளிக்கு ஆசைப்பட்டவன்
எதிலே வருவாண்டி?
கத்தாழை முள்ளிலே பொத்தல் பண்ணி
அதிலே வருவாண்டி!
சிங்காரக் கள்ளிக்கு ஆசைப்பட்டவன்
எதிலே வருவாண்டி?
சீரகத்தில் பொத்தல் பண்ணி
அதிலே வருவாண்டி!
மேனா மினுக்கிக்கு ஆசைப்பட்டவன்
எதிலே வருவாண்டி? — அவன்
ஆலம் விழுதிலே பொத்தல் பண்ணி
அதிலே வருவாண்டி!

— *நீதிபதி*

## தாரம் — ஆதாரம்

### பல்லவி

பத்தினியே உன் போல் இத்தரை மீதினில்
மற்றவர் யார் புகல்வாய்? — தர்ம (பத்தினி)

### அநுபல்லவி

சத்திய மாகவே தாய்க்குப் பின் தாரம்
தாரத்தினால் அல்லவோ சம்சாரம்! (பத்தினி)

### சரணம்

பந்து ஜனமெல்லாம் வீண் பரிவாரம்;
பாரினில் அவரால் ஏதுப காரம்?
அந்தரந் தனிலும் உதவுவாள் தாரம்;
ஆபத்து வேளையில் ஆகும் ஆதாரம்! (பத்தினி)

*— கண்ணகி*

## நிலவே நிலவே ஆடவா!

நிலவே நிலவே ஆட வா!
நீயன்புடனே ஓடி வா!
மலராம் அரும்பின் எழில் மேவும்
மரகத மணியுடன் ஆட வா! (நிலவே)

நீல வானக் கடல் நிதியே!
நித்தில மணியே! வெண்மதியே!
சீலம் அருளறம் சேரும் குணவதி
சிங்கார நிதியுடன் ஆட வா! (நிலவே)

மண்ணில் அமுதம் சிந்திடுவாய்! — நீ
மழலைக் கமுதம் தந்திடுவாய்!
உன்னில் இவளே உயர்ந்தவள் அதனால்
உல்லாசமாக ஆட வா! (நிலவே)

*— சொர்க்கவாசல்*

## இசையோடு பணி செய்!

பெண் : சங்கீதத்தொடு வேலை செஞ்சாச்
சலிப்பும் இராது — நல்ல
சாப்பாடு முதல் துணிமணிக்குந்
சங்கடம் வராது (சங்கீ)

ஆண் : பொண்டாட்டி யுன்னைப்போலே கெடைச்சாத்
திண்டாட்டம் இருக்காது — நல்ல

பெண் : பூலோகந்தனில் உங்களைப் போலே
புருஷன் யார்க்கும் வாய்ச்சிடாது — நீ
எறப்புக்கூடை யெடுத்துவீச
இடுப்பை வளைக்கும் தினுசு — அதை
எதுக்க நிண்ணு பார்க்கும் போது
எங்கோ போகுது மனசு— நீங்க
சுயத்தைப் புடிச்சு இழுக்கும் போது
கன்னம் செவந்து ஜொலிக்குது — அதைக்
காணும் போது என்னையும் சேர்த்துக்
காந்தம் போல இழுக்குது. (சங்கீ)

## கட்டிய வீட்டைக் காக்கப் பார்!

மனஸ்தாபம் குடும்பச் சண்டை வரக்
கூடாது, வரக்கூடாது;
ஆமாம் வாழ்நாளை வீணாக்கக் கூடாது
— சண்டை வரக்கூடாது;
இஷ்டப்பட்டுக் கட்டும் வீட்டில்
இரண்டுபேரும் வசிக்கணும்;
கஷ்டம் நஷ்டம் எது வந்தாலும்
கட்டிய வீட்டைக் காக்கணும்;
ஒண்ணாகச் சேர்ந்து என்றும்
வாழ்வோமே! (சின்ன)

— *மருமகள்*

## இருவரும் உழைப்பது இல்லறம்

சின்னச் சின்ன வீடு கட்டி,
சிங்கார வீடு கட்டி
பொண்ணு மாப்பிள்ளை வச்சு ஆடுவோமே — நாம்
ஒண்ணு சேர்ந்து விளையாடுவோமே!
ஓ..... ஓ... ஓ.....

ஆண் : சுண்ணாம்பு கல்லு மண்ணால் சுவராக்குவேன் —நானும்
சுவராக்குவேன்!

பெண் : தண்ணீர் கொண்டு வந்து நான் தாரேன் — கூட
நான் தாரேன்! (சின்ன)

ஆண் : கண்ணாடி பீரோ வாங்கி வீட்டில் வைக்கோணும் — நம்
வீட்டில் வைக்கோணும் — அதிலே

பெண் : கல்கண்டு மிட்டாயி வாங்கிப் பூட்டி வைக்கோணும் —
உள்ளே
பூட்டி வைக்கோணும்!

ஆண் : ஜன்னல் வச்ச சமையல் கட்டு வேண்டாமா? — தட்டு
முட்டுச் சாமான்கள் எல்லாந்தான் வேணும்

இருவரும் : நாம் வீடுங் குடியாவோம், — சுகம்
நீடும்படி வாழ்வோம்
வயதில் கல்யாணம் செய்து கொண்டு
வாழ்வோமே! ஓ.. ஓ.. ஓ... (சின்ன)

பெண் : நான் சோறாக்கிப் பிட்டு நாத்து நடுவேன்

ஆண் : நான் காடு காத்துப் பசுமாடு மேய்ப்பேன்

பெண் : நான் வீடு காத்துத் தினம் விளக்கு வைப்பேன்

ஆண் : நான் பாடு பட்டுத் தேடுவேன் அப்பா போலே

பெண் : நான் பாதுகாத்துக் கொள்ளுவேன் அம்மா போலே!

இருவரும் : நாம் ஒண்ணாகச் சேர்ந்து என்றும் வாழ்வோமே!
(சின்ன)

— *மருமகள்*

## வாதம், வம்பு பண்ணக் கூடாது!

வாதம் வம்பு பண்ணக் கூடாது — பிடி
வாதம் வம்பு பண்ணக் கூடாது! — பெண்கள்
வகையில்லாப் பொருளை வேண்டிப்
புருஷனிடம் எப்போதும் (வாதம்)

வரவு செலவு எண்ணிப் பார்க்கணும் — வீட்டு
வாழ்வின் தேவைகண்டு கேக்கணும் — போலி
மரியாதை மதிப்புக் காக
அல் டாப்புகளை நீக்கணும்! (வாதம்)

அம்பது ரூபா சம்பளக்காரன் பொஞ்சாதி — தினம்
ஒம்பது தடவே காப்பி குடிப்பது அநீதி!
எம்பது ரூபா புடவே கேட்டா
குடும்பத்துக்கே விரோதி! (வாதம்)

வெள்ளிச் சரிகை வேஷ்டி சேலை கொடுத்து — எவர்சில்வர்
வெங்கலப் பாத்திரம் வாங்குவதைத் தடுத்து — புருஷன்
விலை மதிப்பை எடுத்துச் சொன்னா முகத்தைச் சுளித்து (வாதம்)

போதும் என்ற அளவு கடந்து — தனக்குப்
பொருந்தும் பொருந்தா தென்பதை மறந்து — உண்மைக்
காதல் கொண்டான் தன்னைக்
கசக்கிப் பிழிந்து — பெண்கள் (வாதம்)

பெண்கள், வகையில்லாப் பொருளை வேண்டி
புருஷனிடம் எப்போதும் (வாதம்)

*— டாக்டர் சாவித்திரி*

## ஒன்றும் இருபத்தொன்றும்

ஒண்ணுலேயிருந்து இருபது வரைக்கும் கொண்டாட்டம்! — இருபத்
தொண்ணுலேயிருந்து முப்பது வரைக்கும் திண்டாட்டம்! — தேதி
(ஒண்ணிலே)

பண்ணிய வேலைக்குப் பலன்பெறுவது ஒண்ணிலே! — மனுசன்
படாதபாடு படுவது இருபத்தொண்ணிலே!

முன்னே பட்ட கடனைத் தீர்ப்பான் ஒண்ணிலே — பின்னும்
மூன்றாம் பேஸ்து விழுந்தது போலவே
முகம் சோர்ந்திடும் இருபத்தொண்ணிலே!

தென்பழனி திருப்பதிக்கும்
ஸ்ரீரங்கம் போவதற்கும்
சில்லறையைப் போட்டு வைப்பார் தேதி ஒண்ணிலே!
அன்புடனே போட்டு வைத்த
உண்டியல் வாயைக் கொஞ்சம்
அகலமாக்கி ஆட்டிப் பார்ப்பார் இருபத்தொண்ணிலே!

சினிமா ட்ராமாக் காட்சிகளுக்கு
டிக்கட் கிடைக்கா தொண்ணிலே!
தியேட்டர் காலி ஆளிருக்காது தேதி இருபத் தொண்ணிலே!
சிகரெட், பீடி, வெத்திலை, பாக்கு
விற்பனை அதிகம் ஒண்ணிலே!
தெருவில் எறிந்த துண்டுப் பீடிக்கும்
கிராக்கி வந்திடும் இருபத்தொண்ணிலே!

கொண்டவனும் கொண்டவளும் குழந்தை குட்டியோடு
கும்மாளங் கொட்டுவது ஒண்ணிலே — அவர்
கூச்சல் கிளப்பிக் கிட்டு குஸ்திகளும் போட்டுக் கிட்டு
கோணிக் கொள்வார் இருபத் தொண்ணிலே!

தம்பிகளின் வாடகைச் சைக்கிளோட்டம் ஒண்ணிலே!
தரையில் நடந்து வருவார் இருபத் தொண்ணிலே!

நண்பர் நடமாட்ட மெல்லாம் ஒண்ணிலே — எந்த
நாயும் எட்டிப் பார்க்காது இருபத் தொண்ணிலே!

கொண்டாட்டந்தான் தேதி ஒண்ணிலே!
திண்டாட்டந்தான் இருபத் தொண்ணிலே!

— *முதல் தேதி*

## குழந்தைக் கணக்கை நிறுத்தி ஆகணும்!

ஆண் : ஒழைச்சுத் திங்க நமக்குப் பலமிருக்குதே!
உண்மையோடு உதவிக்காக நீயு மிருக்கிறே! அட, சாமி

பெண்: அளவில்லாத குழந்தைச் செல்வம் கொடுத்து மிருக்குதே! — நாம

ஆண் : தளர்ந்தபோது பாதுகாக்கும் எதுக்கு முழிக்கிறே?

மனசை வுட்டு வுடாதே மாமன் மகளே! — பின்னே
வாடியம்மா போவோம் ஏண்டி ரகளே? — கண்ணே!
மனசை விட்டுடாதே மாமன் மகளே!

பெண்: நம்மைப் போலே பிள்ளை குட்டி
நாயா அலையோணுமா?
நானும்நீயும் போனா
நாதியேதும் உண்டுமா?
உன்னைப் போலப் படிக்காத
முட்டாளா இருக்கோணுமா? — யோசிக்காட்டிப்
பின்னாலே மோசமாகுமே மாமா!

வருஷ மொரு பிரசவம் தவறுவ தில்லை! — நானும்
வத்தலாகப் போயிட்டேன் சக்தியு மில்லே! — மச்சான்!
அவசரப் படாதே அத்தை மவனே!

ஆண் : நடந்த வரைக்கும் கடவுள் செயல் நடந்து போச்சுது;
நாளையோடு குழந்தைக் கணக்கை நிறுத்தி யாச்சுது! — நம்ப
குடும்ப நெலமை தெரியும் செலவே கொறச்சு மாச்சுது! — உள்ள
குழந்தை குட்டியை வளர்க்கும் வழியும் புரிஞ்சு போச்சுது!
மனசை வுட்டுடாதே மாமன் மகளே! வந்த
வரவே மிச்சம் புடிப்பேன் மாமன் — மகளே!

இருவரும் : கட்டாயமாய் நம்ம நாளிலே
கல்வியாலே பிள்ளை குட்டி மேலோங்கணும் ;
நல்ல பேரும் அவங்களாலே
நாம் வாங்கணும்;

*— தூய உள்ளம்*

# முன்அறியும் தெய்வம் அன்னை பிதா!

### தொகையறா

முன்னறியும் தெய்வமடா அன்னை பிதா — அவர்
மொழிந்த தெல்லாம் நமக்கு வேதமடா — மனிதா!

### பல்லவி

தன்பொருளும் தன்சுகமும் தனது பிள்ளை என்றே
அன்பு கொண்ட அவர்க்கீடு ஏதுமில்லை!

### சரணம்

செல்லரித்த ஆலமரம் அடிப்புறம் காய்ந்தாலும்
ஜீவனற்றுப் போகாமலே — அதன்
பிள்ளையெனவே விழுது பின்பு வந்து கிளைதாங்கிப்
போணுகின்ற செயல் போலே...

நல்லகுடி வழிவந்த மக்கள்குணம் அதுவென்றே
சொல்லுதடா தெள்ளுதமிழ் நூலே! — அதை
உள்ளமதில் உணராத பிள்ளைகளுக் கேகீரிப்
பிள்ளை அணிற்பிள்ளைகளும் மேலே! (முன்)

''தெய்வத் தாலாகா தெனினும் முயற்சி தன்
மெய்வருத்தக் கூலி தரும்'' என்பதாலும் நீ
செய்வன திருந்தச் செய் — மென்மேலும் உண்மை
ஜெயிக்குமடா தம்பி எந் நாளும்!

மலையது கலங்கிடினும் கலங்காதே — மனம் கலங்காதே!
மானமற்ற பேடியென வாழாதே!
உலகிலுன் கடமை செய்யத் தவறாதே! — அதற்கு
உயிரைநீ பெரிதெனவே மதியாதே! (முன்)

— *நல்ல தீர்ப்பு*

## நல்ல பெண்மணி!

நல்ல பெண்மணி! — மிக
நல்ல பெண்மணி — தாய்
நாட்டு நாகரீகம் பேணி
நடப்பவள் எவளோ? அவளே! (நல்ல)

வெள்ளி முளைத்துச் சேவல் கோழி
கூவிடும் வேளை — தன்
மேனி குளித்து அழுக்கு நீங்கத்
துவைக்கணும் சேலை...
பள்ளிக்கூடம் செல்ல வேணும்
காலையும் மாலை — நல்ல
பழக்க வழக்கத்தோடு நூலைப்
படிப்பவள் எவளோ? அவளே! (நல்ல)

அம்மாவுக்கு உதவியாக ஆக்கிப் பழகணும் — சோ
றாக்கிப் பழகணும்;
அடுப்பை மூட்டிக் கூட்டிப் பெருக்கி
இடுப்பை வளைக்கணும்;
அப்பா சொல்லும் அறநெறியில்! தப்பா
திருக்கணும் — தினம்
அச்சம் பயிர்ப்பு மடமை நாணம்
அமைந்தவள் எவளோ? அவளே! (நல்ல)

புகுந்த இடத்தில் பிறந்த இடத்தைப்
புகழக் கூடாது;
புருஷனோடு வம்புச் சண்டை
போடக் கூடாது!
இகழ்ச்சியாக எவரையுமே எண்ணக்
கூடாது — பண
ஏற்றத்தில் இறுமாந்திடாது இருப்பவள்
எவளோ? அவளே! (நல்ல)

பொட்டு வைத்துக் கோலங்கூடப்
போடத் தெரியணும் — புத்தி
புகட்டும் நாட்டுப் பாடல் கூடப்
பாடத் தெரியணும்!
கஷ்டம் வந்த போதும் மானம்
தன்னைக் காக்கணும் — தன்
கணவன் சுகத்தை நாளும் பேணும்
கண்மணி எவளோ? அவளே! (நல்ல)

— *மணமகள்*

## கெட்ட பெண்மணி!

கெட்ட பெண்மணி — புத்தி கெட்ட பெண்மணி
கெட்ட பெண்மணி — புத்தி கெட்டபெண்மணி — தன்
இஷ்டம் போல அலைந்து வாழ்வை
இழப்பவள் எவளோ? — அவளே... (கெட்ட)

— டஜன்
இட்லி தின்னு காப்பி குடிச்சு
ஏப்பம் போடுவாள் —
சட்டி பானை தொட்டுக் கழுவக்
கையும் நடுங்குவாள் — வலுச்
சண்டை போட்டு சிண்டைப் பிடிக்கும்
லண்டியும் எவளோ? — அவளே (கெட்ட)

கணவன் கழுத்தை நெருக்கிப் பிடித்துக்
கடனை வாங்குவாள் — காசைக்
கண்டபடிக்குத் தண்டச் செலவில்
காலி யாக்குவாள்!
மணந்து கொடுத்த மகளை வீட்டில்
வைத்துக் கொள்ளுவாள்; — நல்ல
மட்டு மரியாதை மானம் விட்டவள் எவளோ? — அவளே (கெட்ட)

அதிகப் பேச்சுக் காரி, பெரும் ஆணவக்காரி;
அவள் யாருக்கும் அஞ்சா அடங்காப் பிடாரி!
சதிக் குண்டான பண்பில்லாத சாகஸக்காரி! — தமிழ்த்
தாயின் குலத்துப்பேரைக் கெடுக்கும் தறுதலை எவளோ? அவளே
(கெட்ட)

— *மங்கையர் திலகம்*

## ஓடியோடி வேலை செய்!

வாழ்க நிரந்தரம் வாழ்க தமிழ் மொழி
வாழிய வாழியவே!
வான மளந்த தனைத்தும் அளந்திடும்
வண்மொழி வாழியவே!!

காலைத் துயிலெழுவோம் — செங்
கதிரை வணங்கிடுவோம்!
நீலப் புனலிடை ஆடித் தெளிவோடு
நேசத்துடன் வளர்வோம்!!
ஓடி யோடிப் பல வேலைகள் செய்பவன்
உடம்பது திடமாகும் — செய்யாவிடில்
உறுப்புகள் முடமாகும் — அல்லாமலும்
உற்சாகம் குறை வாகும்!

வீடு மெழுகிப் பண்டம் விளக்கியும் — சமைத்தும்
விருந்திடும் உபகாரி — குடும்பத்து
விளக்கெனும் அலங்காரி — அவளே
விவேக சமுசாரி — எந்நாளும் (ஓடி)

படிக்காதவன் மனத்தில் உயர்ந்த
பண்பு மிருக்காது — நீரில்
குளிக்காதவன் உடம்பில் சுத்தம்
தெம்பு மிருக்காது;

இடித் தோடினும் நீரலைகள் இனம் பிரியாது — சேரும்
இயல்பாக மாந்தர் வாழ வேண்டு மெப்போதும்;
உடுத்துங் கந்தலைத் துவைக்கணும் ஹீ... ஹீ... ஹீம்
உல்லாசமாக அறிஞர் சொல்லாம் விவேக நூலைப் (படி)

— *மணமகள்*

## "பட்டணம் நான் போகமாட்டேன்!"

ஆண் : பட்டணந்தான் போகலாமடி — பொம்பளே!
பணங்காசு தேடலாமடி — நல்ல
கட்டாணி முத்தே யென்கண்ணாட்டி நீயும்
வாடி பொண்டாட்டி தாயே!

பெண் : டவுனுப் பக்கம் போவாதீங்க — மாப்பிள்ளே
டவுனாகிப் போயிடுவீங்க — அந்த
டாம்பீகம் ஏழைக்குத் தாங்காது — பயணம்
வேண்டான்னாக் கேளு மாமா!

ஆண் : கெட்டவங்க பட்டணத்தை
ஒட்டிக் கோணு மென்பதாலே
பட்டிக்காட்டை விட்டுப் போட்டுப்
பலபேரும் போவதாலே
கட்டுச்சோத்தெக் கட்டிக் கொள்ளடி — பொம்பளே!
தட்டிச் சொன்னாக் கேக்க மாட்டண்டி — நல்ல
கட்டாணி முத்தே! யென் கண்ணாட்டி நீயும்
வாடி! பொண்டாட்டி தாயே!

பெண் : அங்கே வேலை யேதுங்க? கூலி யேதுங்க?
வெக்கக் கேட்டேச் சொல்றேங் கேளுங்க
காலேஜுப் படிப்பு காப்பி யாத்துதாம்;
பிய்யேப் படிப்பு பெஞ்சு துடைக்குதாம்;
ஆளை ஏச்சு ஆளும் பொழைக்குதாம்,
அஞ்சுக்கு ரெண்டு கஞ்சிக் கலையுதாம்
மேலே போனது நூத்துல ஒண்ணாம்;
மிச்ச முள்ளது லாட்டரி அடிக்குதாம்;
ஒன்னான சாமியெல்லாம் ஒண்ணுமே
பண்ணாமே தவிக்கையிலே — மாப்பிளெ
உன்னாலே என்னாகும் எண்ணாமப் போனா
பின்னாலே கேடு மாமா?

ஆண் : ராத்திரி பகலா ரிக்‌ஷா இழுப்பேன்
நைசாப் பேசி பைசா இழுப்பேன்

'ட்ராமா, சினிமா, சர்க்கஸ் பார்ப்பேன்
ராசா மாதிரி சிகரெட்டும் பிடிப்பேன்
வேர்த்துப் புழுங்குனாப் பீச்சுக்குப் போவேன்
மீந்த பணத்திலே மீனும் வாங்குவேன்
ஆத்தாடி ஒங் கையிலே கொடுப்பேன்
ஆக்கச் சொல்லியே சாப்பிட்டுப் படுப்பேன்;

பெண் : அப்புறம்?

ஆண் : இதுக்கு மேலே சொல்ல மாட்டண்டி — பொம்பளே!
இந்த ஊரில் இருக்க மாட்டண்டி
இப்போதே போவோனும் ஙொப்பாவைக் கேட்டு
ஏதாச்சும் வாங்கி வாடி!

பெண் : மனுஷனை மனுஷன் இழுக்குற வேலை
வயிறு காஞ்சவன் செய்யிற வேலை
கணக்குக்கு மீறிப் பணம் வந்தபோது
மனுஷனைச் சும்மா இருக்க விடாது!
என்னை மறந்து உன்னை மறந்து
எல்லா வேலையும் செய்யவே துணிஞ்சு
இரவு ராணிகள் வலையிலே விழுந்து
ஏமாந்து போவே! இன்னுங் கேளு!
போலீசுப் புலி புடிக்கும்! — மாப்பிளே!
புர்ராவைப் பேத்தெடுக்கும்;
போவாதெ வீணாகச் சாவாதே — மாமா!
பொஞ்சாதி பேச்சைக் கேளு!

ஆண் : அப்படியா? ஆஹா! நீ
உலகம் அறிஞ்ச பொம்மனாட்டி — நான்
ஒண்ணுமே அறியாக் கம்மனாட்டி!
ஊரு விட்டு ஊரு போனாச்
சீரு கெட்டுப் போகு முன்னு
உண்மையோடு சொன்ன சொல்லு
நன்மையாகத் தோணுது,
பட்டணந்தான் போகமாட்டேண்டி — உன்னையும்
பயணமாகச் சொல்ல மாட்டேண்டி — நல்ல
கட்டாணி முத்தே! யென் கண்ணெத்தொறந்தவ!
நீதான் என் பொண்டாட்டி தாயே!

பெண் : மாமா!

ஆண் : ஏமா?

பெண் : என்னைத் தனியா வுடவே மாட்டேன்னு — எந்
தலை மேலடிச்சுச் சத்தியம் பண்ணு

ஆண் : எங்கப்ப னாணே
சத்தியம்... சத்தியம்... சத்தியம்

இருவரும் : ஏரோட்டிப் பாத்தி புடிச்சு — அதிலே
நீர் பாய்ச்சி நெல்லை வெதச்சு
ஊரோடு ஒண்ணாக உள்ளதெக் கொண்டு — நாம்
உல்லாசமாக வாழ்வோம்.

*— எங்கள் வீட்டு மகாலட்சுமி*

## விவரம் புரிந்து கொள்க!

பெண் : காதிலேதாவதும் உண்டா? வைர முண்டா?
கண்டதுண்டா? மோட்டார் கார்தனிலே
போகிறதைக் கனவில் யார் கண்டா?
நாடகம் சினிமாவும் உண்டா? ஒரு நாளாவது
உங்களுடன் நான் வந்த துண்டா? (போடாத)

ஆண் : விபரம் புரிஞ்சு கொள்ளணும் மனுஷன் கொன்னா
விபரம் புரிஞ்சு கொள்ளணும்!
வேலையத்த பணக்காரங்க பிள்ளைங்க போலே
காரியம் இல்லாமெ நேரம் போக்கா தேன்னா (விபரம்)

சிலுக்குப் புடவை கேக்குதா? — இல்லேன்னா
ஒடம்பு குலுக்கி நடக்கி லேங்குதா? — காதிரண்டும்
சீமைக் கம்மலும் கேக்குதா? — போடாமப் போனாச்
செவிடாப் போறேங்குதா? — தாலியுள்ள கழுத்து
அட்டிகை இல்லாட்டிச் சுளுக்கிக்கிறேனுங்குதா?

காப்பில்லாக் கை சோத்தை ஆக்க மாட்டேங்குதா?
காசு கொடுத்து வாங்கி ஆசையோடு மூக்கில்
பேசரி போடாட்டி வாசம் புடிக்காதா? (விபரம்)

*— பைத்தியகாரன்*

## பெண்ணால் ஆகாதது இனிமேல் ஏது?

விழி
    வேல்வீச்சிலே
கனி
    வாய்ப்பேச்சிலே — பெண்கள்
    வீரர்தமை வெல்வார் ஒரே மூச்சிலே

நல்ல
    சீராரும் சதுரங்க சேனையஞ்சவே
நின்று
    போராடும் பலவான்கள் யாரும்கொஞ்சவே
வந்து
    நேரில் தஞ்சமே
என்று
    பாரில் கெஞ்சவே
பெண்கள்
    பணியாளராய்ச் சொல்லைக்கேளாரோ? — (விழி)

படை காட்டுவார் தமக்கு
    இடை காட்டினால் — பய
பக்தியோடு பட்சந் தன்னைக்
    காட் டாரோ — முத்துப்
பல்காட்டினால் படித்துச்
    சொல் காட்டும் நாவலரும்
பாட்டுப் பாடிப் பல்லைப் பல்லைக்
    காட்டாரோ — பெண்கள்
பணியாளராய்ச் சொல்லைக் கேளாரோ? (விழி)

பெண்குலத்தைப் பேய்களென்ற
    பித்தர் தம்மையே — பெண்டு
பிள்ளைகுட்டி உள்ளவராய்
    மாற்றி விடுவோம் — இந்த
மண்டலத்தில் காண்பதெல்லாம்
    சக்தி மயமே — என்ற
மாண்புதனை நாங்கள் பறை
    சாற்றி வருவோம்
    பெண்ணால்
ஆகாததும் இனிமேலேது? (விழி)

— *தங்கப்பதுமை*

## மாதர்கள் வாழ்க!

வாழ்வோம் வாழ்வோமே
மாதர்கள் நாமே!

வளர் கலையில் அரசியலில்
வாகை சூடி... வீரமாதாய்... (வாழ்)

ஆடவர் தமதடிமை
ஆஹா ஹா — நாமா?
அவர் மதிக்கவே — ஜகம் துதிக்கவே (வாழ்)

வாளெடுக்கவும் பெண் தன்மை
சீர் படைக்கவும்
வகையாய்ச் செயவே
மதியினால் பெருமையாய்
மாநில மீதினிலே... (வாழ்)

சீர் தரும் சமத்துவம்
தேசீய மகத்துவம்
பார் மீதினிலே மேலோங்கிடவே
பழகுவோம் உலகினிலே...

பா... மணம் வீசவே
துதி பேசவே... (வாழ்)

— *ராஜகுமாரி*

## ஆவதும் பெண்ணாலே

வாழ்விலே சுகம் மருவு சீரெலாம்
வளர்வது பெண்ணாலே — மனித (வா)
தாழ்விலாத இகதர்மம் சிறந்ததும்
சற்குணி தன்னாலே (வா)

ஆவதும் பெண்ணாலே — எதும்
அழிவதும் பெண்ணாலே
ஆவல் மேவிய தேவை யானவையும்
அன்பு கொண்ட பெண்ணாலே (வா)

வீசி விட்டா வெளஞ்ச நெல்லில்
ராசி குவியுமே — பாளை
தூசி பிரியுமே
வேலை செய்தா எல்லோருக்கும்
விசனங் குறையுமே
மேதினிமேல் மேன்மையெல்லாம்
பெண்களாலே
காதலெனும் ஜோதி இன்பக்
கனிகளாலே.

அணுப்போலே புகைபோலே — பஞ்சு
ஆகணும் மேகம்போலே — பஞ்சு
அணைக்கும் இருகையாலே (அணு)
அடிப்போம் வில்லதனாலே
அரிவையர் நம்செயலாலே — பஞ்சு (அணு)

நாட்டின் பெருமை நங்கையராலே
நலமோங்கும் தொழிலாலே செந்தமிழ் (நாட்)

ராட்டினத்தாலே மூதாட்டியர் போலே
பாட்டினிலே செய்வோம் நூலே — செந்தமிழ்ப் (பாட்)

நோயற்ற வாழ்வே — ஆம்
குறைவற்ற செல்வம் — என்று (நோ)

காயம் நன்மைகாணும் தர்ம
பரிகாரம் செய்குவோம்

கனிவான மொழிபேசி
பிணிதீர்ப்போமே அனுதினம் (நோ)

அன்பு நிலந்தனிலே இன்ப
ஆனந்தமாகிய நீர் பாய்ந்து
அம்புவிமேல் அவதாரம் கொண்டாய்
அமுதே தாலேலோ தாலேலோ.

பணிசெய்வதே மாதர்கடமை — கொண்ட
மணவாளரின் அருமை பெருமை கண்டு (பணி)

குணமான அன்பு குறையாமல்
துணைசெய்வேனே! சுவாமிக் கடிமை நான்

அணியாடை அலங்காரம்
அணையின் சிங்காரம்
இனிதான் ஆகாரம்
இதமாக உபசாரப் (பணி)

— *வேலைக்காரி*

## அலங்காரம் எதற்கு?

### பல்லவி

அழகும் குணமும் அமைந்த பெண்ணுக்கு
அலங்காரம் எதற்கு? (அழகும்)

### அநுபல்லவி

செழித்திடும் மலர்க்கொடியைப் போலே
செயற்கையில்லாத இயற்கைமேனி... (அழகும்)

### சரணம்

தங்க நகைகள் முத்தாரம் — அவை
அங்கத்துக்கே பெரும்பாரம் — குல
மங்கையர்க்கே ஒரு மஞ்சள் கயிறுதான்
ஆதாரம் — சிங்காரம்
மங்களமாகிய மனையலங்காரம்
வந்தவர்க்கே அனுதினம் உபசாரம்
இங்கிதப் பெண்கள் தன்னால் சம்சாரம்
என்றே நினைக்கவும் வேண்டுமிந்த நேரம் (அழகும்)

## குடித்தன முறைமை

குடித்தன முறைமை படித்திட வேணும்
குடும்பம் நடத்தவும் வேணும் — பெண்கள்
குடும்பம் நடத்தவும் வேணும்

கோழி கூவும் அதிகாலையிலெழுந்து
கூட்டிப் பெருக்க வேணும் — பெண்கள்
வீட்டை மெழுக வேணும்.

இடுப்பது வளைத்திட எழில்தரும் விதமாய்க்
கோலம் போடோணும் — நன்றாகக்
கோலம் போடோணும்.

படுக்கையறையும் அடுப்பங்கரையும் சோற்றுப்
பானை சட்டி பாத்திர பண்டம்
பத்தும் விளக்கோணும் — விளக்கிச்
சுத்தம் செய்யோணும்.

குருணி நெல்லே உரலி லிட்டுக்
குத்திப் புடைக் கோணும்
உஸ்ஸே.. உஸ்ஸே...

குடங்குடமாத் தண்ணீரெ ஓடோடி எடுக்கணும்
கொப்பரை அண்டா குண்டா நிறைய ரப்போணும்.

பரிவோடு கன்றையே பாலூட்ட வைக்கோணும்
பசுவில் பத்திரமாகக் கறக்கணும் — பாலைப்
பசுவில் பத்திரமாகக் கறக்கணும்.

பக்குவமாய்ச் சோறு வடிச்சு
பருப்புச் சாம்பாரு வச்சு
மிக்க சுவையான ஒரு கறியோடு — தாலி கட்டினவன்
வேர்வை சிந்தக் கஷ்டப்பட்டுச்
சேர்த்த பணந் துட்டுதனை
வீண்செலவு புரியாமல் — பெண்கள்
சிக்கனமாய் வாழ்க்கை செய்து பழகோணும்.

குடித்தன முறைமை படித்திட வேண்டும்.
குடும்பம் நடத்தவும் வேணும் — பெண்கள்
குடும்பம் நடத்தவும் வேணும் — இதில்
கூறும் வார்த்தைபோல் குணமாய்ப் பெண்கள்
தெரிந்து நடக்க வேணும் — விபரம்
புரிஞ்சு நடக்க வேணும்.

## இருவர்க்கும் கற்புப் பொது

என்னுடம்பில் நான் பாதி மனைவி பாதி
என்று சொல்லும் ஆடவர்கள் மறுவினாடி
தன்மையில்லாக் கோவலன்கள் ஆகின்றார் என்னநீதி?
இன்ப உணர்வே உயிரின் இயற்கை
இதையும் மறந்தார் ஆடவர்கள்
பொன்னைப்போல் மனைவி இருக்கையில்
பொது மகள் துணை நாடுகிறார்! (பொண்)

பெண்களிடம் கற்பை எதிர்
பார்க்கும் ஆண்களே!
பெண்களுக்கும் ஆண்களுக்கும்
கற்புப் பொதுவன்றோ?
கொண்ட மனைவியர் தெருவில் சென்றால்
கோபம் கொண்டிடும் ஆண்கள் யாரும்
கண்ட பெண்கள் அன்னை என்றே
கருதி வாழ்வது கடமையன்றோ?
ஒரு பெண்ணை ஐந்து பேர் நாடுவதும்
ஒரு பாவி அறுபதாயிரம் பெண்களின்
உரிமை பறிப்பதும் சரிதானோ?
பெண்ணினத்தைத் தாழ்த்தும் சதியன்றோ?
இருளில் உள்ளது பாழும் உலகம்,
மகளிர் வேதனை என்று விலகும்?
பருவ மாதரின் உரிமை காத்திட,
அரிய சேவை புரிய வேண்டும்! (பெண்)

## பெண் உலகம்!

பெண்களே, உலகப் பெண்களே!
பிழைகள் செய்பவர் ஆண்களன்றோ?
அழிவை யடைபவர் நீங்களன்றோ?
அன்பு மனைவியர் தனித்து வருந்திட
அருமை நாயகர் பிரியலாமோ?
அன்றிற் பறவையும் பெட்டையைப் பிரித்தால்
அரை நொடியிலே உயிர் விடுமே! (பெண்)

## ஆவதும் அழிவதும் பெண்ணால்!

ஊஹூம் ஐயையோ ஊஹூம்னா இல்லையென்றும்
ஊம்னா கோபமென்றும் ஊன்னா சரியென்றும்
உலகத்திலே சொல்லுறாங்க

ஊன்னு சொல்லி விட்டா
உயர்வேது பெண்ணுக்கே?
ஊஹூம்னு சொல்லுவதே... உரிமையதாம்
ஊ அது பொல்லாது உளறலேயல்லாது
உறுதியாய் நிலைத்து நில்லாது (ஊன்னு)

மதுவும் மயக்கமும் போலே
மாங்காயும் புளிப்பும் போலே
மங்கையே நீயும்நானும் மாநிலந்தன்னில் வாழ (ஊன்னு)

எட்டாத பழத்தின் மீது வெட்டியிலே ஆசையேன்?
கிட்டாதெனத் தெரிந்தும் கொட்டாவி ஏன்?
அன்றொரு பெண்ணுக்காய் ஆண்டியும் ஆனாயே!
ஆவதும் அழிவதும் பெண்ணாலே — புரிஞ்சுதா? (ஊன்னு)

## ஆவதும் பெண்ணாலே!

வாழ்விலே சுகம் மருவு சீரெலாம்
வளர்வது பெண்ணாலே — மனித (வா)

தாழ்விலாத இகதர்மம் சிறந்ததும்
சற்குணி தன்னாலே (வா)

ஆவதும் பெண்ணாலே — ஏதும்
அழிவதும் பெண்ணாலே — மிக
ஆவல் மேவிய தேவையாவையும்
அன்பு கொண்ட பெண்ணாலே (வா)

— ***வேலைக்காரி***

# கண்களுக்கு அறிவுரை!

### தொகையறா

கண்டால் கொல்லும் விஷமாம்
கட்டழகு மங்கையரை... நான்
கொண்டாடித் திரியாமல்
குருடாவ தெக்காலம்?
பெண்களை நம்பாதே... ! கண்களே
பெண்களை நம்பாதே...! வீண்
பெருமை காட்டிச் சிறுமையாக்கும் (பெண்களை)
மண்கலம் போல மற்றவர் தொட்டால்
மாசுறும் பெண்மை .... என்று
பேசிடும் உண்மை... கெட்டு
வெண்கலம் போல எவர் தொட்டாலும்
விளக்கி எடுத்து விரும்பும் தன்மைப் (பெண்களை)

### தொகையறா

ஒய்யாரக் கொண்டையிலே தாழம்பூவாம்... அதன்
உள்ளே இருக்கிறது ஈறும்பேனாம்... இதை
மெய்யாய் உணர்ந்தவனே புத்திமானாம்
மேனிமினுக்கும் பெண்டுகளைப் பார்த்திடானாம்.

### பாட்டு

கண்டவரோடு கண்ணால் பேசிக்
காமுறும் மாது — இந்த
பூமியின் மீது — கொண்ட
கணவன் தன்னைக் கழுத்தறுப்பாள்
காரிகை ரூபத்தில் காணும் பிசாசுப் (பெண்களை)

ஜரிகைப்பட்டு ஜவ்வாதுப் பொட்டு
தங்க நகைப் பகட்டு — வெள்ளித்
தாம்பாளம் தனில் தாம்பூலம் முதல்
தேங்கா பழம்துட்டு — கொண்டு
தெருவில் புறப்பட்டு
பிறர் மதித்திட வருவாள் — தெய்வப்
பேரால் எதையும் புரிவாள் — தன்னைப்
பெண்டாய்க் கொண்டால் திண்டாட்டந்தான்
மினுக்கி யலுக்கிக் குலுக்கிச் சிரிக்கும் (பெண்களை)

— *தூக்குத்தூக்கி*

## காவேரித் தண்ணீர் பட்டால்....!

காவேரித் தண்ணீர் பட்டால்
கன்னியர் மேனிதங்கம் — ஆகும்
கார்மேவிய சீரோங்கிடும்
காட்சிதரும் ஸ்ரீரங்கம் தழுவிய (கா

நாடுநலம் பெறக் காடு விளைந்திட
பாடுபடும் மக்கள் வாழ்ந்திடவே
ஞானவி நாயக நாதனைப் பாடி
நங்கையரே கும்மி கொட்டுங்கடி!

ஏட்டுப் படிப்புப் படித்தாலும் — புகழ்ப்
பட்டம் பதவிகள் பெற்றாலும் — பெண்கள்
வீட்டுப் படிப்புப் படிக்கவேணுமென்று
விளங்கிடக் கும்மி கொட்டுங்கடி!

ஞான சங்கீதம் படித்தாலும் — பெண்கள்
நாட்டியம் ஆடத் தெரிந்தாலும்
பானை பிடித்துப் பழகவேணுமென்றே
பாடிக் கும்மியும் கொட்டுங்கடி!

## பெண்களைக் குறைசொல்லல் பெருந் தீது!

பல்லவி

மறுமுறை நீ அந்த வார்த்தையைச்
சொல்லாதே — மகா பாபமே!

அநுபல்லவி

பிறவியிலே குலபேதமும் ஏது?
பெண்களைக் குறை சொல்வது பெருந் தீது!
அறநெறி யதற்கிது அணுவுந் தகாது;
அரி ஹரி யென் திருச்செவி கேளாது

— *கிருஷ்ணபக்தி*

## சன்மார்க்கம் இல்லாச் சமூகம்

சன்மார்க்கமே இல்லாச்
சமூகப் பேயின் சதியாலே
என்போலே பேதை
எத்தனை பேருள்ளாரோ — புவிமேலே? (சன்)

என் வாழ்க்கைத் துணையாம்
நாதன் இறந்தார்; — அது
என் குற்றமா?
கண்ணே
இல்லாத மூடக்
கயவர் செய்த சதியாலே
பெண்ணாக ஏன் பிறந்தேன்
பேய்ச் சமூகம் நடுவே நான்?
மாங்கல்யம், குங்குமம்
மலர் யாவும் இழந்தேன்,
மாறியதோ மன உணர்ச்சியும்
உயிருந் தானே!

*— பைத்தியக்காரன்*

## வாழ்வேது?

வாழ்வேது? நல் — வாழ்வேது?
கண்டதே காட்சியெனும் கொண்டதே கோலமெனும்
கண்மூடிப் பழக்கமுள்ளோர் கண்களுக்கு முன்னாலே! (வாழ்)
எண்ணமும் ஈடேறி ஏற்றிருக்கும் பழி மாறி
அன்னை மகிழும் வரை கண்கலங்கல் அல்லாது (வாழ்)

உண்மையின் உயர்வுணர்ந்து உலகம் திருந்தும்வரை
கண்ணீரும் கவலையுமே காணும் பயனல்லாது
ஒண்டநிழல் சொந்தமின்றி உற்றவர்கள் யாருமின்றி
மைந்தன் வாழ்வை எண்ணி மனங்கலங்கும் பெண்
வாழ்வோடு போராடி நாள்தோறும் மனம்வாடி
ஓயாத உழைப்பாலே ஓடாவதல்லாது (வாழ்)

## சொல்ல வெட்கம் ஆகும்!

என்றுதான் திருந்துவதோ? நன்றிகெட்ட ஆடவருலகம் — இனி
என்றுதான் திருந்துவதோ?
தொன்றுதொட்டு வந்தமடமை
சொல்ல வெட்கமாகுதையா கொடுமை! கொடுமை! (என்றுதான்)

ஆணாகவந்த சில அக்ரமப் பிசாசுகள்
ஆசையினால் அறிவிழந்தே
மானாபிமானம் விட்டு மாலாக்கிச் சூலாக்கி
மங்கையரைப் பாழாக்கி
நாணாமல் கைவிடுத்தார்
நடுத்தெருவில் நடைப்பிணமாய்
அலையவிட்டார் ஞாயந்தானா? (என்றுதான்)

ஏனென்று கேட்கவோர் ஆளில்லை!
என் செய்வோம் இறைவா! கச்சி ஏகம்பனே!
வண்ணான் சொன்ன சொல் வகையெனவே — ராமன்
மனைவியாம் சீதையை வனத்தில் விட்டான்
பெண்ணாள் திரௌபதியைத் தருமன்
பித்தனாய்ச் சூதினில் பணயம் வைத்தான்
கண்ணாம் காதலியை ஒருத்தன்
கடன் தீர்க்கக் காசிதனில் விலைக்கு விற்றான்
ஒண்ணா ரெண்டா உபத்திரவம்? — இந்த
உலகினில் தாய்க்குலம் பட்டதுன்பம்! (இனி என்றுதான்)

— *ரங்கோன்ராதா*

## பெண்ணார் அமுது

நான் என்
கண்ணாலே பெண்ணாரமுதைக் கண்டேன் வாயால்
உண்ணாமல் உள்ளம் நிறையக் கொண்டேன்; (இரு கண்ணாலே)
பகுத்
தறிவுள்ள நண்பர் ஒருவரை யடுத்தேன் உள்
ளன்பாலே அழகு விருந்து கொடுத்தேன்; (உள்ளன்பாலே)

விருந்துண்ண வந்தவரு விரும்பிய தென்ன கூறு!
விசயத்தே சொல்லிப்பிடு வேறென்ன சொன்னாரு?
பார்க்கையிலே மணக்கு துன்னு தொட்டுத்தான் பார்த்தாரு!
.........................

*(பாடல் நிறைவுரவில்லை)*

## சிங்கார ரேகை கையில் காணுது!

ஓ....
அழகர்மலையானை, ஆனைமுகத்தானை,
கழுகுமலையானை, கதிர்காமவேலவனைத்
தொழுது குறிபார்த்துச் சொல்லுவதும் மாறாதே!

ஜிங்கிடி ஜிங்கிடி ஜிங்கிடி ஜிங்கிடி
ஜிங்கிடி ஜிங்கிடி ஜிங்கிடி ஜிங்கிடியே.

சிங்கார ரேகை கையில் காணுது — உன் (சிங்கார)
உண்மை தோணுது — சொல்ல
இங்கே கொஞ்சம் பயமாகுது. (சிங்)

அடெ... சும்மா சொல்லு பயப்படாதே!
ஓ.....
மங்கை நல்லாள் கொண்ட நோயது
என்னது?
மாப்பிள்ளை நினைவாகும் மனநோயுமானது
தீப்போலே காயாமல் காயுது!

காயுதா?

காயுது!....
சாப்பாடும் தண்ணீரும் உண்ணாமல் தவிக்குது
பூப்போல பொன்மேனி வாடுது!

வாடுதா?

வாடுது.....!

— *மதுரைவீரன்*

## கீதானந்தம்

கீதானந்தம் பேரின்பம் — சங்கீதானந்தம் பேரின்பம்
சுருதி சேரும் குரல் மகர யாழும் கூடும்
வேதானந்தம் ஆரம்பம் — சாமவேதானந்தம் ஆரம்பம்
மேவும் ராகம் சரிகமபதநிச சநிதபமகரிச (கீதா)

## எது நடனக் கலை?

பண்ணால் சொல்லும் பொருளைப்
பாவ ராக தாளத் தோடு
கண்ணால் காட்டும் கலையே
நடனக் கலை! (ப)

முன்னோர் நூல்கள் பல
மொழிந்த படி உயர்ந்த
விண்ணோ ராடுங் கலையே
நடனக் கலை! (ப)

ஆடரங்க மேடை மற்ற
அலங்கார மெல்லாம் — சிற்ப
அளவில் அமைக்க வேண்டும்
ஆட்டி வைக்கும் நற்புலவன்
கூத்துவகை அத்தனையும்
அறிந்தும் இருக்க வேண்டும்
பாடலின் கருத்துணர்ந்து
பதங்களைச் சீர் பிரித்துப்
பாடகனும் பாட வேண்டும்
பாடலிலும் ஆடலிலும்
அழகிலுமே சிறந்த
பாத்திரம் நின்றாட வேண்டும்
யாழுடனே வேய்ங்குழல்
குழைய வேண்டும் — இரண்
டாசிரியரும் ஒருவராக வேண்டும்
ஏழிசை மழையெனப்
பொழிய வேண்டும் — இசை
இன்ப வெள்ளந் தன்னிலே
எல்லோரும் மிதக்க வேண்டும்!
தாளமதும் தட்ட வேண்டும் — அதனொடு மத்
தாளமதும் ஒட்ட வேண்டும் — நயத்துடனே — பக்க (தா)
மேளம் முக்கிய மேளமாகும்
பாடலிலும் ஆடலிலும்
பங்கெடுத்துக் கொள்ள வேண்டும்.

(பண்பால்)

## இயற்கையில் எழுவது நாதம்

இயற்கையாய் அமைவது நாதம் ....ஏ
ழிசைகளால் இணங்க இசைப்பது சங்கீதம்.

பயிற்சியால் பலர்க்கும் பலிக்காது — முயற்சி
பண்ணாமலே சிலர்க்குத் தன்னால் வரும் தப்பாது (இயற்)

பாடலுக்குத் தோழமை சேர் மிருதங்கம் — முறை
பழுதுபடாமல் செய்யும் அதனங்கம் — எங்கள்
காடுதந்த தாவரத்தின் செல்வமல்லவா? — உங்கள்
நாடுதந்த பொருள் அல்லவென்று — இந்
நாடு சொல்லும் அதைச் சொல்லவா? (இயற்)

மேடு பள்ளமதில் சென்றுலாவி வரும்
ஆவினங்கள் மெய்ம் மறந்து — புல்
மேய்ந்திடாமல் நீர் வேண்டிடாது — செவி
யருந்தும் அமுதென விருந்து தரும்
வேணு கானமென மாயனான கோ
பாலனூதிய வேய்ங்குழல் — தினம்
விளைந்ததும் வளர்ந்ததும் உங்கள்
நாட்டிலா? எங்கள் காட்டிலா?
சொல்லு (இயற்)

நட்டுவனார் ஆடலுக்குத் தட்டு கழியும்
நாதசுர ஒத்துமுதல் யாழினங்களும்
கொட்டு முழக்கோடு சிவன் கொண்ட உடுக்கை
கூறுநதி கேரளத்துத் தக்கை இடக்கை
குமுறுகின்ற இடி ஒலி தருந்தவிலும்
உருமி ஜண்டை சிறு பறை
உருவடைந்ததுதிரு நாட்டிலா?
இல்லை காட்டிலா? சொல்லு (இயற்)

## நவராத்திரி!

செந்திரு மாதுங் கலைமாதுஞ் — சிவ
காமி யென் றோதும் மலைமாதும்,
சொந்தமுடன் நவ ராத்திரி நாளன்று
தோன்றிடுவார் — ஒன்று — சேர்ந்திடுவார்
சந்தத் தமிழ்க்கவி தான் பாடி — அவர்
தாள் பணிந்தே யாமுங் கொண்டாடி
சந்ததமும் இன்பச் செல்வமுங் கல்வியும்
தாங்கிடலாம் — புகழ் — ஓங்கிடலாம்
சித்திரம் சிற்பங்கள் கைத்தொழில் வர்த்தகம்
செய்திடும் சாதனங்கள் படைகள்
புத்தகங்கள் எழுத்தாணிகளும் வைத்துப்
போற்றிடலாம் — இன்பம் — ஏற்றிடலாம்!

பத்தினித் தெய்வங்கள் பொம்மைக் கொலுவைத்துப்
பாடிடலாம் — நன்மை — தேடிடலாம்!
புத்தம் புதுமலர் தித்திக்கும் பண்டங்கள்
பொங்கல் எல்லாம் வைத்துப் பூசிக்கலாம்
கண்ணென்று சொல்கின்ற எண்ணும் எழுத்தையும்
கற்பித்த சற்குரு நாதனுக்கே — நல்ல
சொன்ன புஷ்பம் புதுச் சோமனெல்லாம் தந்து
துதித்திடலாம் — நன்கு — மதித்திடலாம்.

சொல்லிக் கொடுத்த குரு வாழி!
சொந்தம் வாழி! சுகம் வாழி!
நல்லோர் வாழி!! நலம் வாழி!
நாடு வளம் பெறுந் தொழில் வாழி!
இல்லறம் வாழி! எழில் வாழி!!
ஈன்றோர் வாழி!! வாழியவே!!! (செந்திரு)

## நாட்டுப்புற ஆடல்

தொட்டியத்துக் காட்டுக்குள்ளே தில்லேலே லேலோ — ஒரு
தொர மவனைக் கண்டெடுத்தோம் தில்லேலே லோ
கட்டழகைப்பாக்கையிலே தில்லேலே லோ — நம்ம
கலி நீங்கிப் போச்சுதம்மா தில்லேலே லோ
    வாடா கண்ணு — அம்மாகிட்டே
    போடா பொன்னு
    சொப் — சொப் — சொப் — சொப்    (தொட்டியத்துக்)

ஆவாரங் காட்டுக்குள்ளே தில்லேலே லேலா — ஒரு
ஆணிமுத்தெக் கண்டெடுத்தோம் தில்லேலே லேலோ
பூவாமல் காச்சகனி தில்லேலே லேலோ — நம்ம
புண்ணியத்தால் வாச்சகனி தில்லேலே லேலோ
    வாடா கண்ணு — அப்பாகிட்டே
    போடா பொன்னு
    சொப் — சொப் — சொப் — சொப்!    (ஆவாரங்காட்டுக்)



## கடலில் ஆடிய காதல் ஆட்டம்

மானினக் கூட்டம் வருவது போல் — பெரும்
மதகரிக் கும்பல் வருவது போல்;

தேன்படு சொல்லியர் முன்னாலே — வரத்
திரண்டனர் ஆண்களும் பின்னாலே!

ஆடல் அணங்கு மாதவியும் — நல்ல
ஆணில் அழகன் கோவலனும்;
அணியும் பணிவுடை அலங்காரத்தொடு
அன்பாய்க் கலந்தார் விரைவினிலே!

நடனம் ஆடினார் லயங்கொண்டு, — இரு
நயனம் மூடினார் கரங்கொண்டு!

கடலில் ஆடினார் கலங்கொண்டு — உயர்
காதலாடினார் மயல் கொண்டு!

நீரைச் சாடினார் குழல் கொண்டு — பலர்
நிலவில் ஆடினார் எழில் கண்டு!

தூரி ஆடினார் விசை கொண்டு — சிலர்
சொந்தம் ஆடினார் துணை கொண்டு!

கேலியாடினார் முறை கொண்டு — இரு
கிளிகள் பாடினார் தமிழ் கொண்டு!!

## கோழிபிடிப்பவன்

கொங்காவி நங்குடிவாழ் குமராண்டியவெ
கும்பிட்டவெம் பின்னாலெல்லாந் திரிவாண்டியவெ;
கூத்தாடி பெற்றெடுத்த குழந்தையாண்டியவெ,
குறத்தியைச் சேர்த்துக்கிட்டு கொஞ்சுவாண்டி!
கோத்திரமுங் குலமுங்கெட்ட கோவணாண்டியவெ,
கூவுகிற கோழியத்தாம் பிடிப்பாண்டி — திரு. (கொங்காவி)

## பூம்புகாரில் இந்திரவிழா!

பொன்னியாறு குணகடலோடு தினம்
புணர்ந்தே உறவாடும் — அந்தப்
புறத்தில் அமைந்தது பூம்புகார் நகரம்
புலவோர் புகழ்சூடும்
கன்னலோடு வளர் கமுகும் தென்னையும்
கலியும் கனிமாவும் — நல்ல
செந்நெற்கழனிகள் செழிக்கும் மருங்கில்
தேன்படு பூங்காவும்
சோறுடைத்துச் சோணாடென்பார்கள்
அதிலே தலைநகரம்
சொல்ல வேண்டுமெனில் மற்றுள எதற்கும்
இதுவேதான் சிகரம் — இங்கு
இந்திரன் பெயரால் பண்டிகை அமைத்தார்
எழிலுக்கெழில் கொடுத்தார்
சந்தோஷம் தன்னை வரவழைத்தார் — அதைச்
சகலரும் அனுபவித்தார்.
மானினக் கூட்டம் வருவதுபோல் — பெரும்
மதகரிக்கும்பல் வருவது போல்
தேன்படும் சொல்லியர் முன்னாலே — வரத்
திரண்டனர் ஆண்களும் பின்னாலே.
ஆடல் அணங்கு மாதவியும் — நல்ல
ஆணில் அழகன் கோவலனும்
அணியும் பணிவுடை அலங்காரத்தொடு
அன்பாய்க் கலந்தான் விழாவிலே.

நடனம் ஆடினார் லயம் கொண்டு — இரு
  நயனம் மூடினார் இருகரம் கொண்டு!
கடலில் ஆடினார் கலங் கொண்டு — உயர்
  காதல் ஆடினார் மயல் கொண்டு!
நீரைச் சாடினார் சுழல் கொண்டு — பலர்
  நிலவிலாடினார் எழில் கொண்டு!
தூரியாடினார் விசை கொண்டு — சிலர்
  சொந்தம் தேடினார் துணை கொண்டு!
கேலியாடினார் முறை கொண்டு — இன்பக்
  கிளிகள் பேசினார் தமிழ் கொண்டு! — மன்
மாலைப் பாடினார் கவிகொண்டு — சோழ
  மண்ணைப் பாடினார் வளம் கண்டு!

ஆடல் முடிந்ததும் பாடல் முடிந்ததும்
ஆழிக் கரைதனிலே!
ஊடலையே அங்கு கன்னியர் காளையர்
நாடிடும் வேளையிலே
தோள்விழிப் பூங்குழல் மாதவி கோவலன்
தோன்றினன் கானலிலே — இன்பச்
சூழ்நிலை கண்டு தனித்தனர் ஆங்கொரு
தூய்மணல் மேடையிலே!

## சிலம்போ சிலம்பு!

தேவியாம் கற்பிற்கரசி
செல்வி எங்கள் கண்ணகியாள்
தெள்ளு தமிழ்ப் பெண்மணியாள்
சீரோங்கும் செல்வத் திருநாள்
கொண்டாடுவோம்.

சேவகர்கள் சேனைசூழச் சிற்பச்சிலை நாட்டினார்
தேச மக்கள் நேசங் கொண்டே
சேவை செய்தே போற்றினார்.

பாவலராம் இளங்கோ, பண்டிதர் சாத்தனார்
பக்கம் நிற்கச் சேரர் கோமான்
பனி மலர் மாலை சாத்தினார்.

கண்ணகியாள் வண்ணமணிச் சிலம்போ சிலம்
கற்பரசி காலிலிட்ட சிலம்போ சிலம்பு!
பெண்குலத்தைப் பெருமைசெய்யும் சிலம்போ சிலம்பு! மணி
பேதமிலா காதல்வளர் சிலம்போ சிலம்பு!
முத்தமிழை முழங்கவைக்கும் சிலம்போ சிலம்பு! — மணி
முடிமன்னர்கள் மூவர்புகழ் சிலம்போ சிலம்பு!

## அன்றைய கானல் வரி —
## இன்றைய இசைப் பாட்டில்!

கயலெழுதி வில்லெழுதிக் காரெழுதிக் காமன்
செயலெழுதித் தீர்ந்தமுகம் திங்களோ காணீர்!
திங்களோ காணீர், திமில்வாழ்தர் சீறூர்க்கே
அங்கணேர் வானத்து அரவஞ்சி வாழ்வதுவே!

*— சிலப்பதிகாரம், கானல்வரி*

குஞ்சுப்பிறையில் செஞ்சிலைகள் மீன்கள்
கொண்டலும் சேர்த்தெழுதி,
வஞ்சமதன் செயல் வர்ணமிட்ட முகம்
வட்டநிலாப் பிம்பமோ?
வட்டநிலாப் பிம்பம் வாரிதிமீன் புல்லர்
வாழு மிவ்வூர் தனிலே,
வானிடையே பாம்பு வாய் கொள்ளுமோ — என்றஞ்சி
வந்ததுவோ என்னவோ!

கைதைவேலி கடிவாய் வந்தெம்
பொய்தல் அழித்துப் போனான் ஒருவன்,
பொய்தல் அழித்துப் போனார் அவர்தம்
மையல் மனம் விட்ட கல்வாரல்லர்!

*— கானல் வரி*

ஆழிக்கரை தனிலே — தாழை
வேலிக்கருகினிலே — ஒரு
காளைப் பருவங் கொண்டான்
கண்ணாலேதோ் மொழிந்தார்,
கண்ணாலேதோ மொழிந்தார்,
காணாமலே மறைந்தார்;
காணாது மறைந்தாலும்
என் கருத்தினிலே நிறைந்தார்!

## சல்சலோன்னு சவாரி!

ஒரு ஊரில் ஒரு ராஜா, ஒரு ராணி!
உன்னைப்போல் அவங்களுக்கும் ஒரு பிள்ளை — அதைக்
கண்ணை மூடித் தூங்கச் சொன்னா
கதை சொல்லுன்னு கேக்கும்.
காலாகாலம் சாப்பிடச் சொன்னா
கதை சொல்லுன்னு கேக்கும்
அவங்கம்மா சும்மா கதைகள் சொல்லி
அலுத்துப் போய்விட்டாள்.
அப்படி இருக்கும்போது ராஜா
வேட்டைக்குப் புறப்பட்டார்.

ஏம்மா?

நாட்டு மக்கள் போட்ட பயிரைக்
காட்டு மிருகம் அழிச்சுதாம்
ஆட்டைக் கடிச்சு மாட்டைக் கடிச்சு
ஆளையும் கூடக் கடிச்சுதாம்.

அப்புறம்?

உடனே ராஜா பட்டத்துக் குதிரையைக்
கொண்டு வரச்சொல்லி பாஞ்சார் மேலே

பாஞ்சு..........?

சல் சலோன்னு சவாரி விட்டார் டக் டக் டக்!
ராஜா சல்சலோன்னு சவாரி விட்டார் டக் டக் டக்!
சவுக்காலடிச்சு லகானை இழுத்துக் குதிரையை, வுட்டாரு ராஜா
சல்சலோன்னு சவாரி விட்டார் டக் டக் டக்!
கல்லும் கரடும் நிறைந்த வழியில் கேலப் வுட்டாரு!
கல்லும் கரடும் நிறைந்த வழியில் கேலப் வுட்டாரு
கத்தியெ உருவிக் கரம்பிடிச்சுக் காட்டில் நுழைஞ்சாரு — ராஜா
சல்சலோனு சவாரி வுட்டார் டக் டக் டக் டக்

வில்லையெடுத்துஅம்பைப் பூட்டி மழையாப் பொழிஞ்சாரு
விலங்குகளெல்லாம் வெருண்டோடச் சுழன்று வந்தாரு

இடது காலுக்குச் சிமிட்டாக் கொடுத்து ஈன்னு சொன்னாரு
இடது காலுக்குச் சிமிட்டாக் கொடுத்து ஈன்னு சொன்னாரு
இறகில்லாத பறவையைப் போலே குதிரை பறந்தது பார் —
ராஜா, சல்சலோன்னு சவாரி வுட்டார் டக் டக் டக் டக்!

அப்புறம்மா!

கரிகள் வந்தன நரிகள் வந்தன
கரிகள் வந்தன நரிகள் வந்தன நடுநடுங்கவே
காட்டெருமைக் கூட்டம் வந்தன கிடுகிடுங்கவே
கரிய பன்றிகள் இடிக்க வந்தன
கரடி மந்திகள் கடிக்க வந்தன
கலைமான் முதல் வரையாடுகள்
காணாமெ இடம் பெயர்ந்தன
கரிகள் வந்தன நரிகள் வந்தன;

காலொடிஞ்சது வாலறுந்தது
கழுத்தொடிஞ்சது – நல்ல – காலம் பிறந்தது!
கலப்பை பிடிச்ச உழவர் மனசில்
கவலை ஒழிஞ்சது – திரும்பக் – குதிரை பறந்தது;

சல்சலோன்னு சவாரி வுட்டார் டக் டக் — ராஜா
சல்சலோன்னு சவாரி வுட்டார் டக் டக் டக் டக் டக்

அப்புறம்மா.........?

ராஜாவுக்குத் தாகம் எடுத்தது
ஒரு தடாகத்தைப் பார்த்தாரு
தண்ணீல கையை வச்சாரு! வந்ததே – பூதம் – வந்ததே
இந்தத் தடாகம் என் சொந்தமாகும்
எங்கு வந்தாயென்று இட்டதே சாபம்
இந்தத் தடாகம் என் சொந்தமாகும்
எங்கு வந்தாயென்று இட்டதே சாபம்
கந்துகம் கிளியாய்க் காவலன் சிலையாய்
கல்லானது, இன்னும் சொல்லோணும்!
கதை மிச்சம் சொல்லவா இன்னும் சொல்லவா?

சொல்லம்மா....!

வேட்டைக்குப் போன ராஜா வீட்டுக்கு
சீக்கிரம் வரணுமின்னு ராணி கடவுளை வேண்டினா

எப்படி?

ஆதாரம் உனையே அலதினியாரே?
ஆண்டவனே கடைக்கண்பார் — என்னை

(ஆண்டவனே)

## நாட்டுக்கொரு நல்லதம்பி

ஆழி நீங்கி வானின் மீது ஆதவன்
எழுந்தான் காணீர்,
கோழி உல கெல்லாம் வாழ வென்று
கூவி யழைக்குது கேளீர்!
பார் முழுதும் ஏர்முனையிலே — உழவன்
பாட்டினிலே கொண்டாட்டம் போடுது இந்த (பார்)

*— நல்ல தம்பி*

## கதிரோன் உதயம்

பூதலம் புகழ் ஜோதி நிலவும் ஆதவா நீ வா!
சீதக் கடலும் துயிலும் நீங்கிச் சேவல் கூவின;
தீதுறும் அஞ்ஞான மார்க்கத் திரையும் நீங்கவே...
ஓதரும் மெய்ஞ்ஞான மார்க்க உணர்வும் ஓங்கவே...

காவின் மரங்கள் காய்த்துத் தழைக்க
பூவின் கொடி, புல் பூண்டு செழிக்க,
பாவினம் பயிர் பறவை ஒலிக்க,
ஆவினம் அம்மா வென் றழைக்க!

ஆதவா நீ வா! பூதலம் புகழ் ஜோதி நிலவும்
ஆதவா நீ வா!!

*— கண்ணகி*

## இயற்கையெனும் தொழிலாளி!

இயற்கை யினாலே உலகெலாம் இயங்கும்
செயற்கையிலே சிறப்பெலாம் துலங்கும்!

ஆதவனாம் தொழிலாளி காலையம்
போதினிலே வந்தான் பாரீர்!
ஆதாரம் ஆகவே அரும்பணி செய்வோம்
சோதரர் யாவரும் வாரீரே!!

## தென்னை எனும் அன்னை

### தொகையறா

தாளாலே உண்ட நீரைத்
தலையாலே தருவதடா தென்னை! — அது
தாராள இயல்போடு
தலைநிமிர்ந்து பார்க்குதடா விண்ணை!

### பல்லவி

ஓங்கி வளர்ந்தது பாங்கில் உயர்ந்தது தென்னை!
உருவத்திலே மரம் காணும்
உதவியிலே நமக்கன்னை!

தீங்கில்லாத இந்தச் செல்வத்திற்காகவே
தெய்வம் படைத்தது என்னை — இயற்கைத்
தெய்வம் படைத்து என்னை — நம்ம
தேசத்திலே இதன் செழிப்பினாலே நித்தம்
சிறப்புற்றதே பல பண்ணை!

மேலைச் சுடும் வெயில் காலத்திலே தங்கும்
சோலைக்கும் ஆனதடா! — மண்ணில்
ஏழைக் குடிசையின் கூரைக்கு மேல் வைக்கும்
ஓலைக்கும் ஏற்றதடா!

வாறு கோலுக்கும் ஈர்க்கைப் பாலிக்கும் நாலா
வேலைக்கு உகந்ததடா! — சுப
காலத்திலே பந்தல் கோலத்துக்கும் இதன்
பாளை சிறந்ததடா! — முத்துப்
பாளை சிறந்ததடா!!

அவியலுக்கும் துவையலுக்கும் ஆகாரம் பலவகைக்கும்
அழகான காய் தருமே — இதை
ஆட்டினால் எண்ணெய் தரும்!
அகப்பைக்குத் தொட்டி தரும்!!
அடுப்பெரிக்க மட்டை தருமே!!!

காவியாடை கட்டும் ஜீவன் முக்தர் கைக்கு
ஓடும் கொடுக்குதடா! — திரு
ஓடும் கொடுக்குதடா!! — (தேங்காயும்) பக்திமான்
கடவுள்தன்னை வேண்டும்
காரியத்துக் காகுதடா! — உயர்
காவியப் பாவலர் நாவலர் கற்பனை
ஓவிய ரூபமடா — கோடைக்
கற்பகம் நானென்று செப்பிடும் வாய்க்குச்
சர்க்கரை கொட்டுங்கடா — சீனிச்
சர்க்கரை கொட்டுங்கடா!! (ஓங்கி)

## எல்லாம் இன்பமயம்!

### பல்லவி

எல்லாம் இன்ப மயம் — புவிமேல்
இயற்கையினாலே இயங்கும் எழில்வளம் (எல்லாம்)

### அநுபல்லவி

அல்லா தனவும் ஆவனவும் தெரிந்த
நல்லோர் மனதினில் நாடும்
அன்பானவோர் வினை முடிவு (எல்லாம்)

### சரணம்

மலையில் அருவியிலே வளர் மழலை
மொழிதனிலே மலரின் மணந்தனிலே
வயலின் பயிர்தனில் மனையாள் பணிதனிலே... (எல்லாம்)

நிலவின் ஒளியாலும், குழலின் இசையாலும்
நீலக் கடல் வீசும் அலையாலுமே... (எல்லாம்)

கலைஞன் சிலையிலும் கவிதைப் பொருளிலும்,
கானமாம் மயிலின் ஆடலுறு சுவையில்
காதலொடு மனிதன் புலன் காண்பது (எல்லாம்)

— *மணமகள்*

## பாடுபடும் தோழர்

உழுது புலன் காப்போம் ஏர் (உழுது) — ஆநிரை
உதவி யென்றே மேய்ப்போம்;
வான் மழை கண்டு வளம் பொங்கும்
உலகெங்கும் நலன் கொள்ளப் பழுதின்றித்
தொழில் பார்ப்போம் — உழவர் நாம்
பசி யென்ற பிணி தீர்ப்போம்!

களை யிருந்தாப் பயிர் வளராது,
அதை யெடுத்துப் பிடணும்,
கட்னிருந்தாக் கவலை தீராது;
அதையும் கொடுத்துப் பிடணும்!
மழை கொறஞ்சா விளைவுயராது; — நம்ம நாட்டில் ஜாதி
மதமிருந்தாப் பகைமை மாறாது;
எதையும் சுத்தப் படுத்தணும்!

உலகத்திலே உன்னதமாய் உயர்ந்த நாகரீகம்! — மிக
உத்தமராம் தொழிலாளர்
உழைப்பில் வந்ததாகும்!

நிலவு சுடர் நெருப்புத் தேவர்
பலரும் வேலைக்காரர் — பயிர்
பண்ணும் நேர்மையாளர் — தலை
நித்தம் பாடு பட்ட தோழர்! (உழுது)

— *வேலைக்காரி*

## வாழ்க்கையெனும் ஊஞ்சல்!

இல்லறமும் துறவறமும் தூண்களாக
இகபரத்தின் பொதுநிலையே விட்டமாக
நல்லறங்கள் நாலுமே வடங்களாக
நழுவாத சத்தியமே பலகையாக
ஆடுவோமே ஊஞ்சல் ஆடுவோமே
அலங்காரமாக ஊஞ்சல் ஆடுவோமே!

## ஐம்பதும் அறுபதும்

ஆயிரத்துத் தொளாயிரத்தி
    அம்பது, அறுபது இந் நாடகம்,
ஆடும் எங்களை ஆதரிக்க வேணும்!
    அறிஞர் எல்லார்க்கும் வணக்கம்!

ஆயிரம் பேருழைப்பை யொருத்தன்
    அநியாயமாகவே
அபகரித்துச் சேர்த்து வைத்தது அம்பது! — அந்த
    அறியாமை நீங்கி மக்கள்
அவரவர் உழைப்பைக் கொண்டு
    ஆண்டு அனுபவிப்பது அறுபது! (ஓரா)

கொண்ட மனைவி யிருக்கக்கூட
    ரெண்டு மூணைச் சேத்துக்கிட்டு
கும்மாளம் கொட்டினது அம்பது! — நல்ல
    குணசாலி யொருத்தி யோடு
கூடிக் கொஞ்சிக் குலவி அன்பு
    குறையாமல் வாழ்கிறது அறுபது! (ஓரா)

கல்லும் மணலுங் கலந்த அரிசி
    கருத்த ராகி, உளுத்த சோளம்
கம்பைத் தின்னு வம்பு வந்தது அம்பது! — ஊசி
    முல்லையரும்பு போல அரிசி
மூட்டைக் கணக்கில் தூக்கிப் போட்டு
    மூக்குவரைக்கும் சாப்பிடுவது அறுபது! (ஓரா)

பேயி ருக்குது கிணத்திலே
    பிசாசி ருக்குது மரத்திலே — என்று
பிள்ளைகளுக்குச் சொல்லிக் கொடுத்தது அம்பது!
    ஆயுங் கலைஞன் ஏட்டிலே
அமைந்த நீதிப் பாட்டிலே அறிவிருக்குது
    படிக்கக் கோங்குது அறுபது! (ஓரா)

பிள்ளைகளை அதிகம்
பெற்றெடுக்கக்கூடாதுன்னு!
பெண்களுக்குக் கர்ப்பத் தடை
உண்டுபண்ண வேணுமுன்னு
பேசிக் கிட்டிருந்தது அம்பது! — அது
உள்ளபடி நல்லதுன்னு
உலகத்தில் ஆணும் பெண்ணும்
ஒண்ணு ரெண்டே பெத்துக்கிட்டு
எண்ணங்களை மாத்திக்கிட்டு
உடல்நலம் தேடுவது அறுபது! (ஓரா)

— *மணமகள்*

## எதனாலே ?

அன்பே கடவுள் என்ப தெதனாலே ? — அதில்
ஆன்ம சக்தி இன்பம் இருப்பதாலே!

சாத்திரங்கள் பொய்யென்ப தெதனாலே ? — ஏ
மாத்துகிற வார்த்தையு மிருப்பதாலே!

சாதிமதம் இல்லையென்ப தெதனாலே ? — மனம்
சமத்துவம் தானடைந்த தன்மையாலே!

பொதுவுடைமை கேட்ப தெதனாலே? — தொழில்
புரிந்தும் புசிப்பற்றுப் போனதாலே!

நன்மையெல்லாம் தீமையான தெதனாலே?
ஞானமற்ற பேச்சு நடத்தையாலே!

தன்மதிப்புக் குறைவது மெதனாலே?
தரங்கெட்ட சகவாச தோஷ த்தாலே!

உண்மையை மறைப்பதுவு மெதனாலே?
உள்ளும் புறம்பும் வேறுபட்டதாலே!

எண்எழுத்தைக் கண்ணென்ப தெதனாலே?
உண்மைபொய்யை உள்ளமது காண்பதாலே!

— *மணமகள்*

## ஓயாச் சண்டை! தீராத் தொல்லை!

அந்தக்காலம் போலே உண்டோ?
அண்ணே! நீசொல்லு! — நினைத்தே
அண்ணே நீசொல்லு!
தம்பி என்னமோ தலைகால் தெரியாமே
தத்தித்தோம்என ஆடுறான்பாரு (அந்தக்காலம்)

தருமன் இருந்த காலம் தனிலே
தபால் தந்தி உண்டா? ஓய்! ஓய்!
தபால் தந்தி உண்டா?

தண்டவாளமும், கிடையாதப்போ
தமுக்குப் போட்ட காலம் — அது
தமுக்குப் போட்ட காலம்!

நாப்பதுக் குள்ளே அறுபது ஆகும்
நாசகாலம் இதுடா! — தம்பி
நாசகாலம் இதுடா!

சொல்லைக் காக்கச் சுடலை காத்த
சுத்த வீரன் ஏது? — இப்போ
சுத்த வீரன் ஏது?

பட்டன் அமுக்கினாப் பளிச்சுனு எரியும்
பல்புவிளக்கு ஏது? — அப்போ
பல்புவிளக்கு ஏது?

பகல்போல் இரவைப் பண்ணிப்போடற
பாஷன் அப்போ ஏது?
பாஷன் அப்போ ஏது?

ரேஷன் உண்டா? கூப்பன் உண்டா?
இரட்டை நாக்குஉண்டா? — அப்போ
இரட்டை நாக்குஉண்டா?

ஓயாச்சண்டெ தீராத் தொல்லை — கொண்ட
காலம் இதுடா — தம்பி
கொண்டகாலம் இதுடா!

## எப்படி வாழ்வேன் இனிமேல்?

எப்படி வாழ்வேன் இனிமேல்?
இப்புவியின் மீது ஏழையும் நான் அந்தோ! (எப்)

பணத்தால் சிறந்தோர் குணமிழந்தோர் — அற்பப் (பணத்தால்)

பாவிகள் தம்மிடையே ஆளை அடிமை
கொள்வார் பொருள் கொடுத்தே (ஆளை)

ஆஸ்தியைத்தான் கொள்வர் — பிறரது (ஆஸ்தியை)

உழைப்போர் கூலியைக் குறைத்திடுவார் — செல்வம்
உடையார் கூற்றினும் கொடியவராம் (செல்வம்)

காளி கருணை செய்வாள் என நினைந்து
கைப்பொருள் இழந்தேனே
காட்டில் விறகொடித்தேன் — பழைய
கஞ்சியின்றி நெஞ்சொடியக் கல்லை உடைத்தேன் (மூட்டை)

மூட்டை பல சுமந்தேன் — நான் என்
முதுகெலும்பு ஒடியப் பாடுபட்டேன்
தேடி வந்த காசைக்கொண்டு தீபம் எரித்தேன்
தேனாபிஷேகம் பொங்கல் தினம் படைத்தேன்

— *வேலைக்காரி*



## அகராதி விட்டே எடுக்கணும்!

### பல்லவி

மழையை நம்பி உயிர் வாழும்
மானம் பாத்த சீமையிலே
உழவும் தொழிலும் நன்றாய் ஓங்கவேணும்
உடைப் பஞ்சம் உணவுப் பஞ்சம் நீங்கவேணும் (மழையை)

### அநுபல்லவி

பழையன கழிதலும் புதியன புகுதலும்
வழுவல்ல கால வகையாலே — என்ற
வல்லவன் சொல்லால் வந்த முறையாலே
விளையும் பொருளை எல்லாம் விஞ்ஞான முறையிலே
விருத்தி செய்ய வேண்டும் மக்கள் இனிமேலே — இதை
விவரமாக கேட்டுக்கோணும் தில்லாலே! (மழையை)

### சரணம்

ஓலைக் குடிசை யெல்லாம்
உயர்ந்த மாடி யாகணும் — உப்
பிட்ட கூழும் சக்கரை போட்ட
பாலாக மாறணும்

ஆளையேச்சுத் தின்பா ரெல்லாம்
வேலை செஞ்சேயாகணும் — இனி
அதிர்ஷ்டம் யோகம் என்ற சொல்லை — அக
ராதிவிட்டே எடுக்கணும். (மழையை)

## சுகம் பாவமா?

பாரதச்சண்டெ பழங்கதை அண்ணே
பாத்துக்கிட்டுப் பேசு — அதை நீ
பாத்துக்கிட்டுப் பேசு!

அதுக்கும் முன்னே அமளி உண்டு அறிஞ்சு நீயும்
பேசு அண்ணே — அறிஞ்சு
நீயும் பேசு!

கல்லுயானை கரும்பைத் தின்ன கதை — நீ
அறியாயோ தம்பி
கதை நீ அறியாயோ?

கடலுக்குள்ளே ஓடிடும் கப்பல்
காணலாமே இப்போ — நீ
காணலாமே இப்போ!

பெண்ணும் மண்ணும் வேணும் இன்னு
பேயாப் பறக்கல்லே — அப்போ
பேயாப் பறக்கல்லே!

எண்ணுன் னாலும் சரியாச் சொல்லணும்
அப்பனாணை சொல்லு — அப்போ
இல்லையா இந்த ஆசை சொல்லு!

போட்ட சண்டை கொஞ்சமா — நாட்டுக்காகப்
போட்ட சண்டை கொஞ்சமா

கேட்ட வரமும் கொஞ்சமா? — சாமியைக்
கேட்டவரமும் கொஞ்சமா?

பாட்டுப் பாடி பரமனைத் தேடி
பக்திமானுங்க செய்த காரியம் — பாவி
நீ அறியாய் — படு
பாவி நீ அறியாய்.

அறிந்ததைச் சொன்னா ஆத்திரப்படுவே
அண்ணே கிளறாதே — அதிகமா
அண்ணே கிளறாதே!

ரம்பை மேனகை ஊர்வசி அங்கே
கவனம் வச்சுக்கோ — அண்ணே
கவனம் வச்சுக்கோ!

நாட்டியமாடி நவரசமாடி நல்ல அமிர்தத்தை
நமக்கே ஊட்டி நன்னான நானன்ன
பாட்டும் பாடும்

அந்தச் சுகத்தைத் தேடி அண்ணே!
இங்கே தவசாமே? — சுகம்
இங்கே பாவமாமே? — சரியா?
இங்கே பாவமாமே?

நெற்றிக் கண்ணைத் திறந்து விட்டா
நீறு ஆகும் உலகு
எறிஞ்சு சாம்பலாகும் உலகு!

............ *(பாடல் நிறைவுறவில்லை)*

## விதியா? வினையா? அறிந்து சொல்வீர்!

எளியோர் மனம் படும் பாட்டிலே
எழும் ஓசையாம் தாலாட்டிலே
ஆண்டவன் ஆகாசமதில் தூங்கு கின்றாரே — தினம்
மாந்தரெல்லாம் மாநிலமேல் ஏங்குகின்றாரே — வளர் (நமதாண்டவன்)

பார் தனிலே யாரும் பகவான் பெற்ற பேரே — எனில்
பகைமையோடு பாகு பாட்டைப் படைத்தவர் யாரே?
தாழ்ந்தோ ருயர்ந்தோராக மக்கள் வாழுகின்றாரே! — சிலர்
தனவந்தர் பலர் தரித்திரராய்க் காணு கின்றாரே!

இதுயார் செயல் விதியா? வினையா? அறிந்து சொல்வீரே!
(நமதாண்டவன்)

கோடானு கோடி உயிர்க்கொரு தந்தை யென்றாலே — சிலர்
கோட்டையில் பலர் குடிசையில் குடியிருப்பதெதனாலே? — கூன்
குருடு நொண்டி செவிடர் ஊமை பிறப்பதெதாலே? — நிறை
குறைகளுக்கே இதுவரைக்கும் ஒரு முடிவு தெரியலே!

இதுயார் செயல் விதியா? வினையா? அறிந்து சொல்வீரே!
(நமதாண்டவன்)

## எங்கே சொர்க்கம்?

### தொகையறா

அந்தரத்தில் நீர் பாய்ச்சித் தரு வளர்த்தே
விந்தை மிகு கனி கொள்வார் விநயம் போலாம்
இந்த உலகம் விட்டிறந்த பின்னே
இன்புறும் சொர்க்கமெனில் ஏமாந்து போவீரே! (எல்லோரும்)

எங்கே சொர்க்கம் எங்கே சொர்க்கம்
என்றே தேடுறீர்! ஏமாந்தே ஓடுறீர் — அது
அங்கே இல்லை இங்கே உண்டு அன்பால்
நாடுவீர்! ஒன்றாய்க் கூடுவீர்!! (எல்லோரும்)

தன்னந் தனியே தவம் புரிந்தே
சமாதி யாகப் போறீரா?
சமுசாரம் பிள்ளை சுற்றத் தோடு
வாழ்ந்து கொஞ்ச வாரீரா? இங்கு வாரீரா?
அங்கு போறீரா? உள்ளம் தேறீரா? (எங்கே சொர்க்கம்)

இங்கே இல்லை அங்கே உண்டு என்றே
சொல்லுவார் — அது
அங்கே இல்லை இங்கே உண்டு அன்பால் நாடு வீர்;
ஒன்றாய்க் கூடுவீர்! (எங்கே சொர்க்கம்)

பஞ்சம் இல்லா நாடு — உயர்
மிஞ்சும் வயலும் தோட்டங் காடும்
மேன்மையான சொர்க்கந்தான்! — நெஞ்சில்
ஈரம்; நேசம் அன்பு உள்ளார் காண்பது சொர்க்கம்! — அது
இல்லார் காண்பது நரகம்! — நினைவை
மொய்க்கும் நிம்மதியே சொர்க்கம் — அது
நீதியின் பக்கம் இனி... (எங்கே சொர்க்கம்)

நூலோர் சொல்லும் சொர்க்கம் மேலோகந்தான்! — அன்பின்
மேலோர் கண்ட சொர்க்கம் பூலோகந்தான்!

வேதாந்தியின் சொர்க்கம் விண்ணாட்டிலே — அது விண்ணாட்டிலே!
விவசாயி காணும் சொர்க்கம் இந் நாட்டிலே!

பரதேசியின் சொர்க்கம் தெரியாதது; — மெய்ப்
பாட்டாளியின் சொர்க்கம் உருவானது;
சோம்பேறியின் சொர்க்கம் சுய காரியம் — நல்ல
தொழிலாளியின் சொர்க்கம் பிறர் காரியம்; அங்கேயில்லை
சொர்க்கம் இங்கே உண்டு! (எங்கே சொர்க்கம்)

— *சொர்க்க வாசல்*

## பழமையில் மூடப் பழக்கம் ஒழிப்போம்!

லாலி சுப லாலி — காதலர் — ஜாலி வெகு ஜாலி!
வாலிப வயதும், அழகும் அறிவும்
வளரும் கல்விப் பொருத்தம் — இந்தக்
காலத்துக் கேற்ற சட்டப் பதிவு
கல்யாணமே சீர்திருத்தம்! ஆமா (லாலி)

பணத்துக் காகவே குமரி கிழவனை
மணந்தால் செய்வோம் கேலி — மிகப்
பழமையில் மூடப் பழக்க வழக்கம்
ஒழிப்பதுவே நம் ஜோலி! ஓ...எஸ் (லாலி)

அநா வசியமாய் யாருக்கும் உதவா
ஆடம்பரம் கூடாது — பகுத்
தறிவுக்குப் பொருந்தும் அவசிய மானதை
அறிந்து விடலாகாது! ...வெரிகுட் (லாலி)

ஆணும் பெண்ணும் ஒருவரை ஒருவர்
அறிந்து கொள்வதே நேசம் — இனி
அதுதான் அப்டு டேட் பேஷன் — ஆல்ரைட் (லாலி)

— *வேலைக்காரி*

# ஆகும் நெறி எது? ஆகா நெறி எது?

ஆகும் நெறியெது? ஆகா நெறியெது?
அறிந்து கொள்வீரே! நன்றாய்ப்
புரிந்து கொள்வீரே! (ஆகும்)

ஆஸ்தியைச் சேர்க்கும் சுய நல மார்க்கம்
சாஸ்வதமா? இன்பம் ஏற்படுமா? பூமியில் (ஆஸ்தி)

மக்கள் சமத்துவம் காட்டும் பொதுநல
மார்க்கம் தான் சுகமா?
துன்பந்தான் தருமா? — இதில் (ஆகும்)

காணிக்கை வாங்கிக் கடமையை மறந்து
காலங் கடப்பது அவசியமா? — அது
கதிதரும் என்பது வாஸ்தவமா?

காணரும் அன்பால் நாணயமாகக் கடமையைப்
புரியெனல் அவசியமா? அதற்குடன் பட
மறுப்பது அறிவீனமா? — இதில் (ஆகும்)

சம்சாரம் விடுத்துச் சந்யாசம் அடுத்து
தனிமையிலிருப்பது சாத்தியமா? — அது
எளிதில்லை என்பதில் மனப்பயமா?

சரி சமமாக இருவரும் வாழ்வது தகுமெனச்
சொல்வதில் தரங் கெடுமா? — அதில்
பகைமை கொண்டாலது பயன்படுமா? — இதில் (ஆகும்)

அரசர் தம்மை உருப் போட்டு,
அருமறையாளன் அருள் சீட்டு
அறிவும் வலிவு மெலாங் கொடுக்க
ஆமோ? அது அவசியமா?

உலகு கண்டதோர் நாதன் — என்ற
உண்மை அன்பதே மேவும் — இனிப்
பெருமையாளர் சிலர் வைப்பதும்
முறையிது என்பதும் அவசியமா? — இதில் (ஆகும்)

— *சொர்க்கவாசல்*

## விஞ்ஞானம் வளர்க்கப் போறேண்டி!

விஞ்ஞானத்தை வளர்க்கப் போறண்டி! — மேனாட்டாரை
விருந்துக் கழைச்சுக் காட்டப் போறண்டி!

தஞ்சாவூரு ஏத்தம் எறச்சு
தலைகீழாப் பாடம் படிச்சு
பொஞ்சாதி புருஷன் இல்லாமெ
புள்ளயும் குட்டியும் பொறக்குறாப்புல! (விஞ்ஞானத்தை)

விஞ்ஞானத்தை வளர்க்கப் போறண்டி!
அஞ்ஞானத்தை அழிக்கப் போறண்டி!
அடுத்த நாட்டுக் காரன் போல ஆளக்கொல்லாம
ஊரப் பாழு பண்ணாம (விஞ்ஞானத்தை)

அதுமட்டுமா...?
புஞ்ச நெலத்துப் பருத்திச் செடியில்
பொடவ ரவிக்க வேட்டி காய்க்கப்
பஞ்சைக் கிழவன் தன்னை வாழப்
பருவ மாக்கி நாட்டைக் காக்க (விஞ்ஞானத்தை)

கைத் திறமையைக் காட்டப் போறண்டி — ஒரு கவியப் பாடிக்
காத்து மழையும் காட்டப் போறண்டி!
மாட்டு வண்டிக்குச் சூச்சத்த வச்சு
ஏம், மாமியாருக்கு ஓட்டி ஓட்டிக் காட்டப் போறண்டி!
அதுல ஒன்னையும் ஏத்திக்கிட்டுப் போகப் போறேண்டி!

வீட்டுக் கென்ன செய்யப் போறீங்க — அதையும்
கொஞ்சம் விபரமாக விளக்கிப் போடுங்க...

வீட்டுக்கா?

ஆமா...

என்ன வேணும்?

கேட்டுக்கோ!

நெல்லுக் குத்த மாவரைக்க
நீரெறைக்க மிசுனு...
அல்லும் பகலும்
ஆக்கி அரிக்க அதுக்கொரு மிசுனு

அடச்சே...

பள்ளிக் கூடத்துக்குப் புள்ளங்க போகாம.....
.........................................

முடிஞ்சுதா?....

ஒன்ன மறந்துட்டேன்.

என்னம்மா?

பட்டனத் தட்டி விட்டா ரெண்டு தட்டுல
இட்டிலியும் காபியும் நம்ம
பக்கத்தில் வந்துடணும்;
கட்டுலுக்கு மேல பேனு காத்து சுத்தோணும்;
காலங் காட்டும் கருவியும் வேணும்!

இம்... வேணும் வேணும் அடி பைத்தியம் — நம்ம நாட்டிலே
வீட்டு வேலயச் செஞ்ச பொம்ம னாட்டியப் பாரு
மேனாட்டு நாகரீகம் கொண்ட மேனியப் பாரு
அவ காட்டுக்குப் போவா... களையெடுப்பா...
காரியம் பாப்பா... கஞ்சி குடிப்பா...!

இவ காரில போவா... ஊரச் சுத்துவா
காப்பி குடிப்பா... கண்ணாடி பாப்பா! (சிரிப்பு) (விஞ்ஞான)

## புரிந்து கொள்வீர்!

1. ஆஸ்தீகம் எது? நாஸ்தீகம் எது?
அறிந்து சொல்வீரே! — நன்றாய்ப்
புரிந்து கொள்வீரே!

2. சாஸ்திரம் காட்டும் சுயநலமோகம்
ஆஸ்திகமா? இல்லை நாஸ்திகமா?
மக்கள்
சமத்துவங் காட்டும் பொதுநலத் தியாகம்
நாஸ்திகமா இல்லை ஆஸ்திகமா — இதில் (ஆஸ்தீகம்)

3. காணிக்கை கொடுத்து கற்பூரச் சுடரால்
கடவுளைக் காண்பது ஆஸ்திகமா? — அது
கல்லாமையென்பது நாஸ்திகமா?
காணரும் அன்பால் நாணயமாகக்
கடமையைப் புரியெனல் நாஸ்திகமா? — அதற்
குடன்பட மறுப்பது ஆஸ்திகமா? — இதில் (ஆஸ்தீகம்)

4. சம்சாரி உழைத்துச் சந்யாசி கொழுக்கத்
தருமம் புரியெனல் ஆஸ்திகமா? — அது
சரியில்லையென்பது நாஸ்திகமா?
சரி சமமாக எல்லோரும் வாழ்வது
தகுமெனச் சொல்வது நாஸ்திகமா? — அதில்
பகைமை கொண்டாலது ஆஸ்திகமா? — இதில் (ஆஸ்தீகம்)

5. கருடனைக் கண்டால் கிருஷ்ணா கிருஷ்ணாவெனக்
கன்னத்தில் போடுவது ஆஸ்திகமா? — அதைத்தன்
மதிப்புக் குறைவெனல் நாஸ்திகமா?
அறிஞனைக் கண்டால் அப்பா ஐயா வென்று
பெருமைகொண்டாடல் நாஸ்திகமா? — அதில்
பேதம் பேசுதல் ஆஸ்திகமா? — இதில் (ஆஸ்தீகம்)

6. தோத்திரமாலை கீர்த்தனம்பாடிச்
சுண்டல் புசிப்பது ஆஸ்திகமா? — அதைக்
கொண்டாட மறுப்பது நாஸ்திகமா? — வாய்

வார்த்தையில் கடவுளைப் போற்றாதே! — மாந்தரைத்
தூற்றாமல் இருஎனல் நாஸ்திகமா? — இது
தோற்றாமல் இருப்பது ஆஸ்திகமா? — இதில் (ஆஸ்தீகம்)

7. மொட்டைத்தலைகள் ஒட்டுச்சடைமுடி
சிட்டுக் குடுமிகள் ஆஸ்திகமா? — சுருள்
வெட்டுத் திருமுடி தொட்டுத் திருகிடும்
மீசை விலாசம் நாஸ்திகமா?
கட்டிய காவிகள் ஆஸ்திகமா? — அதைக்
கவுரவக் குறைவெனல் நாஸ்திகமா?
பட்டை நாமங்கள் ஆஸ்திகமா? — அதைப்
பகல் வேஷமெனில் நாஸ்திகமா? — இதில் (ஆஸ்தீகம்)

8. போட்டி போட்டுச் சீமாட்டிகள் வைத்திடும்
பொம்மைக் கொலுவுகள் ஆஸ்திகமா? — அது
வீட்டுவேலைகள் செய்யாதவள் காட்டும்
வேடிக்கை யென்பது நாஸ்திகமா?
தேட்டுக்காகப் பிள்ளை தேவையென்று — திவ்ய
க்ஷேத்திரம் செல்வது ஆஸ்திகமா? — அது
பூட்டும் ஆபரணப் புடவை காட்டும் செல்வச்
சேட்டை யென்பது நாஸ்திகமா? — இதில் (ஆஸ்தீகம்)

9. சேவல்மச்சம் சர்ப்பக் காவடித்
திருக் கொலைக்காட்சிகள் ஆஸ்திகமா? — உயிர்
செத்தது பிழைப்பது வாஸ்தவமா? — அது
கோவில் திருடர் ஏவும் கூட்டுக்
கொள்ளையென்கிறோம் வாஸ்தவமாய் அருள்
அல்லவென்பது நாஸ்திகமா? — இதில் (ஆஸ்தீகம்)

10. அரிசி கோதுமை உருமாத்தி
ஆப்பம் தோசை சப்பாத்தி
அடையும் வடையும் விலாப் புடைக்க
அடைக்கும் விரதம் ஆஸ்திகமா? — அது
உருசி கண்டதோர் நாவின் — அந்த
உணர்ச்சி யென்பதே மேவும் — இதைப்
பெருமையாகச் சிலர் விரதமென்பதை
முறையிலை யென்பது நாஸ்திகமா? — இதில் (ஆஸ்தீகம்)

11. பட்டின் உடைகள் பசும்பொன் அணியொடு
பல்லாக்கு மேனா மேல் வருவார்!
அஷ்டாச்சரம் பஞ்சாட்சரம் முணங்கலும்
ஆலயம் தொழுவதும் ஆஸ்திகமா?
கட்டத்துணியும் கஞ்சியுமின்றிக்
கண்ணீர் பொழியும் எளியாரைக்
காக்கும் கடமைக் கடவுளர் அருளினும்
ஏற்றவை யென்பது நாஸ்திகமா? — இதில் (ஆஸ்தீகம்)

— *சொர்க்கவாசல்*

## ஓ... ரசிக்கும் சீமானே!

ஓ.... ரசிக்கும் சீமானே வா!
ஜொலிக்கும் உடையணிந்து
களிக்கும் நடனம் புரிவோம் — அதை
நினைக்கும் பொழுது மனம்
இனிக்கும் விதத்தில் சுகம்
அளிக்கும் கலைகள் அறிவோம். (ஓ... ரசிக்கும்)

கற்சிலையும் சித்திரமும் கண்டு — அதன்
கட்டழகிலே மயக்கம் கொண்டு, — கற்சிலையின்
கட்டழகிலே மயக்கம் கொண்டு, — வீண்
கற்பனையெல்லாம் மனதில் அற்புதமென்றே மகிழ்ந்து
விற்பனை செய்யாதீர் மதியை! — தினம்
நினைக்கும் பொழுது மனம்
இனிக்கும் விதத்தில் சுகம்
அளிக்கும் கலைகள் அறிவோம். (ஓ... ரசிக்கும்)

வானுலக மோட்சமதை நாடி — இன்ப
வாழ்க்கை யிழந்தவர்கள் கோடி — பெண்களின்ப
வாழ்க்கை இழந்தவர்கள் கோடி! — வெறும்
ஆணவத்தினாலே பெரும்
ஞானியைப்போலே நினைந்து
வீணிலே அலையவேண்டாம் — தினம்
நினைக்கும் பொழுது — மனம்
இனிக்கும் விதத்தில் சுகம்
அளிக்கும் கலைகள் அறிவோம். (ஓ.. ரசிக்கும்)

— *பராசக்தி*

## சோம்பேறி வேதாந்தம்

சோம்பேறி வேதாந்தம்
    சோத்துக்காகாது — வீட்டுக்கு வாங்கோ!
நாம்போறே மோட்சத்திற்கு
    நாயகியே! என்னை நம்பாதே ...ஓ!

மோட்சலோகம் பார்த்ததற்குச்
    சாட்சியுமுண்டா — உங்க
மூளையைக் கொளப்பி விட்ட
    ஆளையுங் கொண்டா — கேப்போம்!

காட்சிப் பிரமாணமது
    கடவுள் சந்நிதியது
சாட்சியாக நிக்கிறது
    சாஸ்திரப் புராணமது!

கண்டவர்கள் விண்டிடாதது
    விண்டவர்கள் கண்டிடாதது.

நீ பாக்கணுமா?

''ஆமா!''

''சரி, உக்காரு.''

''உக்காந்தேன்.''

''கையை இப்படி வச்சுக்கோ''

''வச்சூட்டேட!''

''கண்ணைரெண்டும் முடிக்கோ!''

''மூடிட்டேட''

''சொல்லு''

''என்னாண்ணு?''

...................... *(பாடல் நிறைவுறவில்லை)*

*— விசுவாமித்திரா*

## மானுடத்தின் பரிணாமம்

மானிடன் ஆதியில் வானரம்! படிப்படி
        மாறியதாக... வெளியாச்சி! — அது
மன்பதை உலகில் டார்வின் மேதை
        மண்டையி லெழுந்த ஆராய்ச்சி!
கானகந் தன்னில் விலங்கொடு விலங்காய்க்
        கற்குகைளிலே வசித்தானாம் — பல
காயுங் கனியுங் கிழங்கும் ஊனொடு
        கண்டதை யெல்லாம் புசித்தானாம்.

ஆடைகள் அணிகள் ஏது மில்லாமல்
        அம்மணமாக அலைந்தானாம் — தன்
அன்னைக்கும் மனைவிக்கும் வேற்றுமை தன்னை
        அறியா நிலையில் இருந்தானாம்.
ஜாடைகள் புரிந்தவன் ஓசைகள் பயின்றும்
        கோடுகள் வரைந்தும் பார்த்தானாம் — வளர்
தாவர உரிகளை இலைகளை உடையாய்த்
        தைத்தும் இடையில் சேர்த்தானாம்.

இயல் பூதங்களின் செயலால் உயிர்கள்
        இறப்பதைக் கண்ணால் கண்டானாம் — அதில்
ஏதோ சக்தி உள்ளே இருந்தே
        இயக்குவதாகக் கொண்டானாம் — அந்தப்
பயத்தால் விளைந்த சக்தியை உணரும்
        பருவம் அடையா தலைந்தானாம் — பலப்
பல நூறாண்டுகள் கழிந்தே அறிவுப்
        பாதையில் மெல்ல நுழைந்தானாம்.

கூட்டங் கூட்டமாய்க் குடிசைகள் அமைத்துக்
        கொண்டுங் குழுவை வளர்த்தானாம்
கொஞ்சங் கொஞ்சமாய்க் கல்வியும் கலைகளும்
        குழுவுடன் உண்டாக்கிப் படித்தானாம்
நாட்செல நாட்செல காண்பதற் கெல்லாம்
        நாமங்கள் தந்து குறித்தானாம்
நால்வகை யாய்த்தன் மரபினை வகுத்து
        நாகரீகத்தை வளர்த்தானாம்.

நாலாய்ப் பிரிந்ததில் ஆலாம் விழுதுகள்
    போலே மேலோர் முளைத்தாராம் — மக்கள்
நடைமுறை யதனால் நன்மையுந் தீமையும்
    நடப்பதையுங் கண்டுபிடித்தாராம்.
காலா கதியினில் அழியா நீதி
    நூலாம் மறைகளும் சமைத்தாராம் — அதைக்
கடவுள் திருவாய் மலர்ந்தரு ளியதென
    கருத்தினில் இருத்திட அமைத்தாராம்.

அருளே ஆண்டவன், அறிவே தெய்வம்
    அன்பேதான் பரசிவ மென்றார் — மற்றும்
அரிதாம் நல்ல குணங்கள் உள்ளார்
    ஆண்டவன் தன்மை ஆமென்றார்!
மருளாம் இருளை மனத்துள் நீக்கி
    மக்கள் சேவை செய்வீரே!
மக்கள் சேவை மகதேவர்க்கே
    வணக்கம் என்றே கொள்வீரே! (மானிடன்)

## பண்டார சந்நிதி

பண்டார சந்நிதி சைவப் — பழமான தம்புரானும்
    படுவெலையாக்கப் பட்டாரே — துஷ்டர்களாலே
    பரகதி சேர்க்கப் பட்டாரே — அந்தோ கொடுமை! (பண்)

பட்டம் கொள்ளும் திருக்கைலாய
    பரம்பரை பாத்தியவான் — ஸ்ரீ ல ஸ்ரீ (பண்)

பத்தரை மாத்துத் தங்கபஸ்பம்
    நித்தம் உண்டு உடல் புஷ்டியடைந்த (பண்)

பாலொடு பாதாம் பருப்பை அரைத்து
    பாகத்துடன் உபயோகித்திடு மடப் (பண்)

பாட்டும் பரத நாட்டியம் பார்ப்பார்
    பகலில் இரவில் பஜனைகள் புரியும் (பண்)

பலவித அபிஷேகங்கள் கொள்ளுவார்
    பல்லக்கினிலே பவனி செல்லுவார்
உலகமநித்தியம் என்று சொல்லுவார்
    ஓம(த்)தைத் திருவாயில் மெல்லுவார். (பண்)

## உடன் பிறந்த பூ

கனவிலே கண்ட கனியுமானதே
நினைவிலே கொண்ட ஆசை — நானே (கனவிலே)

கனகமாமுடிக் காவலன் செல்வி
மனைவியா மெனும் காதல் (கனவிலே)

அழிவிலாததும் அழகு வாய்ந்ததும்
அறிவிலான கலைஞானம் — மேலாம் (அறிவிலான)

வளரவானுயர் புகழும் வேண்டும் நான்
மனதிலே கொண்ட ஆசை (கனவிலே)

உடலில் வாழ்வுறும் உயிரை மேவுமென்
உடன் பிறந்த ஒரு பூவை — எந்தன் (உடன்பிறந்த)

மடமையாளரின் கொடுமையாலந்தோ
மயிலை நான் பிரிந்தேனே! (மயிலை)

ஓதும் வாய்மையாம் நீதிநேர்மையைச்
சூதும் வாதும் வெல்வதாமோ பொய்யாம் (சூதும்)

காதல்தன்னையே காமம் வெல்வதோ
கால பேதமோ யாதோ (கனவிலே)

## வெண்பா இலக்கணம் - வெண்பாவில்

சீரொருநால், மூன்றுதனிச் சீரொடுநால் மூன்றாகிக்
கூறுவிளங் காய்முன்னே நேர்மாமுன் — சேர்நிரைய
பண்பார்நாள் காசுமலர் பாமுடி வின்பிறப்பாம்
வெண்பாவுக் கான விதி.

## மூட்டைப்பூச்சியும் மூளையும்

மூட்டைப்பூச்சி வீட்டுக்குத்தேவை
யெம்பொண்டாட்டி
மூளையுள்ளவ நாட்டுக்குத்தேவை
சொன்னாப்புரிஞ்சுக்கோ!

வீட்டுக்காரர் தூங்கிடாமல்
தேட்டையைத் தடுக்கும் — மூட்டை
தேட்டையைத் தடுக்கும்.
விஞ்ஞானத்தால் நாட்டைநல்ல
விருத்திசெய்திடும் — மூளை
விருத்திசெய்திடும் — அதனால் (மூட்டை)

தேகந்தன்னைக் கெடுக்கும்ரோக
நீரைஉறிஞ்சிடும் — மூட்டை
நீரை உறிஞ்சிடும்.
தேசத்துரோகக் கும்பல்தன்னைச்
சீர்திருத்திடும் — மூளை
சீர்திருத்திடும் — அதனால் (மூட்டை)

ஆசனத்துமேலமர்ந்து வேலைபார்க்கும் ஆளை
அசரவிடாமலே உஷார்படுத்தும் மூட்டை!
ஆளையேச்சுக்கிட்டே காலங்கடத்தும் ஆளை
அறிவுதிருந்தவைத்து வேலைவாங்கும் மூளை! (மூட்டை)

நாக்காலிமேலிருந்து தூக்கம்போடும் ஆளை
நைசாக்கடிச்சு டூட்டி நடத்தவைக்கும் மூட்டை!
ஜோக்கா ஏச்சுக்கிட்டே சோறுதின்னும் ஆளை
தொழிலைப் பண்ணச்சொல்லி வழியைக்காட்டும்மூளை! (மூட்டை)

மூட்டைப் பூச்சியால்,
கோட்டுப்போட்டுக்கிட்டு கேட்டைக்காக்கும்
கூர்க்காசம்பளம் மிச்சம்!
குலைக்கிற நாய்க்கிக் கொழுப்பு முட்டைபால்
ரொட்டிச்சிலவுகள் மிச்சம்!

மூட்டைப்பூச்சியால் மாசம் ஒண்ணுக்கு
நூத்துக்கு மேலே மிச்சம்!

மூளையாலே, எவ்வளவுமிச்சம் ஆகுது தெரியுமா?
கேளு,
ஏட்டில் இன்கம் டாக்ஸை யேய்க்கிறவ
இடுப்பையொடிச்சாப் பல லச்சம்
இறந்தா வரி, இனி இருந்தாவரி — இதில்
எத்தனையோ பல லச்சம்

நாட்டில் சுபிட்சங்காண மூளையால்
நாலா வகையிலும் மிச்சம் — அதுமட்டுமா?

மூன்றாம்வகுப்பு ரயில் பிரயாணிகள்
மூட்டையைக் காக்கத்தேவை — மூட்டை
மூட்டையைக் காக்கத்தேவை!

நான்காம்ஜாதி முன்னேற்றங் காண
நல்லவர்மூளை தேவை — நாட்டுக்கு
நல்லவர்மூளை தேவை.

மூட்டைப்பூச்சி ரயிலுக்குந் தேவை!
யெம்பொண்டாட்டி
மூளையுள்ளவெ செயலுக்குந்தேவை! (மூட்டை)

## போலித் துறவிகள்!

படங்கொண்டு பரவுதலை விடங்கொண்ட நாமமுள பாம்பு போலும்
பாங்கறுவண் ணான்கழுதை தான்புரண்டு சாம்பல்அணி பண்புபோலும்
சடங்குளிரச் சலதிநதித் தண்ணீர்தோய் தருமுதலை, தவளைபோலும்
தருக்களடர் வனத்திடை மலைக்குகையுள் வரிப்புலிகள் தனித்தல் போலும்

கடன்கொண்டான் கொலையாளி கள்வன்கவர் மெண்டாருக் கஞ்சி நின்றான்
காதல்மனை மக்களில்லான் கடும்பாடின்றிக் காசினியை ஏய்க்கும் வீணர்
அடவிமலைக் குகைபுகுந்தென்? அலகில்நதி மூழ்கியுமென்? சாம்பல்காவி
அணிவதனால் ஆத்மசுத்தி யாவதற்குண் டானவகை யறிகுவாரோ?

## செப்படி வித்தைகள் சூது!

மாயமாகிய ஜாலந்தனிலே
வந்த மாது நானே — உடனே
மாறும் எந்தன் உருவமாகுமே!

ஆசையா லெனை யாரும் தொட்டால்
அருவ மாகுந் தானே! — ஆனால்
ஆடல் பாடல் எல்லாஞ் செய்குவேன்! (மாய)

கண்மூடும் நேரம் மாங்காச் செடியும்
காயும் கனியாம் உன்னாலே!
காணும் நாழிகை மூணே முக்கால்
ஆனால் மறையும் தன்னாலே!

எண்ணிப் பாரு இதுவெல்லாம் பொய்யே
எதுக்கும் உதவாதே.... (மாய)

பில்லி சூனியம் செய்வார் தமக்குப்
பெண்ஜாதி பிள்ளையுந் தங்காது;
பித்தலாட்டமே ஆனது செப்படி
வித்தைகள் எல்லாம் வெறும் சூது!

நல்ல காரியம் எதுவும் அதனால்
நடைபெற முடியாதே... (மாய)

## தனிப்பாடல்

குருமுறை கொண்டாடிவந்த கோவிந்த சாமிக்(கு)
இருபது ரூபாய்கள் ஈதல் — தருமம்
பகைத்தவரைப் பாலிக்கும் பண்புபா ராட்டும்
நகைச்சுவை நாயகனே! நல்கு!

(கோவிந்தசாமி என்பவருக்கு, ரூ. 20 தரச்சொல்லிக் கவிராயர் கலைவாணருக்கு எழுதிய சீட்டுக்கவி இது. ஆயிரக் கணக்கில் பையில் வைத்திருக்கும் கலைவாணரிடம் அப்போது 20 ரூபாயே இருந்தது. என்னிடம் இருபது ரூபாயே இருப்பதை எப்படியுணர்ந்தார் கவிராயர் என்று வியந்தாராம் கலைவாணர்.)

## ஆனா விலாசம்!

ஆனா விலாசந் தானப்பா! — உலகில் பெரியது
அதற்கிணை யானது வேறேதப்பா? (ஆனா)

மூனாப் பசங்களையும் நானா விதங்களிலும்
முன்னேறச் செய்கிறதும்,
முதலாளி யாக்குறதும், (ஆனா

கச்சேரி பண்ணுகிற கலிகால பாகவதர்
சிச்சை கற்கும் பெண்மணிகள்
ஸ்நேகம் பிடிக்கிறதும் (ஆனா)

பக்திவிதங் காணாத பாகவதர் பணத்தை யெல்லாம்
அத்தர் செண்டு வியாபாரி
அபகரித்து வாழ்கிறதும் (ஆனா)

சங்கீதக் குயில்களுக்கும், சதிராடும் மயில்களுக்கும்
சர்வண்டுப் பயல்க ளெல்லாம்
சபையேறிப் பேசுவதும் (ஆனா)

டானா டூனாத் தெரியா ரவுடிப் பசங்க ளெல்லாம்
மேனாட்டுக் காரன் போலே
வெளிச்சம்போட்டுத் திரியறதும் (ஆனா)

சொந்த முயற்சி யில்லான்
தொழில் செய்யப் பயிற்சி யில்லான்
சந்தர்ப்ப வசத்தினால் தனவந்தன் ஆகிறதும் (ஆனா)

— *மணமகள்*

## சிந்தை நோயும் தீருமா?

என் சிந்தை நோயுந் தீருமா?
தீயன் சூழ்ச்சி மாறுமா?
ஸ்நேகம் ஒன்று சேருமா? (என்)

தாயில்லா ஏழை நான்
தரணிமீது வாழ்வெனோ?
சகாயம் தானில்லாது பெருமை
தாழ வீணில் மாள்வெனோ?
தந்தை அன்பைக் காண்பெனோ?
சாந்தி தேடிப் போவேனோ...? (என்)

மணம் பெறாத மல்லிகை
மாண்பு குறைதல் போலவே
மாதும் நானும் சீரிலாப் பேதையாதல் ஞாயமா?
மாசிலாத தெய்வமே
தேவியே கண் பாரம்மா! (என்)

— *காவேரி*

## வீரம் செறிந்த முகம்

வீரஞ் செறிந்த முகம் சுடர்போலே — அருள்
மேவும் இரண்டு விழிமலர் போலே — குண
ஈரம் படிந்த மனம் இயல்பாலே — எதும்
ஈயும் கரங்கள் மொழி நிரை கோலே!

மும் மாவேந்தர் காத்த தமிழ் மரபாளன் — முத்து
மாணிக்க மென்ற எழில் பெயராளன் — கற்ற
பாவேந்தர் சாற்றும் அவன்புகழ் வாழி — வளர்
பார்மீது வாழி மிக நீடூழி!

வீரஞ் செறிந்த இளஞ்சூரியனைக் காணாமல்
சீருலாவும் தாமரைப்பூ மலர்ந்தது பார் இங்கே!
நேரினில் நான்கண்ட அதிசயமே எந்தன்
நெஞ்சறியும் இந்த ரகசியமே!

— ***சொர்க்கவாசல்***

## பசுவைப் பாதுகாக்கணும்!

பாது காக்கணும்! பாங்கு பாக்கணும்!
பழகி வைக்கணும்! — பசுவை ஆமாம்!
பக்குவமாக அக்கறை யோடே
ராவும் பகலும் (பாது)

பாலுந் தயிரும் நெய்யுடனே
பசுமாட்டுச் சாணி, கோமயம் — அதைப்
பாரிலுயர்ந்தோர் பஞ்ச கவ்விய மெனச்
சாப்பிடணுங்குது சாத்திரம்!

சீலமான காமதேனு
தேவர்களின் க்ஷேத்திரம் போலே
சித்திரமும் காட்டுவதாலே
திருட்டுப் பசங்களைச் சிவப் பழமாக்கும்
திருநீறதிலே உண்டாவதாலே! (பாது)

பொட்டும் பருத்திக் கொட்டையும் தவிடும்
புண்ணாக்கும் கழுநீர் வைக்கணும்;
கட்டணும், கறக்கணும், கழுவணும் — அடிக்கடி
கட்டாந் தரைகளை மாத்தணும்!

காட்டுக்கு முடுக்கணும், மேய்க்கணும், — நம்ம
வீட்டுக்குத் திருப்பணும்; தேய்க்கணும் — அதன்
காளை கன்றுகளை வளர்க்கணும் — வண்டி
கவலைக்கும் உழவுக்கும் பழக்கணும்!

முட்ட வந்தா மூக்கணத்தை மாட்டணும் — கொஞ்சம்
எட்டி நின்னு கொம்ப ஆட்டணும்!
அடிக்கப் படாது —
பொட்டு வச்சு மஞ்சளும் பூசணும்
பொம்பளைங்க கவனிக்க வேணும்!

தொட்டுப் பாக்கணும்,
சொறிஞ்சு கொடுக்கணும்!
தட்டிக் கொடுக்கணும்;
தடவிப் பாக்கணும்!

ஏய்....
உன்னையில்லை
பசுவை (தொட்டு) (பாதுகாக்கணும்)

— *பாரிஜாதம்*

## சிரிப்பு!

சிரிப்பு...! இதன் சிறப்பைச்
சீர்தூக்கிப் பார்ப்பதே நமது பொறுப்பு!
கறுப்பா வெளுப்பா என்பதை எடுத்துக்
காட்டும் கண்ணாடி சிரிப்பு! — இது
களைப்பை நீக்கிக் கவலையைப் போக்கி
மூளைக்குத் தரும் சுறுசுறுப்பு!

துன்ப வாழ்விலும் இன்பம் காணும்
விந்தை புரிவது சிரிப்பு! — இதைத்
துணையாய்க் கொள்ளும் மக்களின் முகத்தில்
துலங்கிடும் தனிச் செழிப்பு!!

பாதையில் போகும் பெண்ணைப் பார்த்துப் பல்
இளிப்பதும் ஒரு வகைச் சிரிப்பு! — இதன்
பலனாய் உடனே பரிசாய்க் கிடைப்பது
காதறுந்த பழஞ் செருப்பு!!

சிந்திக்கத் தெரிந்த மனித குலத்துக்கே
சொந்தமான கையிருப்பு! — வேறு
ஜீவ ராசிகள் செய்ய முடியாத
செயலாகும் இந்தச் சிரிப்பு!

இது
அதிகாரிகளின் ஆணவச் சிரிப்பு!
இது
அடங்கி நடப்பவன் அசட்டுச் சிரிப்பு!
இது
சதிகாரர்களின் சாகசச் சிரிப்பு!
இது
சங்கீதச் சிரிப்பு!! (சிரிப்பு)

— *ராஜாராணி*

## சும்மா இருக்காது!

சும்மா இருக்காதுங்க — அது
சும்மா இருக்காதுங்க — எது?
சுறுசுறுப்புள்ளவங் கையும் காலும்! (சும்மா)
என்ன செய்யும்?

நோண்டும், தோண்டும்,
தாண்டும்;
எப்படி?

பக்கத்திலே உள்ளவனை நோண்டும்; — கடப்
பாரை எடுத்துக்கிட்டும் தோண்டும்!
தக்க தொரு வாலிபப் பருவத்திலே
தைரியமாகவே சுவரெட்டித் தாண்டும் — அது (சும்மா)

அம்மா தாயே அப்பா சாமின்னு
அன்னங் கின்னங் கேக்காதுங்க — வாயி
அன்னங் கின்னங் கேக்காதுங்க! — போடாட்டி
ஆண்டவனைத் திட்டாதுங்க!

தம், முன்னோர்கள் தேடினதை
மூக்கு வரை யேத்திக் கிட்டு
மூடனைப் போலிருந்து உடல் வளர்க்காதுங்க!

பட்டை நாமஞ் சாத்திக் கிட்டு
மத்தியான வெய்யிலிலே
கோவிந்தம் கோவிந்த மென்று
பாதையில் புரண்டு பிச்சை எடுக்காமல், — அந்தப்
பரந்தாமன் பேரை இழுக்காமல் — தினம்
கஷ்ட மொடு பாடு பட்டு
கஞ்சியும் குடிச்சிக் கிட்டு

காலங் கடத்தாமலே வேலை செய்யும் உடம்பு
தன்மானம் விட்டுப் பிட்டுத்

தனவந்தன் காசுக்கு
சலாங் கிலாம் போடாதுங்க!

சாமியார் வேடமிட்டு — கை
சாப்பாட்டைத் தேடிக் கிட்டு
சத்திரத்துக் கோடாதுங்க! — கால்
சத்திரத்துக் கோடாதுங்க!! — கை (சும்மா)

— *நல்ல காலம்*

## நமப் பார்வதி பதே!

நமப் பார்வதி பதே! — ஓம் நமப் பார்வதி பதே!

பிள்ளையே இல்லேன்னா கதி மோட்சம் இல்லேன்னு
பிறரிடம் ஸ்வீகாரம் பெறுவார்கள் முன்னால்
பின்னாலே பிள்ளைகள் பிறந்தாலோ ஸ்வீகாரம்
சம்போ மகாதேவா அம்போன்னு போகும் அட — நமப்(பார்வதி)

உண்ணாத உபவாச விரதங்கள் கொள்ளுறார்
ஒருசட்டி உப்பு மாவை உள்ளுக்குத் தள்ளுறார்;
முன்னுக்கும் பின்னுக்கும் முரணாக நடக்கிறார்
அரகர சம்போ மகாதேவா நமோ.... நமப் (பார்வதி)

தன்சுகம் எண்ணாத தியாகிகள் சிலருண்டு
தன்னலம் தேடுகிற பாவிகள் பலருண்டு!
நன்மைக்குத் தீமையே செய்திடும் கூட்டம்
நாயாக அலையுதே சங்கரா.... நமப் (பார்வதி)

தன்வீடு போனாலும் பக்கத்து வீடுதான்
சாம்பலாகக் கொள்ளி வைக்கிறான் முட்டாளு!
அன்னியன் வாழ்வதைச் சகியாத படுபாவி
அரகரா ஆயிடுவான் சம்போ மகாதேவா — நமப் (பார்வதி)

— *தூய உள்ளம்*

## சின்னச் சின்ன வீடு கட்டி...!

சின்னச் சின்ன வீடு கட்டிச் சிங்கார வீடுகட்டி
ஒண்ணாக ஆடினோம் முன்னாலே!! — நமது சொந்தம்
இந்நாளில் போவதோ பொன்னாலே? — மண்

வீட்டைக் கட்டியபோது
மனக் கோட்டை கட்டிய வாழ்வு; — அறி
வூட்டும் பெற்றோர் வார்த்தையினால்
ஆகலாமோ தாழ்வு?
கூட்டுறவு தேய்வதோ? பணத்தாலே — நமது சொந்தம்
கூடாமல் போவதோ புவி மேலே? (சின்ன)

தொன்று தொட்டு நேர்மையினால்
வந்த நேசம்
ஒன்று பட்டு வாழாமல்
செய்வது மோசம்!
நன்றி கெட்ட பேர்கள் செய்கையாலே — நமது சொந்தம்
இன்று கெட்டுப் போவதோ பொருளாலே! (சின்ன)

— *மருமகள்*

## உணர்வைப் பிரிக்க வழியுண்டோ?

உண்மையான உறவுமுறை உணர்ந்திடாமலே
உறவாடுதுபார் உள்ளமிரண்டும் பாசத்தினாலே
உடலை இங்கு பிரிந்தபோதும் சூழ்ச்சியினாலே
உணர்வைப் பிரிக்க வழியும் உண்டோ பூமியின் மேலே (தாயும்)

அண்ணன் தம்பி அன்னையென்று அறிந்திடாமலே — அலை
மோதி உள்ளம் துடிப்பதைப் பார்! பாசத்தினாலே
உடலை இங்கு பிரிந்தபோதும் சூழ்ச்சியினாலே
உணர்வைப் பிரிக்க வழியும் உண்டோ பூமியின் மேலே (தாயும்)

அநீதியாலே அறுந்ததடா உறவு முன்னாலே — உயர்
நீதியினால் விளைந்ததடா! பிரிவு இந்நாளே!
உடலை இங்கு பிரித்தபோதும் சூழ்ச்சியினாலே
உணர்வைப் பிரிக்க வழியும் உண்டோ பூமியின் மேலே? (தாயும்)

— *நீதிபதி*

## தவறு யாரிடம்?

எவரிடத்தும் தவறு இல்லை
எனக்குத் தான் தொல்லை!
இன்னதுதான் செய்வ தென்றும்
புரிய வில்லை அம்மா! (எவரிட)

கரம் பிடித்த கணவன் சொல்லைக்
கடந்திடுவேனோ? ரத்தக்
கலப்பில் வந்த குலக் கொடியைக்
கைவிடு வேனோ? (எவரிட)

இருவருக்கும் குறை வராமல்
உதவி செய்வேனோ? — இதில்
குறைவு வந்தால் நான்
உலகில் உய்வேனோ? (எவரிட)

காதல் தன்னை மறக்கச் சொன்னால்
சாதலாகுமே! — அவர்
கண்ணியத்தை இழக்கச் சொன்னால்
மோதலாகுமே! (எவரிட)

சாதலின்றி மோதலின்றிச்
சங்கடந் தீராதோ? பெரும்
சங்கடந் தீராதோ? — பெரும்
சந்தோஷந்தான் எங்கள் வாழ்வில்
வந்தே சேராதோ? அம்மா.... (எவரிட)

— *விவசாயி*

## கானாங் குருவி...

கானாங் குருவி காட்டுப் புறா
வானம்பாடி வக்காத் தாரா
காடெ கவுதாரி மைனா இருக்குதுங்க
வாங்கலையோ வவ்வா நய்னா

பாட்டுப் பாடும் பறவை கூட
வந்திருக்குதுங்க — இதோ
நோட்டம் பாத்துப் புடிச்சதுண்ணா
வெலையக் கேளுங்க — (காடை)

## உறவும் இல்லை! பகையும் இல்லை!

உறவுமில்லை பகையுமில்லை ஒன்றுமேயில்லை!
உள்ளதெல்லாம் நீயேயல்லால் வேறெ கதியில்லை! — இனி
யாரும் துணை யில்லை! (உறவு)

எனது வாழ்வின் புனித ஜோதி எங்கே சென்றாயோ?
இதயம் குளிரச் சேவை செய்யும்
நினைவும் வீணானதே!
கனவும் பாழானதே! (உறவு)

முடிவிலாத துன்பமதிலும் இன்பம் வேறேது?
கெடுதி செய்வார் தனிலும் மேலாம் நண்பர்தானேது?
அடையமுடியாப் பொருளின்மீது ஆசை தீராது!
அபிமானம் மாறாது!! (உறவு)

குளம் நிறைந்தால் ஜலம் வழிந்தே
வேறு வழி யேகும்!
குமுறிப் புகையும்
எரிமலையும் ஓர் நாள்
அமைதி யாகும்!
மனதில்பொங்கும் துயர வெள்ளம் வடியும்
நாளேது? — ஒரு
முடிவு தானேது?... (உறவு)

— *தேவதாஸ்*

## தாயும் சேயும் பிரிந்ததைப் பார்!

தாயும் சேயும் பிரிந்ததைப் பார்! சதியதனாலே
சன்மார்க்கமில்லாக் கொடியவரின் தன்னலத்தாலே! (தாயும்)

ஆசைப்பேயின் அடிமைகளாய் ஆனதினாலே
அநியாயமெல்லாம் மனாஈரமில்லார்
செய்வதைப்பார் தன்மனம்போலே!
தீயஎண்ணம் நிறைந்த நாட்டில் பிறந்ததினாலே
தூயஉள்ளம் துடிப்பதைப் பார் துயரத்தினாலே!
பாயும் வேங்கைப் புலியின் முன்னே மானதுபோலே
பழிபாவ மஞ்சாக் கயவர்களின் செய்கையினாலே (தாயும்)

## மிட்டாய்ப் பாட்டு

ஜிலுஜிலு வென ஜொலிக்கும் மிட்டாய்!
திங்கர்து உங்கர்த லங்கிர்த மிட்டாய்!

சீனாச் சக்கரை மிட்டாய் போனா வாராது,
சிங்காரமான மிட்டாய் வாங்கலையோ மிட்டாய்.. மிட்டாய்!

புத்தம் புதுசான மிட்டாய், பொம்பாய் மிட்டாய்,
பூனா மிட்டாய், புசிக்கத் தகுந்த மிட்டாய்!
புகழ் வாய்ந்த பஞ்சு மிட்டாய்!

தித்திப்பில் சிறந்த மிட்டாய், சீனியிலே செய்த மிட்டாய்!
சென்னைப் பட்டணத்தார்கள்
தினமும் வாங்கி ருசிக்கும் மிட்டாய்!

பால் குடிக்கிற குழந்தைங் கெல்லாம் சூப்பற மிட்டாய்,
பல்லில்லாத கிழவன் கிழவி சப்பற மிட்டாய்!
பாலாலே செய்த மிட்டாய்!
பைசா இல்லாப் பிள்ளைகளுக்கு
பாட்டுண்டு மிட்டாயில்லை!

சாமி கோயில் திருவிழா!
சந்து பொந்து தெருவெல்லாம்
சந்தைக் கடையில் விக்கிற ஜவ்வு மிட்டாயி!
மாமியாரைக் காணாமெ மருமகளும் வாங்கி வச்சு
மறைவாகத் தின்கிற மிட்டாய்
ஜவ்வு மிட்டாய்! மிட்டாய்! மிட்டாய்!

இழுத்து விட்டா நீண்டுக்கும், சுருட்டி விட்டாச் சுருண்டுக்கும்!
இருட்டில் தின்னாக் கூட இனிக்கும்; — ஜோடி
இல்லாமே சாப்பிட்டாத் தான் கசக்கும்!

காலணாவை வீசி விட்டால் கைக் கெடிகாரம்;
அரையணாவை விட்டெறிஞ்சா ஆணி முத்தாரம்;
முக்காலணாக் கொடுத்தா முடிக் கலங்காரம்;
முழுசா அணா கொடுத்தா
அப்பத் தெரியும் நம்ம சமாச்சாரம்! (ஜிலு ஜிலு)

— *நீதிபதி*

## எல்லாம் வயிற்றுக்கு!

ஆடுவதும், பாடுவதும் எதுக்கு?
நய்னா எதுக்கு?
ஓடுவதும், தேடுவதும் எதுக்கு?

.... எல்லாம் இதுக்கு!
ஆடுவதும் பாடுவதும் இதுக்கு! — ஜனங்க
ஓடுவதும் தேடுவதும் இதுக்கு!

ஏய்... மாடு மாதிரி மனுஷனை ஏத்திக்கிட்டு
ரிக்ஷா இழுக்கிறது — எதுக்கு?

..... அது இதுக்கு!

நாடு விட்டு நாட்டுக்கு நாதாரிக் கூட்டமாய்
நம்மவங்க போறாங்க — எதுக்கு?

.... அது இதுக்கு!

ஆலையிலே வேலை வெட்டி செய்யாமல்
ஆளுங்கள்ளாம் பண்ணுவ தெதுக்கு?

.... அது, காலங் கெட்டுப் போனதாலே
வரவு செலவுக்குக்
கட்டுப்படியாகலே வவுத்துக்கு — இப்போ
கட்டுப்படி யாகலே வவுத்துக்கு (ஆடுவ)

முட்டாப் பசங்க மூளையுள்ள பசங்க
முகஸ்துதி பண்ணுவது எதுக்கு?

பட்டணத்தைக் காத்துக்கிட்டு
தட்டுக்கெட்டு வந்த தெல்லாம்
பார்பராடா பண்ணுவது
எல்லாம் இதுக்கு!
நய்னா இதுக்கு!!

சினிமாப் பாக்கிறது கூடாது அதனால்
தீமையின்னு சொல்லுறாங்க எதுக்கு?

அது, தனியாப் பேசுகிற விஷயமடா — இப்போ
சமயமில்லே நாவை அடக்கு — சும்மா அடக்கு! (ஆடுவ)

பொம்பளக்கிப் பின்னாலே
பொட்டி போழை தூக்கிக்கிட்டு
ஆம்புள்ளைங்க சுத்துறாங்க எதுக்கு?

அது பொழப்பத்த பசங்க
ஆமா
வெறும் புண்ணாக்குப் பசங்க!

அப்படியா?

சுத்தப் பொழப்பத்த பசங்க
புண்ணாக்குப் பசங்க
புவ்வாவுக்கு! வேறெதுக்கு? — எல்லாம்
புவ்வாக்கு! வேறெதுக்கு?

காக்கா புடிக்கிறது எதுக்கு? — டேய்!
காக்கா புடிக்கிறது எதுக்கு?

அது இதுக்கு!

நய்னா... கப்ஸா அடிக்கிறது?

.... இதுக்கு!
.... இல்லை இதுக்கு!

டேய்... முன்சாமி! சில போக்கிரிப் பசங்க
ராத்திரி ரிக்ஷாவில்
ஜோக்கு காட்டுவது எதுக்கு?

.... அது அதுக்கு!

— *பொன்னி*

## அழகு செய்வது ஆடை!

ஆணும் பெண்ணும் அழகு செய்வது ஆடை!
ஆடை ஆடை மேலாடை ஆடை!
அடுத்தவன் பார்த்து ஆசைப் படுவது
ஆடை ஆடை ... பட்டாடை ஆடை!

மானங்காப்பதும் மதிப்புக் கொடுப்பதும்
புடவே புடவே.. வேட்டி... புடவே — இதை
வாங்கி உடுத்திப் பரீட்சை பாரு — ஒரு
தடவே தடவே...

பப்பள பள பள பள பளீரெங்குது யார் புடவே?
பளீரெங்குது யார் புடவே? — இதைப்
பாட்டி கட்டினா குமரி போலே
நோட்டங் காட்டும் பார் — புடவே
நோட்டங் காட்டும் பார்!

தப்பூ தப்புன்னு போட்டடிச்சா
சுருங்கிப் போகாது — சரிகை
சுருங்கிப் போகாது!
தண்ணியை விட்டுச் சாயம் வெளியே தாண்டிப்
போகாது — சாயம் — தாண்டிப் போகாது!

இப்போது அந்த ரகத்தில் ஒண்ணே ஒண்ணுதா
இருப்பது ஒண்ணே ஒண்ணுதான் — இதை
எளிய விலைக்கு விடப் போறேன்!
வேணுமின்னுதா உங்களை
வேணு மின்னுதா? இதைப் பார்த்தீங்களா?

நாட்டிய மாடுகின்ற நட்சத்திரங்களெல்லாம்
ஜோக்காப் போட்டுக் கொள்ளும் அங்கி! — சரிகை
நாளைப் போகாது கசங்கி — இது அங்கி
பசு மாட்டுத் தோலைப் போலிருக்கும்!

மூட்டுப் போட்டுக் கட்டுகின்ற
முகம் மதியர்க் கேற்ற லுங்கி!
இந்நேர மெல்லாம் விட்டது பெரிசு!
இப்ப விடப் போறது சிறிசு!!

மூக்குப் பொடி போடுகின்ற மூளையுள்ள ஆள்களுக்கு
முக்கியமாய் வேணு மிந்தக் கைக் குட்டை!
மூணு பணம் ஜோடி யொண்ணு
வேணு மின்னா வாங்கிக் கோங்கோ!

மூட்டை கட்டப்போறேன் இனிமே உட மாட்டேன்!
ஏலம் உட மாட்டேன்!! உடமாட்டேன்!! (ஆணும்)

— *தூக்குத்தூக்கி*

## எல்லாம் மாயை தானா?

எல்லாம் மாயை தானா? பேதை
எண்ணம் யாவும் வீணா?
ஏழை எந்தன் வாழ்வில் இனி
இன்பம் காண்பேனா? (எல்லாம்)

இணைபிரியாத சிநேகம் மறந்தனையோ? — உன்னை
ஈன்றவர் சொல்லை மீறவும் பயந்தனையோ? — என்
ஏழ்மையினாலே பிரேம கபாடம்
தானே மூடியதோ? — விதி
தான் விளையாடியதோ? (எல்லாம்)

கனவிலும் மறவாக் காதல் நினைவுடனே — முன்
கண்டறியாத ஒருவன் துணையுடனே — மன
வேதனை என்னும் தீயதனால் நான்
வெந்தே மாள்வதா? — இது
நன்றோ தேவதாஸ்? (எல்லாம்)

— *தேவதாஸ்*

## குரங்காட்டி பாடல்!

தென்பழனி மலைமேல் வசிப்பவனே!
திருப்பதி மலைமேல் இருப்பவனே!
அன்பர்களை ஏமாற்றி ஆகாரம் தின்பவனே!
அயோத்தி ராமர் அடி தாங்க வந்தவனெ!

தென்னிலங்கை சென்றவனே! தீயை வச்சவனே!
சீதையெக் கண்டவனே! சிரஞ்சீவி யானவனே!
கரணம் போட்ரா ராமா! கடலைத் தாண்ட்ரா ராமா!
காவடி தூக்குடா ராமா! கையெ நீட்டி
ஐயா கிட்ட காசக் கேள்றா ராமா

ராம ராம ராமாரே ராமாரே ராமா
ராம ராம ராமாரே ராமாரே ராமா

நல்ல வழியிலே நடப்பவனுக்கிது காலமில்லடா ராமா!
நாகரீகமாய் வாழணுமின்னா நன்றி மறந்திடு ராமா!
உள்ளதைச் சொல்லி உதை வாங்காதே
உன்னை மாத்திக்கோ ராமா!
யோக்கியம் பாத்தாப் பாக்கியம் ஏது?
யோசிச்சிப் பார்றா ராமா!

பட்டப்பகலில் கொல்லைப்புறமாய
எட்டித் தாவுடா ராமா!
எட்டித்தாவி உச்சஸ்தானத்தில்
ஒட்டிக் கொள்ளடா ராமா!
ஒட்டிய ஸ்தானம் ஒடிஞ்சி விழுந்தா
ஓட்டம் பிடிடா ராமா!
ஓட்டம் பிடிச்சி குற்றாலத்தில்
ஓய்வு கொள்ளடா ராமா!

வெள்ளைச் சட்டைக்கிச் சாயம் போட்டு
வேலையைப் பார்றா ராமா!
வேலை முடிஞ்சாச் சலவைக்குப் போட்டு
வெளுத்து வாங்கிக்கோ ராமா!

வவ்வால் போலே வலுத்த கொம்புக்குத் தவ்வுடா
— நீ தவ்வுடா
இந்த வாழைப் பழத்தை
வாயிலெ நல்லாக் கவ்வுடா — நீ நல்லாக் கவ்வுடா! (ராம ராம)

கண்ணாலே பாத்துப்புட்டு காசு கொடுக்காமே
கம்பி நீட்டுகிற கனவான்களே!
வேடிக்கே பாத்துப்புட்டு வேட்டியே ஒதறிக்கிட்டு
வெளியே போகும் தனவான்களே!
முதுகு மேலே அடியுங்கோ!
முகத்து மேலே அடியுங்கோ!
வவுத்து மேலே அடிக்காதீங்கோ! — ஐயாமார்களே
வவுத்து மேலே அடிக்காதீங்கோ! (ராம ராம)

*— டாக்டர் சாவித்திரி*

## ஆளை ஏய்க்காதே!

பெண் : ஆசையாகப் பேசிப் பேசி
ஆளை ஏய்க்காதே மாமா...!
காசைப் பெரிசா நெனச்சி மனசைக்
கஷ்டப் படுத்தாதே ஆமா! (கஷ்டப்)

ஆண் : பணத்தை எண்ணிக் கணக்குப் பாக்கும்
மனுஷன் நானோடி? — பெண்ணே!
குணத்துக்காக எதையும் செய்யும்
குமணன் அல்லோடி? கண்ணே! (குமணன்)

பெண் : போடாத நகை என்ன போட்டே? — யாரும்
போடாத நகை என்ன போட்டே? — இந்தப்
பொய் வார்த்தை சொன்னாப் பொறுக்கவே மாட்டேன்!
பாடகம் தண்டையோடு கொலுசு பீலி
பழசையே மாத்தியே என்ன பண்ணினே — புதுசு? (ஆசை)

*— பைத்தியகாரன்*

## திருப்பதி வெங்கடேசனே!

திருப்பதி வெங்கடேசனே — ஒன்னே நம்பி
இருக்கிறான் இந்தத் தாசனே! (திருப்பதி)

### அநுபல்லவி

பொறுப்பான ஜனங்கள் இங்கே
புண்ணியந் தேட வாராங்கோ!
புசிக்கவும் நாங்க கேட்டாப்
போடா இன்னுட்டுப் போறாங்கோ! (திருப்பதி)

### கண்ணிகள்

கரட்டுக் கல்லுப் பாதை இருக்க
சிமெண்டு ரோட்டெப் போட்டாங்க!
காலாலேறச் செஞ்சாங்க!
வரப்போக எல்லாருக்கும்
வசதியாக்கி வச்சாங்க!....
வாங்கித் தின்னும் பிச்சைக்காரர்
வவுத்தில் மண்ணெப் போட்டாங்க! (திருப்பதி)

பொங்கல் புளியோதரை வடை லட்டு — சீடை
பூந்தி தோசை அதிரசம் உப்பட்டு — எல்லாம்
உன்பேராலே செஞ்சு படைச்சுப் பின்னே
உனக்கு மில்லே! எனக்குமில்லே! — கேட்பதற்கு
ஊருக்குள்ளே யாருமில்லையே?...
கோவிந்தா... கோவிந்தா... (திருப்பதி)

உள்ளது போதாதுன்னு உண்டியலில்
பணத்தைப் போட்டு
ஒசந்த பணம் வேண்டி வரத்தைக் கேக்கல்லே! — நாங்க
ஒருசாணு வயித்துக்கான உணவே தவிர வேறே
ஒண்ணுமே அதிகமாக நினைக்கலே!
பொருளைக் கேட்டா
அடிக்க வாராங்கோ!
பிச்சை எடுத்தா போலீஸ் வானில்
புடிக்க வாராங்கோ! (திருப்பதி)

திருட்டும் புரட்டும் உருட்டும் செய்து
திருப்பணிகள் நடத்தி வைத்து
சீமானென்றே காட்டிக்கிறவன் ஒசந்துட்டான்!
தில்லும் முல்லும் செய்யாம லுன்
திருநாமம் செல்லிச் சொல்லி
ஜீவனம் பண்ணுகிறவன் அசந்துட்டான்!!

— செல்வன்
ஏழை இல்லாமலே செய்திடு! — மனசில்
சிறுசு பெரிசு பாகுபாட்டைக் கொறைச்சிடு! — உந்தன்
தரிசனம் எல்லோருக்கும்
சரிசமமாய்க் கொடுத்திடு!
தெய்வம் நீ என்ற பெயரைத்
தேசத்தில் நிலைநாட்டிடு!
பசித்த வயித்தைப் பட்டினி போடாதே — பசியாத வயித்தில்
பாலும் சோத்தை அடைச்சு விடாதே!! (திருப்பதி)

— *மஞ்சள் மகிமை*

## ஆனந்தம் இங்கே!

ஆனந்தம் இங்கே இருக்குது பாருங்க!
கொஞ்சம் பாருங்க கண்ணாலே
பாருங்க — அது
வேறெங்கோ இருக்குதுன்னு தேடாதீங்க! (ஆனந்தம்)

கும்பிடு போடு — ஊஹும்
குனிஞ்சு கும்பிடு போடு!
தாம்தகிட நிமிர்ந்து வளைஞ்சு நெளிஞ்சு வந்து
நடந்து சுழண்டு எட்டி (கும்பிடு)

ஜம்புடு பண்ணு பங்கிடு பண்ணி ஜம்புடு பண்ணு
ஆ ஆ சரியாப் போச்சு
தாங்கு தின்னுதக — தாங்கு தின்னுதக
தினுதினு தக — தினு தினு தக — திமி திமி
தணங்குதக — தணங்குதக — தப்ளாங்குதக (ஆனந்தம்)

— *செல்லப்பிள்ளை*

## பூவோ பூவு!

பூ... பூவோ பூவு!
பூவோ பூவு! மணம் வீசும் புதிசான பூவு....!
பொம்பளெ தலையில் வச்சா
புருசன் வாடை பிடிக்கும் பூ! (பூவோ)

தேவாலயம் தேரோட்டம்
திருநாளில் விக்கிற பூ
செவந்தி செண்பகப் பூ
ஜாதிப் பூ மகிழம் பூ
செந்தாழம் பூ மனோரஞ்சிதப் (பூவோ)

கல்யாண மாப்பிள்ளை பெண்ணும்
கையிலே பிடிக்கும் செண்டு!
கச்சேரி பஜனைக் கெல்லாம்
கதம்ப மாலை உண்டு!
கட்டி வெச்ச மல்லிகை முல்லை மொட்டு! — எங்
கைமுழ நீளம் ஒண்ணரைத் துட்டு! வா! (பூவோ)

கூத்துப் பாக்கும் பொம்பளை வக்கிற
குண்டு மல்லிகைப் பூ — கடல்
காத்து வாங்கும் பொம்பளை வக்கிற
கனகாம்பரப் பூ — எம்ப் பூ
வாங்கலையா? வயசுப் பொண்டுகளெல்லாம்
கண்டு மயங்கற பூ ... பூ... பூப்பூ....!

மாடிமேலே இருக்கும் பெண்கள்
தலையிலே வச்சா — கீழே
வாசமடிக்கும் மந்தாரப் பூ வேணுமா?
பூவு வேணுமா?
கடைவீதியில் விக்கிற பூ காயிதப் பூ — அது
கண்ணுக்கழகு வாசனையில்லா டூப்பு — இது
கொடிப் பூ வளர்
செடிப் பூ — தினம்
கொண்டையி லிருந்தா மதிப் பூ (பூவோ)

கோமான் மகள் வாங்கறது
மரிக் கொழுந்து மலர்ந்த ரோஜா
ஆசைக்கேத்த அழகுப் பூ
அம்மாத்தா வாங்கும்பூ
வாசம் மிகுந்த பூ
மனதை மாத்தும் பூ
மயக்கம் கொடுக்கும் மதன காம (பூவோ)

— *வனசுந்தரி*

## யாருக்குப் புத்தி இல்லை?

இத்தினி கூடப் புத்தி கிடையாது — துளி
இத்தினி கூடப் புத்தி கிடையாது!

ஆண் : எனக்கா?
பெண் : உனக்கல்ல?
ஆண் : பின்னே யாருக்கு?
பெண் : என்னெப் பெத்து வளர்த்திட்ட அம்மா அப்பனுக்கு!

ஆண் : பித்தம் பிடிச்சாப்போல் பேசுறாய் — நித்தம்
பெத்தவங்க மேலே, என்னடி குத்தம்?

பெண் : அதெக் கேக்கறீங்களா?

ஆண் : ஆமாண்டி சொல்லு.

பெண் :

மதுரை ஜில்லாக் கலெக்டர் சன் கிச்சுக்கும்
முன்சீப்பு பிள்ளே பியே பிச்சுக்கும் — என்னை
செல்லமய்யர் பேரன் குப்புக்கும் கேட்டாங்க!

சேலம் வக்கீல் ராம சுப்புக்கும் கேட்டாங்க!
வில்லிபுத்தூராரு வீட்டுக்குங் கேட்டாங்க!
வேம்பத்தூரார் வந்து வெகுபாடு பட்டாங்க! அதுமட்டுமா?
கொள்ளேகாலம் கோயமுத்தூர் சித்தூராரும்,
கும்பகோணம் தஞ்சாவூராரும் கேட்டாங்க!

உள்ளூருக்குங் கேட்டு ஊஹூஒண்ணு சொல்லிட்டு
உனக்குத் தாரை வார்த்த எனைப் பெத்த பேருக்கு (இத்தினி)

## சீனாச்சிட்டு! சிகினாப் பொட்டு!

சீனாச்சிட்டு சிகினாப்பட்டு
சின்ன ரயில் ஏறிக்கிட்டாச் செங்கல்பட்டு!
சேத்துப்பட்டுக் காத்துப்பட்டு
செவந்து வெடிச்சுதாம் ரோசாமொட்டு!

ஐசா லங்கடி லட்டு
பைசா வகலப் பொட்டு
அம்மாவோட ஐயா போறார்
வெளியே பொறப்பட்டு — ஹை (சீனா)

அல்ட்டாப்பு சோக்குக்காரி பெரிய முத்தம்மா!
அதுக்குமேலே டீக்குக்காரி சின்ன முத்தம்மா! — இந்த
ரெண்டுபேருஞ் சேந்துக்கிட்டா ஒருத்தெம்பத்துமா — இல்லே
கண்டகண்ட பக்கமெல்லாம் ஊரைச்சுத்துமா! — ஹை.
(சீனாச் சிட்டு)

ஜினுக்குத்தாங்கிடி ஜினுக்குத்தாங்கிடி
ஜினுக்குத்தாங்கிடி ஜினுக்குத்தான்!
சின்னப்பொண்ணு அம்மாக்கண்ணு
சும்மாவந்தா எனக்குத்தான்!! (சீனா)

— *குறத்தி மகன்*

## உழவன் முன்னாலே!

ஒழவன் முன்னாலேதான் — இந்த
ஒலகஞ் சுத்தணுமவன் பின்னாலேதான்!

மழையெ நம்பி வாழ்வானுங்க — இந்த
மனிதர்களை எதிர்பார்க்க மாட்டானுங்க!

பயறு பச்செ தானியத்தைப் பக்குவமாக்கி — வீட்டிலே,
பாதுகாத்து வெதச்சிடுவான் பருவங்கண்டு காட்டிலே,
உயிர் வாழும் ஜனங்களுக்கு உணவுப்பொருளை நாட்டிலே,
ஒண்ணுக்கு நூறாகத்தான் உண்டாக்குவான் பாட்டிலே!

— *பாட்டாளியின் வெற்றி*

## சவாலே! சமாளி!

சவாலே... சமாளி!
சவாலே சமாளி படத்துக்குப் பேரு!
கவாலி கொளத்துக்குள்ளே டவாலி பாரு!

குளிக்கிறாப்புலே குளிக்கிறா
குட்டியெப் பாத்து இளிக்கிறா
வழக்கம் போலத் தின்னுபோட்டு
வவுத்தெ வவுத்தெ நெளிக்கிறா — ஹை

ஐசா லங்கடி மொட்டு,
பைசா அகலப் பொட்டு;
சைசாக் கண்ணெ வெட்டு,
நைசா வந்து ஒட்டு!

அல்டாப்பு ஜோக்குக் காரி பெரிய முத்தம்மா!
அதுக்கு மேலே டீக்குக்காரி சின்ன முத்தம்மா!

முன்னாலே வந்தவங்க மூடிப்புட்டாங்க!
மூடிப்புட்டாங்க!
பின்னாலே வந்தவங்க தொறந்து வச்சாங்க!
தொறந்து வச்சாங்க!
பையிலே காசுபணம் நெறைஞ்சுது — இப்பக்
கையிலே இருந்ததெல்லாம் கொறைஞ்சுது!

நாம்பரெண்டு நமக்கு ரெண்டிருந்தா
நாட்டுக்கு நல்லதின்னு சொல்லி விட்டாங்க!
ஆம்பளைக்கு ஆப்புரேசன் பண்ணி வுட்டாங்க!
பொம்பளைக்கு லூப்புன்னு மாட்டி வுட்டாங்க! (சவாலே சமாளி)

— *குறத்தி மகன்*

## ஆடும் மயில்!

நான் நெனைக்கிறமாதிரி எல்லாம் உனக்கு இருக்குது
அயாம் டைரக்டர் — ஆக்டர் — அன் ப்ரொடியூசர் (நான்)

ஆடும்மயில் அழகாய்ப் பாடுங்குயில் — உன்
ஆசையினால் ஆனந்தமாய் நானே! (ஆடும்)

வாடைதரும் தேன்மலரில் வண்டுறையும் சீராய்
உன்னோடுறையும் கலா நிலா ஓவியம் பாராய்! (ஆடும்)

லோட்டஸ் புஷ்பம் போலே உனது பேசு — இந்த
லோகந்தன்னை வசியம் செய்யும் ஐசு!
பாடுங்குயிலே ஆகும் உந்தன் வாய்சு!
பவளந்தன்னைக் கவனம் செய்யும் லிப்சு!
வயசு — சைசு — நைசு
எல்லாம் பஸ்ட் கிளாசு — எங்கே
இப்படிக் கொடு ஒரு போசு.

மேவிய காதலை விழியாலே பேசி
விலகாமல் சதா இன்பம் பெற யோசி — தினம்
மேலான ராசி — உனை — விடமாட்டேன் நேசி — இனி
மேதினிமேல் தாரா உந்தன் சரஸ விலாசி (ஆடும்)

## நாகரிகக் கோமாளி!

நாட்டுக்குச் சேவை செய்ய
நாகரிகக் கோமாளி வந்தானய்யா (நாட்டு)

ஆட்டம் ஆடி, பாட்டுப் பாடி — நல்ல
அழகான ஜதையோடு வந்தானய்யா!
மோட்டாரை விட்டிறங்கி வந்தானய்யா!
முன்குடுமி சீவிக்கிட்டு வந்தானய்யா!
ராட்டினம் போல் சுழன்று வந்தானய்யா! — நம்ம
ராஜ்ஜியத்தைச் சுற்றிப் பார்த்து வந்தானய்யா!

தச்சோம் கிழிச்சோம் ஜரிகை
வெண்பட்டு என்பட்டுக் கிழிஞ்சது போ!!!

*— நல்ல தம்பி*

## பணத்தை வெச்சுட்டுக் கையைக்காட்டு!

கைலாயங் குடகுமலை பொதியமாமலை — எங்க வட
கந்தசாமி கோயில் கொண்ட கழுகுமாமலை — எங்கமலை!

கலங்கொம்பு ஏலம் மலைப்பாம்புத் தோலு
கஸ்தூரி யிருக்குது யே அம்மே...!
புலித்தோலிருக்கு நகமிருக்கு
பல்லிருக்குது ஏ ஆயி...!

வைகுண்ட கைலாச வழிகாட்டும்
நோய் ரக்கை கண்ட செந்தூர மாத்திரை உண்டு!
வாங்காமெ என் ஆளைப் பாக்குரெ
மனம் வசமற்ற பெண்ணுக்கும் ஆணுக்கும்
வசமாக்க வசிய மருந்துண்டு கொடுக்கிறேன்... உங்க
வருத்தங்கள் நீங்க நானிருக்குறே
வாங்கய்யா... வாங்கம்மா!

காடயெறகு கானாங்கோழி
காட்டு மயில் பீலி
காசில்லாம ஓசி கேட்டா
கடுக்கா கொடுப்பேன் வாங்க.... (டீயோ)

பொய்யே இல்லாமே கடந்து
போனதுஞ் சொல்வேன் — குறி
மெய்யாகத் தானே மேலே
நடப்பதுஞ் சொல்வேன் — உங்க
பைய்யே அவுத்து பணத்தை வெத்தலை
பாக்கு மேலே வச்சுப்புட்டு — ஓ
அய்யாமார்களே! எங்கிட்ட கையெக்
காட்டுங்க பார்ப்போம்! (டீயோ)

## குல்லாப் போடோணும்!

போடோணும் — குல்லாப் போடோணும்
நாம நல்லா இருக்க நாடு மதிக்கக்
குல்லாப் போடோணும்
காலமறிஞ்சு கோலம் போடணும்.

குறிப்புத் தெரிஞ்ச ஆளுங்கள்ளாம்
குல்லாப் போடறாங்க
கூட்டம் கூட்டி நாட்டு மக்களைக்
குல்லாப் போடறாங்க!

செல்வாக்குள்ள ஆளுங்கள்ளாம்
குல்லாப் போடறாங்க — அதைச்
சில்லறைப் பசங்க காபி அடிச்சு
மாட்டிக்கிறாங்க... (நாம நல்லா)

வெள்ளை கருப்பு சிகப்புக் குல்லா
வித விதமா வாங்கணும்
வினயமாகச் சமயம் போலத்
தினுசை மாத்திப் போடணும்.

மதியில்லா மனிதர்களும் பதவியில் வரவேணுமின்னா
ஊரும்பேரும் தெரியாதவன் ஊர்வலம்
வரவேணுமின்னா
இடம் பொருள் ஏவல் பாத்து
ஏமாந்த சமயம் பாத்து (போடோணும்)

இது சாதாக் குல்லா இது ஜரிகைக் குல்லா
இது பட்டுக் குல்லா இது பனியாக் குல்லா
இது பரம பாகவதர் போடுங்குல்லா பஜனைக் குல்லா
இது பாட்டுகள் பாடி ஆடும் பக்தி பஜனைக் குல்லா

உலக மக்கள் சமயம் பாத்து
உதை கொடுப்பதொரு குல்லா
கலகம் செய்து கட்சியின் பேரால்
காசு சேர்ப்பதொரு குல்லா குல்லா... (போடோணும்)

— *செல்லப்பிள்ளை*

## நாகப்பா!

பொண்டாட்டி புருஷனுக்குப் பலமான சொந்தமே
பிள்ளை குட்டியான பின்னே பிரியாத பந்தமே!
படுபாவி பதந்தன்னில் பாம்பே கடிக்குமென்றே
பழிதேடலானேனே பார்மீது நானே — ஐயோ ஓஓ....

மங்கல மாங்கல்யம் மல்லிகைப்பூப் போச்சே
மன்னவன் தன்னோடு வாழ்க்கையும் போச்சே
நங்கையின் மேலன்பு நல்கிடும் நாகப்பா
நாதனின் உயிர்மீள நீயன்றி யாரப்பா?

மண்ணுலகில் ஊர்வனத்தை மிதித்தானே — எந்தன்
மணிமுடிமீது காலில் உதைத்தானே — முன்னம்
எங்கள் குட்டிகளை வதைத்தானே — அந்த
முற்பழியும் பிற்பழியும் முடித்தேனே
இவன் வாழமாட்டான் இனி மீளமாட்டான்
விதி யாரைவிட்டது? விதி யாரை விட்டது?

பசுமாட்டுப் பால் கோழியண்டம் தாரேன்
பலகார பட்சணங்கள் வேறுவேறு பண்டம்
இசைபாடி பாதம் போற்றித் தண்டம் செய்வேன்
இப்போதே தீர்க்கவேணும் என் நாதன் கண்டம்.

செத்தவன் பிழைத்தது ஜெகத்து மீதிலே
எப்பவும் கிடையாது தெய்வநீதி

இதுசெய்வதேது இனி
ஜீவனம் போனது போனதுதான்!
இவன் வாழமாட்டான் இனி மீளமாட்டான்
விதி யாரைவிட்டது? விதி யாரை விட்டது?

பத்தினி நானே என்பது எவரும் தெரியவே — இந்தப்
பார்மேலே சுடும் அக்கினிபற்றி எரியவே — துஷ்டப்
பாம்பு நீ அறியவே குற்றம் யாவும் ஒழியவே!

## காதல் மலர்!

மாறாத சோகந்தானோ?
யாரோடு நான் சொல்வேனோ?
வளம் பெறும் காதல்
மலராது போமோ?

மாறாத சோகந்தானோ?
யாரோடு நான் சொல்வேனோ?
வளர் பெறும் காதல்
மலராது போமோ?

பெரியோர்கள் காரியமே
சரியென்றே நான் கொள்ளவோ?
உரிமையாம் நேசமே
சிறிதென்றே தள்ளவோ?
விலையான பாண்டம் போலே
நிலைமாறிப் போனேன் நானே!

மானே உன் ஆசை
மணவாளன் நானென்றே
மாண்போடு கூறவே
வகையேதும் காணேனே?
மலரோடு உறவே கொண்டு
குலவாத தேனே யானேன்?
வளம் பெறும் காதல் மலராது போமோ? (மாறாத)

*— மஞ்சள் மகிமை*

## குறவஞ்சியின் குறி

பன்றிமலை பனிமாமலை பவழமலை
பழனிமலை எங்கமலை
குன்றோரமாய்க் குடிவாழுவோம் குறி செல்லுவோம்,
குறவர்குலம் எங்க குலம்!
நன்றிகெட்ட ஜனங்கள் வாழும் நாகரீக நாட்டிலே
ஒன்றுசேர முடியாதென
ஒதுங்கினோம் மலைக்காட்டிலே! (பன்றி)

தெந்தினனாதினனா தினாதெந்தி
தினதெந்தினாதினனா — ஹை (பன்றி)

செந்தினை மாவிடிப்போம் தேனெடுப்போம்
தின்னத்தினம் படைப்போம் — ஹை
சிறுத்தைப்புலி பிடிப்போம் தோலெடுப்போம்
சிங்காரப் பாய்விரிப்போம் — ஹை (பன்றி)

தொந்திக்கடவுள் தம்பி
கந்தக் கடவுள் எங்கள்
சொந்தக்கடவுளாகச் சிந்தைக்குள் குடிவைப்போம் (தொந்திக்)

ஆட்டம் பார்த்து ஆளைப் பார்த்து நோட்டம்
பாக்கும் ஐயாமாரே!
வேட்டியை மறந்துடாதீங்க — மேலே போடும் (வேட்டியை)
பாட்டைக்கேட்டு பல்லைக் காட்டி நோட்டம்
பாக்கும் சிப்பாய்மாரே
கோட்டையை உட்டுடாதீங்க — ஏ — ஐயாமாரே (கோட்டையை)

வேடிக்கையா ஐயாக்கண்ணு வெளியே பாக்குது
வேறெபக்கம் பெரிச்சாளி உள்ளே நுழையுது
கண்ணடிச்சு ஐயா இங்கே பொண்ணெப் பாக்குது
காரியமா வேறெபக்கம் கதையும் நடக்குது
தோலிருக்கவே பழத்தில் களை மறைஞ்சுது; அதுபோல
ஆளிருக்கவே வந்தவேலை முடிஞ்சுது — வர்றேன்

— *வனசுந்தரி*

## மாதவி தாசர்கள்!

மாதவி வீடெண்ப திதுதானோ?
மாலையிட்டாள் வீடு இதுதானோ?
தாம்பூலம் தந்தாள் வீடு இதுதானோ? (மாதவி)

வாங்க மதனாங்க வரவேணுங்க! நீங்க
வந்து இந்த மஞ்சமீது உட்காருங்க!
பாங்கிமார்களே பலகாரம் பண்ணுங்க — நீங்க
பசும்பாலைக் காச்சுங்க டிக்காஷன்
காப்பி போடுங்க போங்க!

மலரும் வண்டென இருவரும்
மருவும் சொந்தம் கொண்டிட
மாதவியான பெண்மானே! உன்மேல்
காதல் கொண்டோடி வந்தேனே!
மன மோகன ரதியே! எனதாருயிர் நிதியே!
மண வாயிலடி வந்து மாலையிட்ட மயிலே!
மாதவியான பெண்மானே!

சத்தியம் செய்தால் நம்புவேன் இந்தத்
தையலைப் பிரியே னென்று
மெய்யாக மனமகிழ்ந்து (சத்தியம்)

உத்தமி மாதவியே! உமை பரமேசன்
உண்மையாகச் சொல்லு கிறேன்
உனக்கு நான் தாசன் எத்தினமும்
உன் மேல் விசுவாசன்! (மாதவி)

— *நீதிபதி*

## ஆளை ஆளைப் பார்க்கிறார்!

ஆளை ஆளைப் பாக்குறார்
ஆளை ஆளைப் பாக்குறார்
ஆட்டத்தைப் பார்த்திடாமல்
ஆளை ஆளைப் பாக்குறார்!

பாட்டினில் ராகம் தாளம்
கேட்க இங்கு யாரும் இல்லை;
நாட்டியம் என்றே சொன்னால்
கூட்டத்தில் குறைச்சலில்லை! (ஆளை)

சேட்டைகள் செய்துமே
காட்டுறார் தங்கப்பல்லை;
கல்யாண ஆசையாலே
கண்ணைக் கண்ணைக் காட்டுறார்! (ஆளை)

செந்தாழம் பூவைக் கண்டு
தீராத மோகம் கொண்டு
திண்டாட்டம் போடுகிறார்
நாற்காலி யோடுருண்டு
சொந்தங் கொண்டாட எண்ணிச்
சும்மா சும்மா பார்க்கிறார்! (ஆளை)

சிகரெட்டை ஊதித் தள்ளிச்
சேர்மீது துள்ளித் துள்ளிச்
சிநேகிதர் தம்மைக் கிள்ளிச்
சிரிக்கிறார் ஏதோ சொல்லி!
சிங்காரம் பண்ணுறார்
அங்கொரு ரொக்கப் புள்ளி
ஆட்டத்தைப் பார்த்திடாமல்! (ஆளை)

— *ரத்தக்கண்ணீர்*

## நரிக்குறவர் பாட்டு!

சிங்கப்பூருக் காட்டுக்குள்ளே தேடிப்போனேனய்யா — நான்
தேடிப்போனேனய்யா;
சிறுத்தை போலே ஆளைப் பாத்துச்
சீறிச்சு ஒரு மிய்யா!
குழிதோண்டி மண்ணைப் பறிச்சி — ஏங்
கோணிப்பையை விரிச்சி

இப்படிக் குனிஞ்சு அப்படி வளைஞ்சு
இப்படி அளிஞ்சு அப்புறம் ஒளிஞ்சு
நாங், குப்புறப்போட்டு அமுக்கிப் புடிச்சுக்
கொடைஞ்செடுத்த ஜவ்வாது! ஜவ்வாது!

நாங், கொல்லிமலைக் காட்டுக்குள்ளே
சுள்ளி பொறுக்கப் போனேன்;
முள்ளாம் பன்னியைப் பாத்துக்கிட்டு
மொறைச்சுது ஒருபூனே
வாங் கோழிக்குடலு இறைச்சி — அதைக்
குறுக்க மறுக்க எறைச்சி
வாயை அடக்கிக் காலை மொடக்கி
இப்படிக் குக்கி மேலே எக்கி
ஏங் கூடையைப்போட்டு மூடிப்புடிச்சுத்
தேடியெடுத்த ஜவ்வாது! ஜவ்வாது!

இது கும்பகோணம் கடைத்தெருவில்
கொழுத்த வெலைக்கு விக்கிறது;
கொண்டுவந்து கொடுப்பதாலே
கொறைஞ்ச வெலைக்கு விக்கிறது!

இது சங்கீதக்காரரெல்லாந் தடவிப் பாத்தது —
கையாலே தடவிப் பாத்தது — இது
தஞ்சாவூருக் காரரெல்லாஞ் சபாசுன்னுது. (சிங்கப்பூரு)

## தேசப்போக்கு... நல்லால்லே!

தில்லாலங்கடி தில்லாலங்கடி
தில்லாலங்கடி தில்லாலே
தில்லாலங்கடி தில்லாலே
தேசம் போற போக்கப்பாத்தாப்
பேசக் கூட நல்லால்லே... (தேசம்)

தில்லாலங்கடி.... நல்லால்லே!

நாடோடி நடனமாது
ராஜாங்கத்தைக் கெடுத்திட்டா

தில்லாலங்கடி.... நல்லால்லே!

உழுது வெதைச்ச உழைப்பாளி
உணவில்லேங்குறா... கையிலே — பணமில்லேங்குறா
பணங் கொழுத்த மனுசெங்கிடைத்த அரிசி
குணமில்லேங்குறா... சோறு — மணமில்லேங்குறா

புளியங் கொட்டையைத் தின்னதாலே
புள்ளை செத்துப் போச்சா — பகல்
கொள்ளை நடந்தாச்சா.

தில்லாலங்கடி... நல்லால்லே!

காட்டிலிருக்கும் கரிகாலன் நாட்டுத் தலைவனாகணும்
.... நாட்டுத் தலைவனாகணும்.

அந்த ஆட்டக்காரி சேட்டையோடு அஞ்சாம்
படையை ஒழிக்கணும்
அஞ்சாம் படையை ஒழிக்கணும்!
பாட்டாளியை வளர்க்கணும் — நல்ல
படிப்பாளியை மதிக்கணும்!
பண்டம் மாற்றிப் புசிக்க ஜனங்கள்
பகைமை நீங்கி வாழவேணும்!!

தில்லாலங்கடி... .... நல்லால்லே!

— *மா்மயோகி*

## மருந்தோ மருந்து!

காச்சல் குளிரு கண்ணுவலி காதுவலி
காமநோய் நாநூத்து
நாப்பத்தெட்டுக்கும் மருந்தோ... மருந்து!

மருதைமலை பொதிய மலை மருந்தோ மருந்து!
பிடிவாதம் ரோகம் வயித்துக் கடுப்பு
மனோ வருத்தம் தீரவே... (மருதை)

சொரி சிரங்கு பொறி கரப்பான்
சுரங்கள் மேக சூலைக்கும்
காமாலை கண்டமாலைக்கும் — முழு
பைத்தியக்கார மூளைக்கும்
மருந்தோ... மருந்து! சஞ்சீவி
மருந்தோ.. மருந்து!

பாடாத குரலும் பாடக்
குயிலுக் கழுத்து லேகியம்!
ஆடாத காலும் ஆட
மயிலுக் காலு சூரணம்,!
வீடான வீட்டிலிருக்க வேணுமிந்த வேரு — இதை
வெந்நீரில் உரைச்சுக் கொஞ்சம்
வீங்கின பக்கம் தடவிப்பாரு!
மருந்தோ... மருந்து!
சஞ்சீவி மருந்தோ... மருந்து!

கருத்த முடியும் வெளுக்கா திருக்க
காக்காச் சிறகுத் தயிலமிது!
காலம் போன வாலிபம் திரும்பக்
கருங்குரங்குக் கற்பமிது!
பெருத்த உடம்பைக் குறைக்கும் மருந்து!
பேதிக்கும் சகல வியாதிக்கும் மருந்து!
பெண்ணுக்கும் இருக்குது ஆணுக்கும் இருக்குது!
பெரிய மனுசன் சிறுபுள்ளைக்கும் இருக்குது
மருந்தோ.. மருந்து! சஞ்சீவி மருந்தோ... மருந்து!

## சிறையின் சிறப்புகள் !

சங்கர சங்கர சம்போ — இந்தச்
சாமியார் விஷயத்தில் ஏனிந்த வம்போ?
தாய் வயிற்றில் பத்துமாதம் — சிறை
தானிருந்தவர்க்கு என்ன ப்ரமாதம் (சங்கர)

கடன்காரர் காணாத இடமே — இது
கடன்காரர் காணாத இடமே — மனதைக்
கலக்கித் தெளிய வைக்கும்
கம்பி சூழ் மடமே! (சங்கர)

பேத மிங்கே கிடையாது — ஆள்
பேத மிங்கே கிடையாது! — ஆசைப்
பெண்ணென்னும் பேய் உன்னைப்
பிடிச்சி முக்காது! (சங்கர)

— *கிருஷ்ணபக்தி*

## கனவிதுதான்!

கனவிதுதான் நிஜமிதுதான்!
உலகினிலே எனையார் சொல்லுவார்!
விதி யார் வெல்லுவார்? (கனவி)

இள வயதின் நினைவினிலே
ஏக்கமெனும் இருள் சூழ்ந்திடலாம்
ஒளி மாய்ந்திடலாம்
மனம் ஓரிடமும் உடல் வேறிடமும் — இரு

கூறானதும் விதிவசமே
சிறுபோதுடனே வாழும்
நறுமணம் மலரானதும் வெகுதூரம் செல்வதுபோல்
காதலின் தன்மை விலகிப் போவது உண்மை (கனவி)

நிறைவேறாத ஆசை வளர்வதும் ஏனோ?
நிலைபெறாததும் ஏனோ? வினை தானோ?
எது நேரினும் அழியாத ஒரு மனம்
ஒன்றாகிய மெய்க் காதல் எந்நாளும் இன்பம்
பிரிந்தால் காதலே துன்பம்! (கனவி)

— *தேவதாஸ்*

## இளைஞர்களுக்கு....!

தேசப்படங்கள் சரித்திரங்கள் பார்க்காமல்
சினிமாப்படங்களைப் பார்க்கின்றீர்! — அதில்
வேஷம் போடும் ஸ்டார்கள் வீட்டுப்புறம் உள்ள
ரோட்டைச் சர்வே செய்து அளக்கின்றீர்!

காசுதந்து வாங்கி, கண்றாவிப் படங்களைக்
கால் சட்டைப் பைக்குள்ளே மறைக்கின்றீர்! — பின்னும்
கையில் வைத்துக் கொண்டும் காதல் பாட்டுப் பாடிக்
காகிதத்தில் முத்தம் கொடுக்கிறீர்!

இப்ப, நல்லபிள்ளைகள் மீது உங்களாலே — அவ
நம்பிக்கையாச்சுதடா — சொந்த
நாட்டுக்கும் வீட்டுக்கும் உபயோகமில்லாத
நாளைப்போக்கற பசங்களா!

## சைக்கிள் மேல் தங்கப் பொம்மை!

சைக்கிள் வண்டி மேலே — பசுந்
தங்கநிறப் பொம்மை போலே — நீ
தனியாச் செல்லலாமா? — இவரைத்
துணையாய்க் கொள்ளலாமா? — லேடீஸ்
கட்டழகி உன்னுடைய பேட்டி — ரெண்டு
கண்களுக்கு நல்லதொரு பார்ட்டி — நீ
காலாலே இடுகிற டூட்டி — என்
கையாலே எப்போதும் செய்வேன் சீமாட்டி!
பெண்ணழகு போட்டின்னு ஒண்ணு — தந்திப்
பேப்பரிலே பார்த்தேண்டி கண்ணு — அதில்
உன்னை விட்டு அடிப்பேன் வின்னு — நம்ம
உதவியும் தேவையுண்டு யோசனை பண்ணு!
தேகத்தில் காணும் ஜோக்கு — அது
டிசம்பர் கிருஸ்மஸ் கேக்கு — நீ
வேகமாய்ப் போகும் போக்கு — உன்னை
விரட்டி விரட்டியே ஆயிட்டேன் வீக்கு!

— *சித்தி*

## உசுரு நம்ம கையிலே!

உசுரு நம்ப.கையிலே — நல்ல
கோமான்களானாலும் சீமான்களானாலும்
சாமான்யமானவர்க ளானாலும் அவுங்க (உசுரு)

அடுத்து பட்டம் பெறும் சின்ன ராஜா — அவர்
அன்பைப் பெற்ற இவர் என்ன லேசா — இனி
படிச்ச பசங்களெல்லாம் நம்ப கூஜா — சிலர்
பதவிக்காக உன்னெ பண்ணிக்கோணும் தாஜா !

உசுரு நம்ப கையிலே — ஊரார்
உசுரு நம்ப கையிலே — செல்வர்
உசுரு நம்ப கையிலே...
சுண்டூரெ நெனச்சா ரெண்டூராப் பண்ணுவேன்
சொன்னாச் சொன்னபடி நடக்கணும் — இவுரு
சொன்னாச் சொன்னபடி நடக்கணும்.

நம்மைக் கண்டாலே எல்லாரும்
கை கட்டி வாய்பொத்தி கப்புச் சிப்புண்ணு நிக்கணும்.
முனியன் பொண்டாட்டி நீயிண்ணு காட்டாதிருக்கணும்
புது தினுசா உன்னெ மாத்தணும்.
பசும்பொன் காய்ச்ச மரம் போல்
பூட்டிக்கோணும் மாட்டிக்கோணும்.
போறவங்க வாரவங்க மதிக்கணும் — அய்யா
உசுரு நம்ப கையிலே — சீமான்
உசுரு நம்ப கையிலே....

## கள்ளபார்ட் முத்துலிங்கம்

ஜெகமெங்கும் புகழோங்கும் தீர வீர சிங்கம்
சிங்கப்பூர் ரெங்கோனில் தங்க மெடல்
பெற்றுவந்த
துங்கம் — துங்கம் — துங்கம்
சீரோங்கும் சென்னை நகர் கள்ள பார்ட்டில்
பேர் போன தர்மலிங்கம்
திருப்பாத மறவாத சீடனடா என்பேர் முத்து
லிங்கம் — லிங்கம் — லிங்கம்!

## குமர வடிவேலன்!

குன்றுதோ றாடிவரும் குமரவடிவேலன் குமரவடிவேலன் — எங்க
குரவர்குலக் கடவுள் தனைக் கூப்பிடுவேனம்மே!
கொல்லிமலை மீதில்மேவும் புள்ளிமயில் வாகன் — எங்க
வள்ளி மணவாளன்!
குறி முகத்தின் எதிரில் வந்து அருள்புரிவா ரம்மே
ஒன்பது கம்பளம் நம்பி வணங்கிடும் ஜக்கம்மா! — தேவி
ஜக்கம்மா — தந்த
ஊராளும் ராஜகுமாரி நீயம்மா!

அன்பன் ஒருவன் அவனியின் மேலே
ஆபத்தான நேரத்திலே
அங்கம் தொட்டுக் காத்ததுண்டா
அம்மே! சொல்லு முன்னாலே
இன்பம் காணப் போகிறாய்
இனிமேலே தான் அவனாலே

சரியா ?

சரிதான்....!

உன்னைக் காக்கவே கருணையோடு வந்த காளை
காண்பதற்கு ஏழை — இடையிலே
மூர்க்கனொரு கோழை — முடிபோட்டு
வம்பு செய்து ஏய்க்கிறான் ஆளை!

ஆளை ஏய்க்கிறவன் வாழ மாட்டான் — அந்த
ஆணழகன் அதுக்கெல்லாம் அஞ்ச மாட்டான்!
அம்மைக்கினி மேலே அடிக்குது அதிர்ஷ்டம்
ஆனாலும் கொஞ்சம் இருக்கிறது கஷ்டம்!

உண்மையிது என் வாக்கிலே — வந்தது
இம்மிகூட மாறாதம்மா.

உண்டுமா....?
அப்புறஞ் சொல்லு!

ஆனைமலை மேலே, அணிலுக்குத்தான் கண்ணி வச்சே
அணில் விழும் கண்ணியிலே, ஆனைவிழப் போகுதம்மா!
சென்னிமலை மேலே, சிட்டுக்கு நீ கண்ணி வச்சே
சிட்டு விழும் கண்ணியிலே, சிங்கம்விழப் போகுதம்மா! (குன்றுதோ)

— ***மதுரை வீரன்***

## ஒரே முனியப்பா!

மூலெ வீட்டுக்குள்ள முடங்கிக் கிடக்கிற
முனியப்பா! ஒரே முனியப்பா! — ஈ
வேலெக்காரி வந்த விஷயம் தெலுசகோரா
முனியப்பா!... ஒரே முனியப்பா!.. ஒரே முனியப்பா!...
(மூலெ வீட்டுக்குள்ள)

ஜாலம் செய்ய வொத்து ஜல்தி லேஸி ராரா
முனியப்பா ஒரே முனியப்பா — இப்ப
சாப்பாடு லேகுண்ட தனியாகத் தவிக்காதே
முனியப்பாஒரே முனியப்பா — ஒரே முனியப்பா

ஏழெட்டு நாளாக எங்கெங்கே வெதிகேதி
இனியெக்கட சூஸெதி எவங்கிட்டே அடிகேதி — நீ
இல்லாமே பொஞ்சாதி எப்பட்றா பதிகேதி
முனியப்பா — ஒரே முனியப்பா — ஒரே முனியப்பா!
(மூலெ வீட்டுக்குள்ள)

கூடிக் கெடுப்பார்கள் நெறஞ்ச உலகமப்பா
கொஞ்சம் போலே சொன்னா நெஞ்சுக்குள் நினையப்பா
வேடிக்கை பண்ணாமே விபரத்தைச் சொல்லப்பா
மாயப்ப மாசாமி முறையாமே ராராப்பா
முனியப்பா!... ஒரே முனியப்பா!... ஒரே முனியப்பா...!
(மூலெ வீட்டுக்குள்ள)

*— டாக்டர் சாவித்திரி*

## காவடிச் சிந்து

நாதப் பிரும்ம வினோதபாக சங்
கீதத் தோர் அபிமானி — நமது
நண்பனாகிய சீனி — வாசன்
நானிலம் புகழ் மானி — எந்த
நாளுமே நீள்தயாளமே நிறை
நாநலந்தரும் சீனி.

கோதரும் இளங்கோதைமார் மையல்
கொண்டிடும், சிலைமாரன் — தரும்
கொடைக்கு மேலதிகாரன் — திரு
கொத்தமங்கல ஊரன் — எனைக்
கூடியே விளையாடியும் சுகம்
கொடுக்கும் ரூப சிங்காரன்.

பொன்னியும் கலைக்கன்னியும் நடம்
புரியும் நேர்தடந் தோளன் — மறை
புகலு வார் மரபாளன் — மிகு
புண்ய மீன்ற குணாளன் — எனைப்
போற்றிப் போற்றிப் பாராட்டியே வைத்து
பூசிக்கும் மணவாளன்.

கன்னல் சூழ் உடுமலைப்பதி — தமிழ்க்
கவி மாலை என்றிடின் என்றும்
காமுறும் திருமாலை – நிகர்
கௌரவன் இன்று மாலை – என்னைக்
கண்டு பேசிய விந்தையானது
கனவிலும் செய்யும் மாலை! (நாத)

(தம் மேல் சிந்து பாடுக என வேண்டிய கொத்தமங்கலம் சீனு மேல் கவிராயர் பாடியது.)

## சொல்ல நாணுது!

நங்கை தூங்காமல் ஏங்குறாளே
நாவாலேதான் சொல்ல நாணுது. (நங்கை)

ஓ!.....
சீரான கல்யாணப் பயித்தியம்

ஓ!... இது.... (சீரான)

தீருமா?

தீராது யாராலும் செய்யாதீர் வயித்தியம்
பாராதீர் வீணாக ஜோசியம்
பார்மீது உன்னாசை வேறோர் பெண்பக்கமே
நேராகும் நினையாதே நிச்சயம்!
கோரும் காதல் கைகூடாதே!
மாறாது நான் சொன்னால் சத்தியம் (சிங்)

ஜிங்கிடி ஜிங்கிடி ஜிங்கிடி ஜிங்கிடி
ஜிங்கிடி ஜிங்கிடி ஜிங்கிடி ஜிங்கிடியே!

— *மதுரைவீரன்*

## ஏறமுடியாத ஏணி

எல்லோரும் நல்லவரே! — உலகினில் (எல்லோரும்)
கற்றும் அறிவில்லாதார் என்னிலுமே கல்லாதார் (எல்லோரும்)
உலகோரை மேலேற்றும் அருள் ஞானி நான் — இவ்(உலகோரை)
தானோர்
முழமேற முடியாத பரண் ஏணி நான்!
பலகாலம் பயனற்றுப் போனேனே!
பக்தி காணேனே! பாவியானேனே! என்னில் (எல்லோரும்)

— *கிருஷ்ணபக்தி*

## ஏழைக்கு இனியவன்!

### பல்லவி

வாழிய நீடூழி..! மெய் வாழிய நீடூழி!
பகுத்தறி வாளன் ஆனந்தன் — சதா
மனோகரமாய் வாழிய நீடூழி!!

### அநுபல்லவி

தோழமையே சூழ்ந்த அன்பும்,
சுயநல மில்லாத பண்பும்,
தாழ்வு முயர்வும் எண்ணாத ரீதியில்
மண்மேல் நீதி கொண்டும் — சதா
மனோகரமாய் வாழிய நீடூழி!!

### சரணம்

ஏழைக் கினியவனாம் — வான் மழை போல்
ஈகையால் இன்பம் செய்வான்;
வாழ்வு வரினும் மனித நேர்மைதான்
மாறாதவன், துயர் செய்யான் (ஏழைக்)

சீலம் கல்வி நலமே வாய்ந்த
சீரால் ஓங்கி நீடூழி! (வாழிய)

இரு விழி தனிலே புகுந்தான்! — என்
இதய வானில் அமர்ந்தான்!
இரவியும் மதியும் போல் எந்நாளும் — இயல்போடு
புவிதனில் சதா மனோகரமாய் — மெய்
(வாழிய)

— *வேலைக்காரி*

## உலகம் பலவிதம்

உலகம் பலவிதம் — இந்த (உல)
இவர் — அதிலேதான் ஒருவிதம் (உல)

இலைமறைந்த காயைப்போல இருப்பார் சிலபேர்
எல்லாம் தெரிந்த மனுஷன்போல ஏய்ப்பார் சிலபேர் (உல)

ஒட்டுச்சடை மீசைதாடி உருவங்கள் சிலதுண்டு — திரு (ஒட்டுச்)
பட்டை நாமம் தீட்டுகின்ற பக்திமான்கள் உண்டு — தெய்வ (பக்தி)
கஷ்டப்பட்டுப் பட்டிடாத காவடிகள் உண்டு — அன்னக் (காவடிகள்)

காக்கா பிடிச்சுக் காலங்கடத்தும்
காவாலிகளும் உண்டு — சுத்தக் (காவா)
(உல)

ஒட்டிக்கு ரெட்டியாக வட்டிக்குப் பணம் கொடுத்து
ஊரார் முதலைக் கொள்ளையடிப்பார் — இவர் அதை
ஊதுபத்தி சாம்பிராணி சூடம் வாங்கி எரிப்பார்
உண்ணாமலே செலவழிப்பார்!

பட்டம் பதவிக் கிறைப்பார் — கோயில்
கட்டுதற்கும் செலவழிப்பார் — இந்த (உலகம்)

## கொண்டாடும் சுபதினம்

கொண்டாடும் சுபதினமே — இன்று நாம் எல்லோரும் (கொண்)
மணிமுடி கொண்டாளும் ராஜகுமாரி — சிங்காரியைக் (கொண்)
வண்டாடும் குழலாள் விழிமானாள் — தேன் (வண்டா)
பெண் மண்ணாளும் சுபநாள் இதுவே நாள்
தண்டாமரை மேவும் தங்கைபோலே தமிழ்த்தாய் போலே
கலைகள் வளர்க்கு மின்னாளைக் (கொண்)

வானம் பொழியும் பசிநீங்கும் — முகில்பலன்
காணும், உழவும் தொழிலோங்கும்
மானமும் சீலமும் மாண்பெனும் நாளும்
வாழிவினில் மணம்வீசும் இதுநாளே

ஜாதி விரோதமிலாப் பொது நீதி
சதா நிலவும் அமைதி (ஜாதி)

நீதி புரியும் எங்கள் சந்தோஷ வடிவான ராணியை
ஜகம் புகழும் குணாகரியை நிரஞ்சனியை (கொண்)

— *ராஜகுமாரி*

## கலைவாணரின் சிறை வாழ்வு!

ஜெயிலுக்குப் போய்வந்த சிரேஷ்டர்
மக்களைச் சீர்திருத்து வாங்கோ — இந்த
ஜெகத்தை யாளுவாங்கோ — சிலர்
திண்டாடித் திரிவாங்கோ — இன்னுந்
தெளிவாச் சொன்னாங்க — அதைத்
தெரியவச்சதோர் இரண்டு வருஷத்தில்
அறிவுக்குப் புரிஞ்சதுங்க! — ஆனாக் கொஞ்சம்
சிரமமும் இருக்குதுங்க!

பயங்கெட்ட பேர்வழிங்க — அடிதடி
பண்ணிக்கிட்டுப் போனவங்க — மனுஷனைக்
கொன்னுபிட்டுப் போனவங்க — திருடியும்
பெண்ணைத் தொட்டுப் போனவங்க — சோம்பேறிங்க
புத்திகெட்டுச் சக்தி கெட்டு போசனமும் தட்டுக் கெட்டுப்
போலீசுக் காரராலே புடிபட்டு அடிபட்டுப்
போனவங்க உண்டுங்க — அது தப்புங்க!
நா அப்படி இல்லீங்க — பின்னே
எப்படின்னு கேப்பீங்க!
சொல்றேங் கேளுங்க!
ஒருசிலர் கொண்ட கொடிய பொறாமை
உருவமாச்சுதுங்க — அதாலே
உண்மையை மறந்தாங்க —பொய்யை
உறுதிப் படுத்தினாங்க.

உருட்டும் பொரட்டுமே வரவர உலகத்தில்
மிகுந்து போச்சுதுங்க — காரணம்
ஒற்றுமை இல்லீங்க — நமக்குள்
ஒற்றுமை இல்லீங்க — அங்கே
காக்கிச் சட்டை வார்டர்களைக் கண்டேனுங்க! — சுத்தக்
கதர்ச்சட்டைக் காரரையும் கண்டேனுங்க!
களவாணிப் பசங்களையும் கண்டேனுங்க! — வெள்ளைக்
கருப்புக் குல்லாக்களையும் கண்டேனுங்க!

அங்கே கஞ்சி உண்டுங்க — சிலர்க்குக்
காபி உண்டுங்க,
களியும் உண்டுங்க — சோறு
கறியும் உண்டுங்க
இன்னங் கேளுங்க
அங்கே, படிச்சவங்க படி யாதவங்க
படிக்கப் பலகலா சாலையதும் உண்டுங்க!
சாப்பிடச் சொல்லிப் பிள்ளைகளைப்
பெத்தெடுத்தவங்க போலப்
பிரியமுங் காட்டுறாங்க நம்புங்க!

விசில் அடிக்கடி ஊதுவாங்க — அதன்படி
ஆசராகி நிக்கோணுங்க — அங்கே
உடைப்பஞ்சம் ஏதுங்க?
உணவு ரேஷன் ஏதுங்க?
ஒடம்புக்கு ஏதாவதுன்னாங்க — டாக்டர்
ஓடியாந்துடுவாங்க!

கூலிக்குப் போகும் வேலைத் திண்டாட்டம்
குறையே இல்லீங்க! — கும்பிடக்
கோயிலு மில்லீங்க! — அது ஒரு
கொறையா சொல்லுங்க? — இட்ட
சோலியப் பாக்கணும் மாலையானவுடன்
தூங்கவுஞ்சொல்றாங்க — மனத்தையும்
சுத்தப் படுத்துறாங்க! (ஜெயிலுக்கு)

— *பைத்தியகாரன்*

## செப்படி — பித்தலாட்டம்!

மாயமாகிய ஜாலந்தனிலே
வந்த மாது நானே — உடனே
மாறும் எந்தன் உருவமாகுமே.

ஆசையாலென்னை யாரும் தொட்டால்
அருவமாகுந்தானே — ஆனால்
ஆடல்பாடல் எல்லாம் செய்குவேன் (மாய)

## முதல் இல்லாத வாணிகம்

எலக்சன் வந்தபோது செலக்சன் பண்ணச் சொல்லி
நின்னுக் கோ — உன்னை
எதிர்த்து நிக்கும் ஆளை இஷ்டம் போலக்
கேலி பண்ணிக் கோ!
பந்துக்கள் பேராலே பர்மிட்டு லைசென்ஸ்சு
பங்கு வச்சு வாங்கிக் கொடுத்துக்கோ! — இந்த
ஐந்தாண்டு திட்டத்தில் யார் யாருக்குக் கென்னென்ன
செய்யணுமோ செய்து முடிச்சுக்கோ!
சமயம் பாத்துக்கோ! செல்வம் சேத்துக்கோ!
உன்னைக் காத்துக்கோ!
ஊட்டிக்குப் போனாலும் போஸ்ட்டர்! — வேறு
ஊருக்குப் போனாலும் போஸ்ட்டர்! — டீ
பார்ட்டிக்குப் போனாலும் போஸ்ட்டர்! — உந்தன்
படத்தைப் போட்டு ஒட்டு (போஸ்ட்டர்) — மாஸ்டர்
பொறந்தாலும் இறந்தாலும் போட்டுக்கோ! — பில்டிங்
தொறந்தாலும் போஸ்டர்கள் மாட்டிக்கோ! — கொள்
முதலில்லாத பெரும் வியாபாரம்! — பலர்
முட்டாள்தனம் இதற்கா தாரம் — உனக்குத்
தகுதியிருந்தாலும் இல்லாட்டிப் போனாலும்
ஜாலியாகக் காரு வச்சுக்கோ! — அதைத்
தொகுதி மக்கள் வாங்கித் தந்ததென்று சொல்லி
சும்மா சும்மா டீப்பு அடிச்சுக்கோ!
உயர் பதவிக்கு நீ
உதவிக்கு நான்! (எலக்சன்)

## கைத்தறி வாங்குவீர்!

செந்தமிழ் நாட்டுக் கைத்தறி நெசவுச்
சேலைகள் வேட்டிகள் வாங்குவீர்!
திராவிட நாட்டினர் க்ஷேமம் வேண்டி
சிங்கார ஆடைகள் வாங்குவீர்! (செந்தமிழ்)

சொந்த மிகுந்த சகோதரிகள்! — அன்புத்
தோழர்களே! பெரியோர்களே!
துன்ப மடைந்தவர் இன்பமுறும்படி
துணை செய்யவேண்டும் நீங்களே! (செந்தமிழ்)

சின்னாளப் பட்டி திண்டுக் கல்லைச் சேர்ந்த
சித்தையங் கோட்டை
ஸ்ரீ வில்லிப்புத்தூர் இராமநாதபுரம்
ஜில்லா அருப்புக்கோட்டை
சென்னை தஞ்சை காஞ்சி திருநெல்
வேலி பாளையங் கோட்டை
தினுசுகளிருக்கு! வாங்க வாங்க!
சீர்படுத்தலாம் நாட்டை! நம்ம (செந்தமிழ்)

திருப்பூ ரோடு ஈரோடு பவானி
சேலம் கோயம்புத்தூர் — மற்றும்
ஜில்லாக்களிலும் நெய் தொழிலாளர்
செய் தொழிலற்றார் கெட்டார்!
தெருத் தெருவாகப் பிச்சை எடுத்தார்!
திண்டாடி இருப்பிடம் விட்டார்!
சேயொரு பக்கம் தாயொரு பக்கம்
சிரமப்பட்டார் செத்தார் காணீர்! (செந்தமிழ்)

வருஷம் ஒருமுறை மார்கழி மாசம்
வைகுந்தம் காட்டும் ஏகாதசி — இப்போ
மாதம் பலமுறை வைகுந்தங் காட்டும்
ஏழைகள் வீட்டில் பசிபசி! — இதில்
கருணை காட்ட நம்ம கனவான்களுக்கு
நேரமில்லை ரொம்ப 'பிசிபிசி'!
கைத்தறியாளர்கள் கஷ்டத்தைப் போக்கிக்
கண்ணாலே பார்க்கணும் குஷி குஷி (செந்தமிழ்)

வடக்கத்திச் சேட்டாம் மார்வாடி கடையில்
வாயில் சிலுக்கு மல்லு — பல
வர்ண தினுசுகள் ட்ரில்லு — அதை
வாங்காதே விட்டுத் தள்ளு — அவங்
கடனுக்குக் கொடுத்து எழுதிடும் பில்லு
கச்சேரி வரைக்கும் செல்லும் — தலையில்
கணக்காப் போடுவாங் கல்லு — என்றே
கட்டாயம் எல்லோருக்கும் சொல்லு சொல்லு! நம்ம (செந்தமிழ்)

ஊடைக்கும் பாவுக்கும் ஈரிழையுண்டு
கேரளத்து முண்டு. நம்ம (கேர) — அது
உடம்பு தேய்க்கவும் துடைக்க வுதவும்
வேண்டாம் சர்வண்டு — விலை
ஜோடி யொண்ணுக்கு ரூபா ரெண்டு
அணா பனிரெண்டு — ரூபா
ரெண்டும் பனிரெண்டு — எளியார்
துயரம் நீங்கவும் தொழிலு மோங்கவும்
தயவு செய்ய வேண்டும் — எல்லோரும்
தயவு செய்ய வேண்டும் — நம்ம (செந்தமிழ்)

## கான்வெண்ட் பள்ளித் தமிழ்!

சாட்டர் டேயில் ஆவ்டே குட்டே
சண்டே வெரிக் குட்டே
ஆட்டமாடத் தகுந்த ஸ்கூல்
ஹாலிடே குட்டே (சா)

மண்டே ட்டியூஸ்டே வெட்னஸ்டே
அண்டதர் ஸ்கூல் டேஸ் யூஸ்லஸ் டேஸ் (சா)

இன்டிசம்பர் பிப்டீன் டேஸ்
கிருஸ்மஸ் வெக்கேசன்
ஏப்ரல்மே ஜூன் பார்ட்டிபைஸ்டேஸ் ஆன்
சம்மர் வெக்கேசன் (சா)

அண்டக்ட்டோபர் தசரா டென்டேஸ்
இண்டூஸ்ஹாலிடே மகமடன்ஹாலிடேஸ்
இண்டிபெண்டன்டே ரிபப்ளிக் ஹாலிடே
பண்டிட்நேரு சில்ரன்ஸ் ஹாலிடே

இவ்வகையான எவ்வரி டேக்களும்
வெரி வெரி குட்டே வெரிவெரி குட்டே (சா)

# நலங்கு இட வாராய்!

நலங்கிட வாராய் லட்சுமி
நலங்கிட வாராய் — நல்ல
நாயகனொடு நானிலந்தனில்
நாளும் வாழ்ந்திடும் உத்தமி (நலங்கிட)

## அநுபல்லவி

கலந்த சந்தனம் கமகமவெனக்
கையாலே கொஞ்சம் தொட்டுக்கோ! — ஒளிர்
கருப்புச் சாந்து செவத்த குங்குமம்
கஸ்தூரிப் பொட்டும் இட்டுக்கோ!

காஞ்சிபுரப் பட்டுங் கட்டிக்கோ! — மஞ்சள்
கயிற்றிலே கட்டுப் பட்டுக்கோ! — கொண்ட
கணவனோடு வாழ்விலுந் தாழ்விலும்
இணைபிரியாமல் ஒட்டிக்கோ! (நலங்கிட)

## சரணம்

மாசில்லாத ராம லிங்கத்தின்
மருகியென் றாலே — உன்னை
மதித்திடாத பேர்களுண்டோ
மரகதக் குயிலே!

ஆசை யமர நாதன் — மன
வாளன் என்றாலே — பெரும்
அதிர்ஷ்டம் பாக்கியம் அனைத்துஞ் சேர்ந்த — மகா
லட்சுமி நீ மயிலே! (நலங்கிட)

## ரயிலே! ரயிலே!

வழி மறைத்திருக்கிறார் — மலை போல்
டிக்கெட் கலெக்டர் வந்து தடுத்து நிற்குறார்
புது ஸுட்டும் ...கோட்டும் போட்டு! (வழி)

ரயிலே ரயிலே ...! ரயிலே
ரயிலே ரயிலே ... ரயிலே!

கரகர கரவெனச் சக்கரம் சுழலக்
கரும்புகை யோடு வருகிற ரயிலே!
கனதன வான்கள் ஏறிடும் ரயிலே!
கன வேகத்தோடு போகிற ரயிலே!

ரயிலே ரயிலே ... ரயிலே!
ரயலே ரயிலே ... ரயிலே!

மறையவரோடு பள்ளுப் பறையரை ஏற்றி
மத பேதத்தை ஒழித்திட்ட ரயிலே!
இருபுறமும் ஜென்னல் கதவு களோடு
'எஸ்.அய்.ஆர்.' என்ற எழுத்துள்ள ரயிலே!

ரயிலே ரயிலே.. ரயிலே!
ரயிலே ரயிலே... ரயிலே!

தண்ட வாளத்தின் மீதே ஏறி
தாண்டவ மாடிடும் ஆண்டவன் நீயே!
லண்டனை விட்டு இந்தியாவுக்கு
ரமணீயமாய் வந்த ரயிலே! ரயிலே!

ரயிலே ரயிலே... ரயிலே!
ரயிலே ரயிலே... ரயிலே...!

தேசம் சுற்றிக் காட்டிடும் ரயிலே!
'ட்ரு வேண்ட்ரம்' விட்டுப் புறப்படும் ரயிலே!
மாசில்லாத உன் மகிமை என் சொல்வேன்!
மதராசுக்குப் போகிற ரயிலே!

ரயிலே ரயிலே.. ரயிலே!
ரயிலே ரயிலே... ரயிலே...!

### கிந்தன் கல்விக்குச் சென்னை செல்ல வேண்டல்

சென்னை என்றொரு ஸ்தல மொன்றிருக்குதாம்! — அங்கு
சென்ற பேர்க்குச் செலவும் வரவும் அதிகமாகுதாம்!
உயரும் லைட்டு ஹவுஸும் தெரியுதாம்! — அதைப்
பார்த்து ஸ்டீமர்,

ஊரிருக்கிற திசையை யறிகுதாம் அய்யனே! (சென்னை)

போய் வரக் கொஞ்சம் பொருளைத் தாருமே!
லெதர் பூட்ஸுக் காலைப் போற்றினேன் — திருக்
கண்ணால் பாருமே (சென்னை)

### பண்ணையார் மறுத்தல்

பயமில்லாமலே எதிரே யிங்கே
நில்லாதே — அதைச்
சொல்லாதே! — மடப்
பயலே! நீ பட்டணமென்று சொல்லப்
படுமோடா? பேசப்படு மோடா?— மடப்

பயலே! நீ பட்டண மென்பதை விடு!
பழைய சோத்தைச் சாப்பிடு!
பட்டிக் காட்டில் படித்திடு! — நல்ல
பைய னென்ற பேர் எடுத்திடு!

மடப் பயலே...!

ஞாயந் தானா நீ சொல்லு
நல்ல நாகரீகம்
நம்ம ஜாதிக் கடுக்கு மோ?

காடுங் கரை உழுகும் பிழைப்பு — அது
கடவுள் நமக்கமைத்த அமைப்பு!
ஏடெழுத்தாணி கொள்ளும் படிப்பு — மிக
ஏற்றமான ஜாதிக்காம் அந்தப் பொறுப்பு! (மடப்பயலே!)

### கிந்தனாரின் வெற்றி!

படித்தானே பலபல கலைகளைக் கிந்தன் — பள்ளிப்
பிள்ளைகளோடு கள்ளங் கபட மின்றிப்
படித்தானே!
கொடுத்த கொஸ்டீன்களுக்கெல்லாம்
பாஸ்மார்க்காய் எடுத்து
ஸ்காலர் ஷிப் மிக நோக்காய்ப் (படி)

வேகமாக உத்தியோகத்தில் — மனசு
விரும்பிப் படிப்பதிலே பெற்றான் பரிசு!
ஜாகரபீ, ஹிஸட்ரி, தமிழும், இங்கிலீசும்
தக்கபடி மேதமாடிக்ஸ் சயன்ஸு (படி)

கிந்தா நீ திடசித்தன்! — உன்னைக்
கிண்டல் செய்தேன் — அந்தோ!
நானொரு பித்தன்!!

— *நல்லதம்பி*

## கழுதையிலே ரெண்டுவிதம்

### தொகையறா

ஆண் : கழுதையிலே ரெண்டு விதம்
நல்லதுண்டு கெட்டதுண்டு

பெண் : ஒன்று கழுதையிலே நல்லதென்பார்
மற்றொன்றைப் புத்தியிலே கெட்டதென்பார்

### பாட்டு

ஆண் : குட்டியாயிருக்கையிலே லட்சணத்தில்
குதிரையைக் காட்டிலும் எட்டு மடங்கு — கழுதை
(குட்டி)

பெண் : யே, ஏழெட்டு மாசமான பின்னே முழங்கால்
முட்டி விழுந்து மோசமாக விளங்கும் (ஏழெட்டு)

இருவரும் : தா, நம்ம கழுதை மிக நல்ல கழுதை — வேறு
நாட்டுக் கழுதை போல நாகரீகமில்லே
வாட்ட சாட்டமெல்லாம் ஒண்ணு
மூக்கு மட்டும் வெள்ளை (நம்ம)

ஆண் - வசனம் : இதா! உம்
ஆளைப் பாக்காதே கழுதை
அடிபட்டுச் செத்துப் போவே! ஒழுங்கா நடந்துக்கோ

ஆண் - பாட்டு : காலிருக்கத் தலையால் நடக்கிற கழுதை
காவாலிப் பயகழுதை — சுத்தக்
காவாலிப் பயகழுதை!

பெண் : சொந்த வேலையிருக்க ஊரு வேலைகளைப்
பார்க்குமாம்
வீணா விருத்தக்கழுதை — சுத்த
வீணா விருத்தக்குழுதை — அதுக்கு (நம்ம)

ஆண் - வசனம் : பொம்பளை பேச்சைக் கேக்கற
பொசகெட்ட கழுதைகளைப்
போடறேம்பாரு ரெண்டு போடு இதா.. .துர்ரி

ஆண் - பாட்டு : சாம்பலைப் பூசிக்கிட்டுச் சம்சார வாழ்வைச்
சதமில்லை யென்று சொல்வ தென்ன கழுதை?

பெண் : அது சத்திரத்துச் சாப்பாட்டுத் தடிக்கழுதை!

ஆண் : சோம்பேறித்தனமா, சுத்திக்கிட்டுக் கண்ட பக்கம்
சோறுதின்னுங் கழுதைஎன்ன கழுதை?

பெண் : அது சொல்லுப் புத்திக் கேக்காத கழுதை
அதுக்கு (நம்ம)

ஆண் - வசனம் : நாதாரிப்பய கழுதை நடக்கக்கூட
கணக்குப்பாக்குதே, நல்லியை ஒடுச்சுடுவே
இதே.. உம்

பெண் : கள்ளக்கடை வீதியிலே கொள்ளை யடுச்சுக்கிட்டு
கௌரவமாயிருப்ப தெந்தக் கழுதை?

ஆண் : அது காலமுணராத சுத்தப் போலிக்கழுதை
கண்ணிருந்தும் குருடாய் வாயிருந்தும் ஊமையா
காதிருந்தும் கேளாத தென்ன கழுதை?

பெண் : அது கல்வியற்ற செல்வமுள்ள கழுதை
அதுக்கு (நம்ம)

வசன நடை

பெண் : சிங்கமதை எதிர்த்தது எந்தக் கழுதை?

ஆண் : என்னா?

பெண் : கரிகாலச் சிங்கமதை எதிர்த்தது எந்தக் கழுதை?

ஆண் : அது சேலையைச் சுமந்ததே அந்தக் கழுதை!

பெண் : இப்பச் சிக்கிக்கிட்டு முழிக்கிறது எந்தக் கழுதை?

ஆண் : ராணி சேனையிலே சேர்ந்து வந்த கழுதை!

பெண் : ஆ............ ஹ.............. ஹா
காரியமில்லாக் கழுதைகளைத்தான்
கட்டி மேய்க்க லாமா?

ஆண் : அடெ ஊரைச்சுத்தி மெரமணை செய்து
பாக்கவேணும் ஆமா!

பெண் : புத்தி வருமா?

ஆண் : செஞ்சு பாப்போம்!

பெண் : அடே வர்லே

ஆண் : உட்டு முடிக்கினாப் போவுது

பெண் : அப்ப வெளாசு

ஆண் : த்தா

பாட்டு

இருவரும் : நாணமற்ற பொங்கழுதை காணவே இதுகளை
நடத்திக் கடத்திச் செல்லவேணுமே
நாடெல்லாங் காரித்துப்பி நல்லறிவு உண்டாக
நன்மையே நாம தேட வேணுமே
இதுகளுக்கு (நம்ம)

— *மர்மயோகி*

## நாடோடி மக்கள் நாங்கள்

நாடோடிக் கூட்டம் நாங்க
தில்லே லே லேலோ — நாட்டில்
நல்லது கெட்டது தெரிஞ்சவங்க
தில்லே லே லேலோ!

பாடான பாடுபட்டுத்
தில்லே லோ லே லோ—பாழும்
பணத்தைச் சேத்து வைக்காதவங்க
தில்லே லே லோ

ஆடிப்பாடிப் பொழைப்பவங்க
தில்லே லே லேலோ

ஆஹா... ஆஹை... ஆஹா.. ஆஹை....

ஆடிப்பாடிப் பொழைப்பவங்க
தில்லேலே லேலோ — நாங்க
ஆளை ஏச்சுப் பொழைக்க மாட்டோம்

ஏலே லே லோ மாமி!
    ஏ... மாமா!

ஏ... மாமி!
    ஏ... மாமா!

ஏ... மாமி!
    ஏ... மச்சான்!

கூடிக் குடியைக் கெடுக்க மாட்டோம்
தில் லேலே லே லோ — கட்சிக்
கொள்கை எதிலும் சேர மாட்டோம்
தில் லேலே லே லோ.

வீடு வாசக் கட்டிக் கிட்டு
வேண்டிய தெல்லாம் தேடிக்கிட்டு
வேளா வேளையும் உண்டுக் கிட்டு
வெசனமத்து வாழாமெ
ஆடு மாடு போலே நாட்டிலே
அலைவ தென்னடி தங்கமே தங்கம்?
    — நீங்க நாட்டிலே.
அலைவ தென்னடி தங்கமே தங்கம்!

கஷ்டப்பட்டு வீட்டைக் கட்டிக்
கண்டவனைக் குடிவச்சுப் புட்டா
காலி பண்ணித் தரணு மின்னு

கச்சேரிக்கும் போனாலும்
சட்டப்படி நமக்கதிலே
சலுகை யேது மில் லேன்னு
பட்டணத்துக் காரன் சொன்னான் — அதனாலே
இஷ்டப் படலே சிங்கமே சிங்கம் — வீடு
கட்டிக்கத்தான்
இஷ்டப் படலே சிங்கமே சிங்கம்!

அதைவிடு போகட்டும்!
நஞ்சை புஞ்சை வாங்காமெ நாகரீக மில்லாமெ
பஞ்சப் பாட்டுப் பாடியே வாழ்வதேன்?
பதிலைச் சொல்லடி தங்கமே தங்கம்
— கேட்ட கேள்விக்குப்
பதிலைச் சொல்லடி தங்கமே தங்கம்!

அதுவா?
கஞ்சி குடிக்கணுமாம்; கஞ்சி குடிக்கணுமாம்;
கஷ்டப் பாடு படணுமாம், கலப்பை புடிச்சு
உழாதவன் உழவங்கிட்டே விடணுமாம்;
அஞ்சுல ரெண்டு பங்கு நமக்கு
உழவனுக்கு மூணுன்னு
தஞ்சாவூருக் காரன் சொன்னான்;

எவன் சொன்னான்?

தஞ்சாவூருக் காரன் சொன்னான் — அதனாலே
தலையிடலே சிங்கமே சிங்கம்!
— நஞ்சை புஞ்சையிலே
தலையிடலே சிங்கமே சிங்கம்!

முன்னாலே இருக்குறவங்க முண்டாசு
மறைக்குதுன்னு பின்னாலே இருக்குறவங்க
பேச்சுக் கேக்குது!

கண்ணாடி போட்ட மனுசன்
கஞ்சம் போலத் தோணுறாரு;
கம்பி நீட்டிடப் பாக்குறாரு;
கவனிச்சுப் பாரு! — ஆளே — கவனிச்சுப் பாரு!

தன்னாலே இங்கே ஒருத்தர்
தாளத்தைப் போட்டுவுட்டுப் பிட்டாரு;
தள்ளாடும் தாத்தா ஒருத்தர்
தலையெத் தலையே ஆட்டுறாரு! (நாடோடிக்)

— *அமர தீபம்*

## பல பல ஆட்டம்!

முனி : ஆட்டத்திலே பலதினுசுண்டு
பல் பலே பல், பலே பலே பல் (ஆ)
அதையறியாதவன் மண்டு — மக்கள் (ஆட்டத்திலே)

முத்து : பலே பலே பல்
பல பல பல பல பல பல பல் (ஆ)

முனி : பல் பலேபல் பலே பலே பல்
பல்க்கு பலேபல்
பல பல பல பல பலபல பல்
ஷை ஷை
ஷை ஷை (ஆ)
சொல்லு என்னென்ன....?

முத்து : பந்தாட்டத்திலே
பொம்மலாட்டத்திலே
சூதாட்டத்திலே
களியாட்டத்திலே
சதுராட்டத்திலே பலதினுசுண்டு

இன்னுந் தெரியாதா...?

கொண்டாட்டத்திலே
திண்டாட்டத்திலே
பேயாட்டத்திலே
பித்தலாட்டத்திலே
மக்களாட்டத்திலே பலதினுசுண்டு

முத்து : ராணிமேலே ராஜா விழுந்தபின்
ஆசெ வச்சுத்தட்டுவது என்ன ஆட்டம்?
தம்பி (ஆசெ)

முனி : அது சீட்டாட்டம்!

முத்து : அப்படியா...?
ட்ராமா சினிமாக் கலையால்
ராஜ்ஜியத்தில்
முன்னணிக்கி வந்தது என்ன ஆட்டம்
தம்பி (முன்)

முனி : அது சதுராட்டம்!

முத்து : தெரியுதா.....?

முத்து : பந்தாட்டத்திலே
பொம்மலாட்டத்திலே
சதுராட்டதிலே பல தினுசுண்டு

முனி : நாட்டுக்குள் ஏழைங்க வீட்டுக்குள்
அடிக்கடி நடக்கிற ஆட்டம்
என்ன ஆட்டம்

முத்து : (யோசித்து) தெரியாது

முனி : அது திண்டாட்டம்!
நகைக்கடை துணிக்கடை
லேவா தேவியில்
நடைபெற்று வருவது என்ன ஆட்டம்?

முந் : அதுந் தெரியாது.

முனி : தெரியாதா....?
அது பித்தலாட்டம்...!

*— டாக்டர் சாவித்திரி*

## மாபாவி யார்?

முற்பகலில் செய்ததெல்லாம்
பிற்பகலில் விளையுமென்ற மொழியின் உண்மை
அற்பகுணம் படைத்தவன்யான் அறிந்துகொண்டேன் — என்
குற்றமதை நன்குணர்ந்தேன் (என்)

குவலயத்தில் பழிசுமந்தேன் — என்னில்
வாசகம் செயலிலும் மாறுபாடுற்ற பாவி
மா பாவி யானனன்றி மற்றுமோர் பாவியேது?
ஈசனை நினைக்கின்ற எண்ணம் தளர்ந்த பாவி
ஏனெடுத்தேன் இந்த மானிட ஜென்மம் பாவி (என்)

## வம்புச் சண்டை!

ஆண் : தஞ்சாவூரு பொம்மையைப் பாரடி — அடியாத்தே!
சாஞ்சி நிக்கற அழகைப் பாரடி!
அஞ்சாறு கலர்ச் சட்டை! — அதில்
யானை குதிரை ஒட்டை! — புதுப்
பஞ்சாங்கம் போல் வருச மாசம்
பதிஞ்சிருக்கிற ஜோரு — அதிசயம் பாரு! (தஞ்)

அடி! வாலுக் கொண்டைக் காரி — நீ
வம்புச் சண்டைக் காரி!

பெண் : உன் வாயை அடக்கிப் பேசுதம்பி
ஊரு தான் பொல்லாது
உடம்புதான் தாங்காது!

ஆண் : வம்புக் கிழுக்கிறதும் வாய்ச்சண்டை போடுவதும்
பொம்பளைக்கே கூடப் பொறந்த குணம்!

பெண் : ஜம்பமாய்ப் பேசறதும் சவடால் அடிக்கிறதும்
ஆம்பிளைக்கே பொதுவா அமைந்த குணம்!
தெரியாதா? சொல்லத் தெரியாதா? — உங்கள்
சேதியை இன்னும் சொல்லவா?
கேலிக்கு இடமல்லவா?— சொன்னாலே
கேலிக்கு இடமல்லவா?

ஆண் : உள்ளத்தில் குறும்பாய்ச் சிரித்திடுவார் — அந்த
உண்மையை உதட்டில் மறைத்திடுவார்
கள்ளத்தைக் கலையாய் வளர்த்திடுவார் — தன்
காரியம் முடிந்த பின் மறந்திடுவார்! (தெரியாதா)

பெண் : ஊருக்கு நீதி உரைத்திடுவார் — தன்
வீட்டுக்குள் பெண்ணை அடைத்திடுவார்,
கோரிக்கை நிறைவேறக் குழைந்திடுவார் — தன்
காரியம் முடிந்த பின் மறைந்திடுவார்! (தெரியாதா)

ஆண் : அன்புடனே முழு மனத்தோடு பெண்ணை
நம்பினால் கொடுப்பார் திருவோடு,

பெண் : நம்பிய சகுந்தலை பட்டபாடு இந்த
நாடறிந்த தல்லவோ வெட்கக் கேடு! (தெரியாதா)

— *தாய் மகளுக்குக் கட்டிய தாலி*

## மரம் வளர்த்திடுவோம்!

உலகம் வாழ வானம் மழை
      பொழிந்திட வேண்டும் — வானம்
பொழிந்திட நாம் வனமரங்கள்
      வளர்த்திட வேண்டும். — இந்த (உலகம்)

புலங்கள்தோறும் பூண்டு புல்லும்
      வளம்பெற வேண்டும் — கதிர்
      விளைந்திட வேண்டும் — உயிர்
இனங்கள்யாவும் அருந்தி நாளும்
      சுகம் பெற வேண்டும் — நாம்
      துணை செய்ய வேண்டும் — இந்த (உலகம்)

வானம் வழங் காதெனிலோ
      ஊணுடை யேது? — உயர்
தானம் தருமம் தவமெய்ஞ்
      ஞானமும் ஏது? — நலங்
காணும் கடவுள் பணிகள்
      காட்சியு மேது? — முதல்
காரணம் மாமழை இலையேல்
      தோற்றமும் ஏது? — எழுவகைத்
      தோற்றமும் ஏது? — அதனால் (உலகம்)

## பெருக்கு! சுருக்கு!

நாட்டுக்கான புன்செய்த் தோட்டந்தொடியில் பெறும்
      நவதானியங்களைப் பெருக்குங்கள்!
வீட்டுக்கான பொம்ம னாட்டிகளால் பெறும் பிள்ளை
      விவசாயத்தைச் சுருக்குங்கள்!

## மனிதர் அனைவரும் சமானம்

### தொகையறா

''பிறப் பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமையான்'' என்றே
குறிப்பிட்ட வள்ளுவன் குறட்பாவை உணர்ந்தே
ஒருப்பட்டு வாழ உடன்படு வீரே!

### பாடல்

சமானம் மனிதர் பிறவியில் ஒருமை
என்பதே முறைமை
இம்மாநில வாழ்வினில் உணர்வில்
ஏற்றிடும் சுகநல உரிமை! (சமானம்)

அறிவேதரும் பெருமை சிறுமை!
அவரவர்பால் அமைந்த திறமை!
உறவுடன் யாவரும் வேற்றுமை
நீங்கிட முயல்வது கடமை! (சமானம்)

## நல் வழியில் நடப்போம்

நல்வழியே நடந்தாத் துன்பம் வந்தாலும்
இன்பமாய் மாறும் பின்னாலே — நன்மை
அல்லவையே செய்து இன்பம் வந்தாலும்
துன்பமாய்த் தோன்றும் தன்னாலே! (நல்வழியே)

உள்ளத்திலே வெண்மை, செயல்தனிலே செம்மை
உடையவர் தாழ்ந்தாலும் வாழ்வார் — பெரும்
கள்ளத் தனத்தாலே செல்வ நலந்தேடும்
கயவர்கள் உயர்ந்தாலும் வீழ்வார்! (நல்வழியே)

தாமுறும் சுகம்தன்னைத் தாரம் பெறக்கண்டே
காமுறுவார் என்றும் மேலோர் — பிறர்
சேமந் தன்னைக் கண்டு சித்தம் களிக்காத
பாமரரே என்றும் கீழோர்! (நல்வழியே)

— *அபலை அஞ்சும்*

# கல்வியில்லா(ர்) அந்தகர்

ஆரபி ஆதி

### பல்லவி

கல்வியைப் போலொரு செல்வம் உளதோ!
காணவேணும் புவியோரே! (கல்வி)

### அநுபல்லவி

வெள்ளத்தாலும் கனல் வீழினும் குலையா!
வேந்தர்கள் அனைவரும் தான் கொள்ள முடியா!
அள்ளிக் கொடுப்பினும் எந்நாளும் குறையா!
அறிவிற் குணவுமாம் யாதினும் அழியாக் (கல்வி)

### சரணம்

கலைஞானமே இல்லார் கானில் வாழ்மரம்!
கடையராம் மதியினர் பா மரம்!
அலகையொடு மிருகம் ஆவார் சிறியார்
அந்தகர் எதற்கும் ஆகார் ஆகார்! (கல்வி)

### சுரமுடுகு

பா மணம் நிறை பாகெனவே இன்பமருள் (கலை)

பங் கேருகநற் றுங்கா! தனியருள்
சங்கீத சம்ப்ரதாய ரச (கலை)

பரணிமுதலாய் தூது காதலுடன் அந்தாதி
திருவா யிரமணிமாலை புராணம்
குறவர் வஞ்சி கலம்பகமும்
என்று வந்து பண்பாடும் ப்ரபல (கலை)

— *தமிழ் அறியும் பெருமாள்*

## உன் கடமையைச் செய்!

தெய்வத்தாலாகாது என்றாலும் முயற்சி
மெய்வருத்தக் கூலி தரும் என்பதாலும் — நீ
செய்வன திருந்தச் செய் மென்மேலும் — உண்மை
ஜெயிக்குமடா தம்பி எந்த நாளும்!
மலையது கலங்கிடினும் கலங்காதே! — மனம்
கலங்காதே!
மானமற்ற பேடியென வாழாதே!
உலகிலுன் கடமை செய்யத் தவறாதே — அதற்கு
உயிரை நீ பெரிதனவே மதியாதே — மனிதா!
முன்னறியும் தெய்வமடா அன்னை பிதா — அவர்
மொழிந்த தெல்லாம் நமக்கு வேதமடா — மனிதா!

(செய்வன

## நல்லால்லே...!

பொதுக் கூட்டங்களுக்குப் போறதும்
பூமாலை வாங்கறதும் — நீங்க
புகழைத் தேடுவதும் — வீட்டில்
பெண்டாட்டி புள்ளே திண்டாட்டப்பட்டுப்
புவ்வாவுக்குச் சாகிறதும்
நல்லால்லே நல்லால்லே நல்லால்லே!

கொடியைப் புடிச்சுத் தெருத்தெருவா
கூச்சல் போடறதும் — கட்சி
கொள்கை பேசுறதும் — அங்கே
குண்டாந் தடியைக் கண்டா நீங்க
குடல் தெறிக்க ஓடுறதும்
நல்லால்லே நல்லால்லே நல்லால்லே!

அஞ்சு ஏக்கர் புஞ்சைநெலத்தை
நஞ்சை பண்ணாமெ — நாத்து
நடவு நடாமெ — உணவுக்கு
அடுத்த நாட்டுக் காரனையே
அனுப்பச் சொல்லிக் கேக்கறதும்
நல்லால்லே நல்லால்லே நல்லால்லே!

— *மணமகள்*

# எது அறிவு?

ஒன்றே மாந்தர்குலம் ஒருவனே கடவுள்
என்றே தேறுவது அறிவாகும்!

அது
நன்றே யாகுமென உணர்ந்திடாரை மக்கள்
என்றே கூறுவது தவறாகும்!

பெண்ணும் ஆணுமென பிறந்த ஜாதியது
மண்மேல் ரெண்டுதான் வேறில்லை!

இதில்
பேதம் நாட்டி மனப்பகைமை காட்டி நாம்
பிரிந்து வாழ்வதில் பயனில்லை.

சிலைகள் செய்துமே கடவுள் நாமம் தந்து
புலவர் பாடினதும் எதனாலே?

புத்தி
தெளிவில்லாரும் நல்ல வழியிலே மனதைச்
செலுத்த வேண்டுமென்ற முறையாலே

அழிந்திடாது என்றும் குறைந்திடாது மனம்
மறந்திடாது நிற்கும் பொருள் யாது...?

"உடல்!"
அழிந்தபோதும் புகழ் மறைந்திடாது நிற்கும்
அறிவை யூட்டும் கல்வி புவிமீது

எது...?

பகுத்தறிவை யூட்டும் கல்வி புவிமீது
அடக்கவேண்டியது யாரை...?

"துஷ்டனை!"

மனிதன் அடக்க வேண்டியது யாரை?

"தன்னைத்தானே!"

கடைப்பிடிக்க வேண்டியது என்ன?

"காக்கர் சார்!"

ரவீந்திரா... கடைபிடிக்க வேண்டியது என்ன?

"நல்ல ஒழுக்கம்!"

படிக்க வேண்டியது என்ன? பத்பநாபா!
படிக்க வேண்டியது என்ன?

"நாவல் சார்!"

இப்ராகீம்?

"பத்திரிக்கை சார்!"

ரவீந்திரா படிக்க வேண்டியது என்ன?

"திருக்குறள் சார்....!"

பலே.... பலே.... (ஒன்றே)

## அவசியம் இல்லாத செலவு எதற்கு?

இந்தப் பழசெ அவுத்துப் போட்டு — புதுப்
புடவை ரவிக்கை மாட்டு, உம் — வெளியே
கௌம்பு... கௌம்பு — நீ
கதவை இழுத்துப் பூட்டு!
கடை வீதி மேலே போவோம் வா! செலவுக்
கிந்தா நோட்டு!!

அவசரப் படாதே அத்தை மவனே — வீணே
அவசிய மில்லாத செலவு நமக்கு வேணாம்;
அப்பன் பாட்டன் தேடி வச்ச
அய்வேசும் நமக்கில்லை,
அன்னாடங் காச்சி நாம
ஆளை ஏச்சுப் பொழைக்கும்
குறுக்கு மூளை கூட உனக்கில்லே!
அவசரப் படாத அத்தை மவனே — வீணே
அவசிய மில்லாத செலவு
நமக்கு வேணாம்!!

## பண்பிலா மாந்தர்

### பல்லவி

பாம்போடு பழகலாம் பெண்மணி
பண்பில்லா மாந்தருடனே பழகினால் அடாது
என் கண்மணி
அதனிலும் (பாம்போடு)

### அநுபல்லவி

வீம்போடு பழகினால் வேலை கெடும் — கெட்ட
வீணர் ஸ்நேகத்தால் மானங் கெடும்
சோம்பேறித் தன்மையால் சுகங் கெடும்
சொல்கிறேன் — அதனிலும் (பாம்போடு)

### சரணம்

அவதியாம் மமதை அகங்காரம் — பிறர்
அடிமை என்று செய்யும் அதிகாரம்
இவையெலாம் தவறாகும் இந்நேரம்
எண்ணுவாய் — இதனிலும் (பாம்போடு)

அன்பு சார்ந்த மன விளக்கம் — அருள்
அறம் என்ற நெறி ஒழுக்கம்
நன்று தேர்ந்திடார் இணக்கம்
நியாயமா? — அதனிலும் (பாம்போடு)

## காலம் அறிந்து நடக்கணும்

கூழென்றாலும் பசித்த வேளை
குளித்து நன்றாய்க் குடிக்கணும்;
பாலென்றாலும் பசியா வேளை
பட்டினியாகப் படுக்கணும்!
கால மறிந்தே நடக்கணும் — நம்
கடமையைச் செய்தே முடிக்கணும்;
ஓலைச் சுவடியை எடுக்கணும் — அதை
உணர்ச்சியாகப் படிக்கணும்!

## உடல்நலம் பேணுக

பாத்துக்கோங்க நல்லாப் பார்த்துக்கோங்க — கொஞ்சம்
பக்குவமாக ஒடம்பெப் பாத்துக்கோங்க
பூர்த்தியாக நூறாண்டு பூமிமேலே — மக்கள் சுக
போகந்தேடி வாழ்ந் திடத்தேகம் வேண்டுமாகையாலே (பாத்து)

காத்தாலே ஓடும் ஒன்பதோட்டை!
கடிகாரம் போன்ற சோத்துமூட்டை! — இதை
ஆஸ்திபோல காத்து வச்சா ஆண்டிடலாம் நாட்டை!
அஜாக்ரதையாக விட்டுவிடாதீங்க கோட்டை! (பாத்து)

கடலை எண்ணெய் பதார்த்தங்களைத் தொடாமல் — நேரம்
காலம் தெரியாமல் உண்டு கெடாமல் (நிலக்) — ஊசை
அடையும் வடையும் அடச்சு அஜீரணப்படாமல்
ஆஸ்பத்திரி ஆளுங்களெ அவஸ்தெப்படவிடாமல் (பாத்து)

பாதி வயத்துச்சோறு அதில பாதி நீரு
பசியெடுத்த பின்னாலே தின்னுங்க — மாட்டுப்
பாலு முட்டை கீரை பாதாங்கொட்டை — நல்ல
பழவர்க்கம் அதிகமாக உண்ணுங்க
தாது விருத்தி தன்னை உண்டாக்குங்க — கெட்ட
சகவாசப் பழக்கந்தனை நீக்குங்க — சொன்ன
சத்தியத்தை மறந்தாலும் மறக்கலாமுங்க — ஆனால்
பத்தியத்தெ ஒருநாளும் மறக்காதீங்க — நீங்க (பாத்து)

வெங்காயத்திலே வைடமின் 'ஏ'யிருக்குது தின்னுங்க
மீனில் 'பீ' இருக்குது தின்னுங்க
வெண்மையான முட்டைக்கோஸில் தக்காளியில் 'ஸி'யிருக்குது
வெண்டைக்காயில் கொழுப்பிருக்குது தின்னுங்க
இங்கிலீஸ் முறைப்படிக்கு எதிலே சத்து இருக்குதோ
இயற்கைப் பொருளை ஆராய்ச்சி பண்ணுங்க — வைட்டமின்
ஏ பி ஸி டி ஈ யைச் சேர்த்துத் தின்னுங்க
இருக்கும் வரைக்கும் சுகப்பட்டது மிச்சங்க — பத்திரம் (பாத்து)

## புதிய விதைப்புகள் !

நல்ல நல்ல நிலம் பார்த்து
நாளும் விதை விதைக்கணும்!
நாட்டு மக்கள் மனங்களிலே
நாணயத்தை வளர்க்கணும்!

பள்ளி என்ற நிலங்களிலே
கல்வி தன்னை விதைக்கணும்!
பிள்ளைகளைச் சீர் திருத்தி
பெரியவர்கள் ஆக்கணும்!
கன்னியர்க்கும் காளையர்க்கும்
கட்டுப் பாட்டை விதைத்துக்
கற்பு நிலை தவறாத
காதற் பயிர் வளர்த்து
அன்னை தந்தை யானவர்க்குத்
தம் பொறுப்பை விதைத்து,
பின் வரும் சந்ததியைப்
பேணும் முறை வளர்த்து
இருப்பவர்கள் இதயத்திலே
இரக்கத்தை விதைக்கணும்!
இல்லாதார் வாழ்க்கையிலே
இன்பப் பயிர் வளர்க்கணும்! (நல்ல)

பார் முழுதும் மனிதகுலப்
பண்புதனை விதைத்து
பாமரர்கள் நெஞ்சத்திலே
பகுத்தறிவை வளர்த்து
போர்முறையைக் கொண்டவர்க்கு
நேர் முறையை விதைத்து,
சீர்வளரத் தினமும்
சினேகமதை வளர்த்து,
பெற்ற திரு நாட்டினிலே
பற்றுதனை விதைக்கணும்!
பற்றுதனை விதைத்துவிட்டு — நல்ல
ஒற்றுமையை வளர்க்கணும்! (நல்ல)

— ***விவசாயி***

## சரியில்லே...!

சரியில்லே — உலகம்
சரியில்லே!
தெரியாமல் எதையும் எவரும்
செய்கிறதும் சரியில்லே
செய்தபின்னால் மாட்டிக் கிட்டு
சிந்திப்பதும் சரியில்லே!
மரியாதையை விட்டுக் கொடுத்து
மானங்கெடல் சரியில்லே!
மானங்கெட்ட பின்னால் மனுஷன்
வாழ்கிறதும் சரியில்லே!
சரியில்லே — மொத்தச்
சரியில்லே!
கூட்டத்தில் பேசும் போது
கூச்சல்கீச்சல் போடுவதும்
சீட்டெழுதிக் கொடுக்கிறதும்
பாட்டுப்பாடச் சொல்கிறதும்
பாட்டுப் பாடும்போது வாயால்
சீட்டிகளை அடிக்கிறதும் சரியில்லே (மெத்தச்)

படிக்காத ஆளுங்களுக்கு
பட்டந்தரல் சரியில்லே
பட்டங்களை கொடுத்துப்புட்டு
திட்டுவதும் சரியில்லே
அடிக்காமல் பிள்ளை வளர்த்து
அறிவுகெடல் சரியில்லே
அறிவுகெட்டுப் போனானென்று
அழுகிறதும் சரியில்லே!
அது
சரியில்லே! — மெத்தச்
சரியில்லே!

பூப்படைந்த பெண்ணைப் பொன்னை
புத்தகமிம் மூன்றையும்
மாற்றானிடங் கொடுத்துச் காப்பாற்றச்
சொல்கிறதும் சரியில்லே — மெத்தச்
சரியில்லே.

சுதி விட்டுப் பாடுவதும்
ஜதி விட்டு ஆடுவதும்
நிதி விட்டுத் தேடுவதும்
நிலைகெட்டு வாடுவதும்
சரியில்லே! — மெத்தச்
சரியில்லே!

— *காவேரி*

## உழைப்பே உயர்வு

வட்டி கொடுத்தும் வரவு இல்லே நோட்டிலே — இந்த
வம்பு தும்பு அதிகமாச்சு நாட்டிலே.

அரைப்படியை ஒருபடியா அளக்குறான் — பணத்தை
ஆகாசக் கோட்டையிலே பூட்டுறான்.

கட்சிகட்சி என்று சொல்லிச் சாகுறான் — மனுசன்
கஞ்சிக்காக ஏங்கிஏங்கி வாடுறான்.

என்னசெய்வோம் இந்தத் துன்பம் நாட்டிலே — கடவுள்
எழுதிவிட்டான் நமது தலையில் ஓட்டிலே!

என்றுசொல்லி மனதுதளர்ந்து நோகுறான் — ஏழை
மென்று வாயைப் பேந்தப் பேந்த விழிக்கிறான்!

நல்லவர்கள் நலிந்து மண்ணில்வீழுறார் — கெட்ட
நாசகாலர் நாலடுக்கில் வாழுறார்!

கூலிகேட்டாக் கேலிபண்ணிப் பேசுறான் — அவன்
வாலைப் பொண்ணைக்கண்டு கண்ணையடிக்குறான்!

நெஞ்சொடியப் பாடுபட்டும் வயித்திலே — கூழுக்
கஞ்சியில்லை யானதாலே செகத்திலே.

கூட்டுப்பண்ணை வைக்கவேணும் ஊரிலே — தரிசு
காட்டுநிலம் கழனியாகும் பாரிலே.

உழைப்பினாலே உயர்வுஎன்ற எண்ணமே — வந்திடிலோ
களைத்திடாது வாழ்வோம்இது திண்ணமே!

## முன்அறியும் தெய்வம் – அன்னை பிதா!

தாயின் மொழி வழியே தந்தை மொழி காத்தான்
தரணியில் ரவிகுல ராமன்!
தந்தை சுகம் காக்க தனது சுகம் மாய்த்தான்
சந்திர குலத் தோன்றலெனும் பீஷ்மன்!!

## ஆளை ஏய்க்க இனி முடியாது!

### தொகையறா

உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார் மற்றெல்லாந்
தொழுதுண்டு பின் செல்பவர் என்றே — சொல்லும்
பழுதற்ற வள்ளுவன் பைந்தமிழ் நீதி
வழிசென்று மாண்பால் உயர்ந்தநாடு நமது தாய்நாடு.

### பாடல்

நாட்டுக்குப் பொருத்தம் நாமே நடத்தும்
கூட்டுப் பண்ணை விவசாயம் — பட்ட
பாட்டுக்குத் தகுந்த ஆதாயம் — உண்டு
பழைய கொள்கைகளை விடுவது ஞாயம்! (நாட்டு)

காட்டையும் மேட்டையும் தோட்டம் தொடிகள்
கழனிகள் செய்வது திறமை — அதனால்
கட்டாயம் நீங்கும் வறுமை — அவ்வைப்
பாட்டியும் பாட்டால் பாடிப் பெருமை
பாராட்டிய தொழில் முறைமை — இது
பரம்பரை யாய் நமக்குரிமை! தமிழ் (நாட்டு)

ஒத்தைக் குடித்தனம் பத்துக் காணியில்
உழுது பாடுபட முடியாது — ஒரு
பத்துக் குடித்தனம் நூறு காணியில்
பாங்காய் உழுவது தான் தோது!
பாளையக் காரர் ராஜாதி ராஜர்
பதவிகள் பறக்கின்ற போது — நம்ம
பட்டாக்கள் மிட்டா மிராசுகள் ஜம்பம்
கட்டாய மாய்ப் பலிக் காது! (நாட்டு)

நாளுக்கு நாளாக் காலம் மாறுது
நடப்பதை நெனைச்சா நடுக்க மாகுது
ஆளை ஏய்க்கஇனி முடியாது — மக்கள்
ஆட்சியில் சுயநலம் கூடாது — நம்ம (நாட்டு)

புருஷன் பொண்டாட்டி புள்ளெ குட்டிங்க
உருப்படிக் கணக்கையும் போட்டுக் கணும்
சரி சமமாக விகிதாச் சாரப்படிச்
சாப்பாட்டுச் செலவுக்கும் வாங்கிக் கணும்.

வரும்படி தன்னை அதிகமாக் கணும்
வகை தொகையான செலவுஞ் செய்யணும்
உலகம் நம்மைக் கண்டு நடக்கவே
உண்மையோடு நாம் உழைக்கணும் — உயிர் பிழைக்கணும்.
(நாட்டு)

— *எங்கள் வீட்டு மகாலட்சுமி*

## களையிருந்தால் வளம் இல்லை!

வயலுக்குள்ளே களையிருந்தா பயிருக்கு
வளமிருக்காது — நெல்லுப் பயிருக்கு
வளமிருக்காது!

நல்ல மனிதர்க்குள்ளே பயமிருந்தா நாட்டுக்கு
நலம் வளராது — இந்த நாட்டுக்கு
நலம் வளராது!

மனசுக்குள்ளே பயமிருந்தா
வாழ்வுதான் உயராது — புவி
வாழ்வுதான் உயராது!

செல்லும் மார்க்கத்திலே தவறிருந்தா
மதித்திடும் புகழ் உயராது!

பாடுபட்டுப் பயிர் வளர்த்து பலனெடுக் கோணும் — நல்ல
பலனெடுக் கோணும்! — அதைப்
பலபேருக்கும் பகிர்ந்து கொடுத்துப்
பஞ்சம் நீக்கோணும் — உணவுப்
பஞ்சம் நீக்கோணும்!!

## பாட்டாளியை மதிக்கணும்

உழுது வெதச்ச உழைப்பாளி
உணவில் லேங்குறா; — கையில்
பணமில் லேங்குறா! — பணம்

கொழுத்த மனுசங் கிடைத்த அரிசி
குணமில் லேங்குறா — சோறு
மணமில் லேங்குறா!

புளியங் கொட்டையைத் தின்னதாலே
புளியங் கொட்டையைத் தின்னதாலே
கொள்ளை நடந்தாச்சா?

தில்லாலங்கடி... தில்லாலே

காட்டிலிருக்கும் கரி காலன்
நாட்டுத் தலைவனாகணும்!

நாட்டுத் தலைவனாகணும்!
அந்த ஆட்டுக்கறிச் சேட்டையோடு
அஞ்சாம் படையை ஒழிக்கணும்!

பாட்டாளியை வளர்க்கணும்; நல்ல
படிப்பாளியை மதிக்கணும்!
பண்டம் மாற்றிப் புசிக்க ஜனங்கள்
பகைமை நீங்கி வாழணும்!

தில்லாலங்கடி....
நல்லால்லே...

— *மர்மயோகி*

## மதுவின் தீமை

குடிச்சுப் பழகணும்
குடிச்சுப் பழகணும்!
படிச்சுப் படிச்சுச் சொல்லுறாங்கோ
பாழுங் கள்ளை நீக்கிப் — பாலைக் (குடி)

பாலு வாங்கப் பணமில்லே?
டீயைக் குடிச்சுக்கோ!
டீயும் கெடுதலின்னு தெரிஞ்சா?
மோரைக் குடிச்சுக்கோ!
மோரும் நமக்குக் கிடைக்கலே?
நீராகாரம் இருக்கவே இருக்கு! (குடி)

— *நல்லதம்பி*

## மரங்களுக்கு விடுதலை!

விடுதலை! விடுதலை! விடுதலை!!!

உடலை வாட்டும் நோய்களுக்கும்
தலைவலிக்கும் இன்று முதல் (விடு)

பகலும் இரவும் தொங்கிக் கிடந்த
பல்லாக் களுக்கும் விடுதலை!
பயந்து பயந்து ஏறி இறங்கும்
பாட்டாளிக்கும் விடுதலை!

ஜெகத்தை வெறுக்கச் செய்யும் கஞ்சாச்
சிலும்பி களுக்கும் விடுதலை!
முகத்தை மூடிக் குடிக்கும் கள்ளு
மொந்தை களுக்கும் விடுதலை!

பனை மரத்துக்கும் விடுதலை!
தென்னை மரத்துக்கும் விடுதலை!
பனை மரத்துக்கும் தென்னை மரத்துக்கும்
ஈச்ச மரத்துக்கும் விடுதலை!

விடுதலை! விடுதலை!! விடுதலை!!!

— *நல்ல தம்பி*

## குடி கெடுத்த குடி ஒழிஞ்சுது!

குடி கெடுத்த குடி யொழிஞ்சது
    அடிதடி சண்டை யதுங் கொறைஞ்சது;
ஆணும் பெண்ணும் புத்தி யறிஞ்சது — எங்க நாட்டிலே,
    அக்டோபர் ரெண்டுக்கு மேலே! (குடி கெடுத்த)

தாலிக் கயிறு தனியா யிருக்கும்
    தங்க மிருக்காது — அதிலே (தங்கம்)

தண்ணி குடிக்கத் தகரக் கொவளை
    . சொம்பு மிருக்காது — வீட்டிலே!
    சொம்பு மிருக்காது — வீட்டிலே!

பாலு வாங்கக் கொழந்தப் பசிக்குப்
    பணமிருக்காது — கையிலே — பணமிருக்காது!
பாழுங் கள்ளைக் குடிப்பது மட்டும்
    நாளுந் தப்பாது! — எந்த (நாளுந்)

கூலிக் காசில் சோளம் வாங்கிக்
    கூழுக் காச்சி வச்சிருப்பா!
ஆளப் பாத்தா ஆம்பிளை தான்
    அதையும் வித்துக் குடிச்சிவிடுவா(ன்)

கடைக்குப் போவாங்...
    கள்ளக் குடிப்பாங்...
காரிய மில்லாமச்
    சண்டைக்குப் போவான்!

வடையை ரெண்டை வாங்கிக்குவான்,
    வழி நெடுகப் பேசிக்குவான்!
வந்து கதவைத் தட்டுவான்;
    வாயில வந்ததைத் திட்டுவான்! — அவன்

வாழ்வின் சுகத்தை விரும்பும் பெண்ணை
    வஞ்சகக் காரி யென்றுதைப்பான்;
வார்சுக்காக சிசுவைத் தாங்கும்
    வயித்திலே யெட்டி மிதிப்பான்; அப்பப்பா...!

இந்தக் கள்ளுக்குடியை
நம்ம நாட்டை விட்டு
ஒழிச்ச அந்த
நல்ல மனுசன் காலுக்குக்
கோடி கோடி கோடி கோடி
    கோடி கோடி கும்பிடு!

— *நல்ல*

## மனுசனாகிப் போனேன்!

மனுசனாகிப் போனேன் — இப்ப நான்
மனுசனாகிப் போனேன்.
பனைமரப் பாலு, பட்டை பிராந்தி
பக்கம் வந்தா எடுக்கிறே(ன்) வாந்தி!

இரண்டாம் தேதி வருவதற்கு முன்னே — அக்டோபர் மாதம்
    இரண்டாம் தேதி
    வருவதற்கு முன்னே!

எங்கண்ணுக் குன்னை
    இரண்டாளாகத்
    தெரிஞ்சுது பெண்ணே!
சுருண்டு சுருண்டு நான்
சும்மா படுப்பேன்!
சுதியை விட்டுங் கூடப்
பாட்டுகள் படிப்பேன்! (மனு)

வறண்ட கார வடை,
வாத்து முட்டை — கரு
வாட்டைத் தின்ன வாய்
நாத்தம் நீங்கி நான் (மனு)



## பணம் பேசுது பந்தியிலே!

உலகம் போற போக்கிலே
உள்ளது எதுமே நடக்கலே
குலமும் குணமும் சந்தியிலே — இப்பப்
பணந்தான் பேசுது பந்தியிலே!

தலை விரிச்சாடும் பஞ்சத்திலே — பெற்ற
தாயிக்கும் பிள்ளைக்கும் சொந்தமில்லை!
சமயம் பார்த்து நிலையிழந்தவன் — பொருளைத்
தன் வச மாக்கிடும் பாட்டிலே!

பணந்தான் பேசுது பந்தியிலே...

ஊரக் கெடுத்தவன் முழிச்சிக்கிட்டான் — ஏழை
பேரச் சொல்லியே பொழச்சிக் கிட்டான்!
ஏரெப் புடிச்சவன் படுத்துக் கிட்டான் — அவன்
ஏழ்மையில் உடைமையை இழந்து விட்டான்!

பணந்தான் பேசுது பந்தியிலே...

பகல் வேஷம் போடும் காலமடா — பலர்
பகல் வேலை செய்யும் நாளிதடா?
காருக்குள்ளே பண லீலை யெல்லாம் — அட
பகவானே! இதைப் பார்க்கச் சகிக்கலே!

பணந்தான் பேசுது பந்தியிலே...

— *பொன்னி*

# பெட்டியில் தூங்கும் பேரின்பம்!

தெய்வத் திரு மகளே! — தங்கமே!
    செல்வச் செழும் பொருளே! (தெய்வ)

செய்ய மலர் மயிலே! — தங்கமே!
    செய்குவை இன்னருளே! (தெய்வ)

அலைகடல் தந்தவளே! — தங்கமே!
    அமுதொடு வந்தவளே! (அலை)

கலைமகள் மாண்பை யெல்லாம் — தங்கமே!
    கைவிலை கொள்பவளே!
கங்கை நன்னீர் தனிலே — தங்கமே!
    காகுத்தன் மார்பினிலே

தங்கும் மருக் கொழுந்தே! — தங்கமே
    சங்கடம் தீர்த்திடுவாய்!

திருமண மேடையிலே — தங்கமே!
    சிறந்த பட்டாடையிலே
நறுமலர் வாடையிலே — தங்கமே!
    நாடிடும் நாயகியே!

செட்டியின் வட்டியிலே! — வளரும்
    ஜீவ சிந்தாமணியே! — கஞ்சர்
பெட்டியிலே தூங்கும் — உலகின்
    பேர் இன்பமே! வருவாய்!

## பணத்துக்கு வாழ்த்து

தாஷ்டீக, சந்தோஷ, சம்பூர்ண சம்பிரம
கோஷ்டி புரியும் நல்ல கோலாகலப் பணமே!
தேம்பணமே எவ்விடத்தும் திகழ்பணமே! தேடரிய
பூம்பணமே! புகழ்ப்பணமே! பொன்பணமே! என்பணமே!

எக்காலத்தும் கோர்ட்டில் பொய்க்கேசும் ஜெயமாக
வக்காலத் துகள்பேசும் வக்கீலும் நீயலவோ?
நேரண்டும் எதிரியிடம் நிதிவாங்கி மறுபடியும்
வாரண்டுங் கையுமாய் வருகிறவன் நீயலவோ?

பல்லாடும் கிழவருக்குப் பருவமுள்ள மங்கையரைக்
கல்யாணம் கூட்டுவிக்கும் கடவுளதும் நீயலவோ?
அதர்மத்தால் ஊரார்தம் ஆஸ்திகளைச் சேர்த்தவனைப்
பதவிதனில் ஏற்றிவைக்கும் பரம்பொருளும் நீயலவோ?

ஒவ்வுகின்ற கட்சிவிட்டு ஒவ்வாத கட்சிக்கு
வௌவால்போல் தவ்வவைக்கும் வடிவழகன் நீயலவோ?
வட்டிக் கணக்கினிலே வாட்டி வளைவெடுத்தென்
பெட்டியிலே தூங்குகின்ற பெம்மானும் நீயலவோ.

திருவே! என் செல்வமே! தேனே! வானோர் செழுஞ்சுடரே!
அரும்பொன்னே மணியே! அம்புவியை ஆட்டுவிக்கும் அரசே!
வாழ்க!

## காசு முன் செல்லாது!

தேசம் ஞானம் கல்வி ஈசன் பூசையெல்லாம்
காசுமுன் செல்லாதடி — குதம்பாய்
காசுமுன் செல்லாதடி!

ஈசனும் ஈசனார் பூசையும் தேசத்தில்
காசுக்குப் பின்னாலே — குதம்பாய்
காசுக்குப் பின்னாலே!

காட்சியான பணம் கைவிட்டுப் போனபின்
சாட்சி கோர்ட்டு ஏறாதடி — குதம்பாய்
சாட்சி கோர்ட்டு ஏறாதடி!

பைபையாய்ப் பொன்கொண்டோர்
பொய் பொய்யாய்ச் சொன்னாலும்
பொய் மெய்யாய்ப்போகுமடி — குதம்பாய்
பொய் மெய்யாய் ஆகுமடி!

நல்லவ ரானாலும் இல்லாதவர் தம்மை
நாடு மதிக்காது — குதம்பாய்
நாடு மதிக்காது! — கல்வி
இல்லாத மூடரைக் கற்றோர் கொண்டாடுதல்
வெள்ளிப் பணமடியே — குதம்பாய்
வெள்ளிப் பணமடியே! (தேசம்)

— *பராசக்தி*

## எங்கே தேடுவேன்?

எங்கே தேடுவேன்? பணத்தை எங்கே தேடுவேன்?
உலகம் செழிக்க உதவும் பணத்தை (எங்கே)
கருப்பு மார்க்கட்டில் போய் மறைந்தாயோ?
கஞ்சன் கையிலே சிக்கிக் கொண்டாயோ? (எங்கே)

திருப்பதி உண்டியலில் போய் விழுந் தாயோ?
சூடம் சாம்பிராணியாய்ப் புகைந்து போனாயோ?
தேர்தலில் சிக்கித் தேய்ந்து போனாயோ?
திருடன் கையிலே மாட்டிக் கொண்டாயோ? (எங்கே)

கிண்டி ரேஸில் சிக்கிக் கிறுகிறுத் தாயோ?
அண்டின பேர்களை ரெண்டும் செய்யும் பணத்தை (எங்கே)

இரும்புப் பெட்டிக்குள்ளே போய் ஒளிந் தாயோ?
இரக்கமுள்ளவரிடம் இல்லாத பணத்தை (எங்கே)

பணமே... பணமே... பணமே... பணமே...

— *பணம்*

## பணம் பந்தியிலே...

பணம் பணம் பணம் பணம்
பணம் பந்தியிலே!
குணம் குணம் குணம் குணம்
குணம் குப்பையிலே? (பணம்)

இனம் புகழ் மணம் மகா
கனம் தரும் பணமே!
சுகமெல்லாம் தந்திடும் பொல்லாத
பணம் இல்லான் நடைப்பிணமே. (பணம்)

காசால ஆகாத காரியமில்லை
காசில்லேனா கோயில் குளம் பூஜையுமில்லே
ஆசை நண்பர் பெண்டு பிள்ளை
அண்ணன் தம்பி இல்லே! (பணம்)

(ஒருத்தனும் இல்லை போ)

கலை ஆட்டம் பொதுக் கூட்டம்
வெள்ளையப்பன் இல்லாதில்லே! (பணம்)

— *மாமியார் மெச்சிய மருமகள்*

## நிலைநில்லாது உலகினிலே!

ராகம் : கீர்வாணி                                                    தாளம் : ஏகம்

**பல்லவி**

ஓரிடந்தனிலே — நிலை நில்லாதுலகினிலே
உருண்டோடும் பணங்காசெனும்
            உருவமான பொருளே!

**அநுபல்லவி**

ஊரும் பேறும் தெரியாதவரை
உயர்ந்தோராக்கிடுமே! — அது (உயர்...)
உருண்டோடிடும் பணங்காசெனும்
        உருவமான பொருளே!

**சரணம்**

காசு நல்ல காரியம் செய்யாது
கண்மூடித்தூங்கக் கருணை காட்டாது
களவு கொலை யுண்டாக்கும்
கவலைமிகவும் சேர்க்கும்
காமுறும் இன்பமும் சொந்தமும்
எல்லாமே நீக்கும்                                    (ஓரிடந்தனிலே)

— *வேலைக்காரி*

## செல்வமே சீவாதாரம்!

செல்வமே சுக ஜீவாதாரம்
திருமகள் அவதாரம் மேலாம்                                (செல்வ)

உள்ளபடி செல்வம் இல்லாதவரே
உலகினில் உயிர்வாழ்வது தவறே!
கல்லா ரெனினும் காசுள்ளவரைக்
காட்சிப் பொருளாய்க் காணார் எவரே?                (செல்வ)

தேசுலாவும் அஷ்டபோகானந்தம்
செல்வமே தரும்இது சித்தாந்தம்!
பேசும் கீர்த்தியே தேடிடும் சொந்தம்
காசில்லார்க் கதனில்ஏது சம்பந்தம்?                (செல்வ)

— *குபேர குசேலா*

## ஒருவர் இன்பம் ஒருவர் துன்பம்!

பணக்காரர் தேடுகிற இன்பம் ஏழைப்
பாட்டாளி மக்கள் படுந்துன்பம் — காசு (பண)

குணத்தோடு பழகாத கூட்டம் — கூலி
குறைத்துக் கொடுக்கப் போராட்டம் செய்யும்!
குளம் வெட்டுவார், மடம் கட்டுவார் — கடன்
கொடுத்தே பின் வழக்காடி அடுத்தவரைக் கெடுத்தாகும் (பண)

காசு பணங் கொண்டவர்க்குக்
கவலையில்லாத நேரம் ஏது? — வெள்ளிக் (காசு)

அவர் கண்மூடித் தூங்க முடியாது! — பகல்
காலத்திலே கொள்ளை லாபத்திலே
காருண்யம் இன்றித்தேடும் — தங்கக் (காசு)

கூழையுண்ணும் ஏழை மணிக்
கேழு மயில் நடப்பான்! — பணம்
கொண்ட செல்லன் வண்டி யேற ரெண்டு
பேரை அழைப்பான்!!

வேலை செய்யும் கூலி ஒரு
நாழி அன்னம் புசிப்பான்; — ஆளை ஏய்க்கும்
கோழை முதலாளி சோற்றை வெறுப்பான்!

நாட்டைக் காக்கும் ஏழை
வீட்டுக் காரி உடம்பு — கட்டு மஸ்தும்
கல்லுப் போலும்இருக்கும் — அது இரும்பு!
வீட்டைக் காக்கும் செல்வனின் பெண்டாட்டி உடம்பு — அது

வெளியே சொல்லும் விஷயமல்ல
மெலிந்த கரும்பு!
நாட்டைக் கெடுக்கும்
நவ நாகரீகம் நாடுவார்;
பூட்டி வைத்த சொர்க்கத்தைக் காட்டி உறவாடுவார்;

பூட்டும் நகையாலே
பொருளாலே புகழ் தேடும் (பண)

— *பைத்தியகாரன்*

## துணிந்த பின் மனமே துயரம் ஏன்?

துணிந்தபின் மனமே துயரம் கொள்ளாதே!
சோகம் பொல்லாதே!
அலையும் காற்றினில் அகல் விளக்கேற்றி
மறைப்பதில் பயனுண்டோ? கையால்
மறைப்பதில் பயனுண்டோ? அதனால் (துணிந்த)

பாயும் ஆற்றில் நீ வீழ்ந்த பின்னால்
நீந்துவதால் பயனேது?
சீறும் புயலும் மழையும் சேர்ந்தால்
சின்னக்குடை தாங்காதே! (துணிந்த)

காதல்தந்த துயர்தீரப் போதைக்
கடலில் மூழ்கிடலானாய்!
சாவது நிஜமே நீ ஏன் வீணாய்
சஞ்சலப்பேய் வசம் ஆனாய்? (துணிந்த)

— *தேவதாஸ்*

## வாழ்க்கை — நிலையில்லா ஓடம்!

நீராடை யுடுத்த நிலமிதற்கே
யுற்ற முறைமை
நேற்றிருந்தவன் இன்றில்லை
என்கிற பெருமை.

நிலையில்லாத ஓட மடா
புவி வாழ்க்கை
நிலையில்லாத ஓட மடா
உலக வாழ்க்கை
நீர் மேலே குமிழி யடா
மனித யாக்கை.

## யோக்கியன் எங்கே?

### தொகையறா

வாக்காலே பிறர் வாழ்வைக் கெடுத்தே வாழ்வாரும்
மனத்தாலே கெடுக்கவழி பார்த்தே இருப்பாரும்
யாக்கையின் பலத்தாலே அடித்துப் பிழைப்பாரும்
அல்லாமல் நல்லோரை அறியேன் பராபரமே!

யோக்கியன் என்பவன் உலகத்திலே
ஒருத்தனும் கிடையாது? — பரம (யோ)

மண்ணாசை பெண்ணாசை பொன்னாசை — இந்த
மூணும் இருக்காது
ஆசையினாலே பொறந்து வளர்ந்தது
அரிய மானுடப் பிறப்பு!
அதற்காதார மானதும் அவசியமானதும்
காசு பணம் கையிருப்பு — அந்தக்
காசு பணத்தைக் கண்யமாகவே
கைசேர்த்துவது மறுபிறப்பு — இதைக்
கவனிச்சுப்பாரு
உருட்டுக்கும் புரட்டுக்கும் திருட்டுக்குள்ளேதான்
நடக்குது பொழப்பு! (யோ)

இல்லாத கொடுமை ஏமாற்றத் தெரியான்
இருட்டுலே போடுறான் தேட்டை;
இலட்சக் கணக்கில் கைமாத்தி கிய்மாத்தி
இன்சால் வெண்டாகுறான் பணமூட்டை;
கள்ளனென்ற பேரால் காணாத போது
கத்தரித் தெடுக்கிறான் பொன்னே — கழுத்தில்
கத்தரித் தெடுக்கிறான் பொன்னே! — நகைக்
கடையின்னு வச்சுக்கிட்டுக் கல்லாலே உரைச்சிக்கிட்டு
கரைக்கிற செட்டியவங் கண்ணே! — இதில் (யோ)

தீர்க்கதரிசி பல நூற்றாண்டிலே
தெய்வம் போலொண்ணு பொறக்கலாம்;
ஏசு புத்தர் காந்தியைப் போலே
செத்தும் சாகா திருக்கலாம்!

— *மாமியார் மெச்சிய மரு*

## உலகம் — ஏழையின் நரகம்

என்ன உலகமடா — இது
ஏழைக்கே நரகமடா!
தன்னலப் பேய்களுக்கே — இது
தங்கச் சுரங்கமடா! (என்ன)

தில்லு முல்லுகள் செய்து
திருடும் குபேரனெல்லாம்
அல்லல் படும் ஏழையைக்
கள்ள னென்று ஏசுகிறார்! (என்ன)

கட்டத் துணியு மின்றிக்
கந்தல் பொறுக்கையிலே
மொட்டைக் கதவு ஜன்னல் எல்லாம்
பட்டாடை போர்த்துகின்றார்! (என்ன)

வீடு கட்டும் பாட்டாளி
வீதியிலே தூங்குகின்றான்
கூடியந்த மாடியிலே
கும்மாளம் போடுகின்றார். (என்ன)

பானையிலே கஞ்சி யின்றிப்
பட்டினியா வாடுகின்றார்;
வீணர்கள் தின்று மிஞ்சி
வீதியிலே போடுகின்றார். (என்ன)

ஏய்த்துப் பிழைப்பவர்க்கே — ஊரை
ஏய்த்துப் பிழைப்பவர்க்கே — காலம்! இது
எல்லோர்க்கும் இல்லையடா!

— *ஓர் இரவு*

## சொல்லம்பு பட்ட துன்பம் மாறாது!

### தொகையறா

''யாகாவா ராயினும் நாகாக்க காவாக்கால்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு''
சுகமிழப்பர் என்ற
வாகார்ந்த வள்ளுவன் வரம்பை யுணராது
சாகாமல் சாகாதீர்! தாரணியோரே!

### பாடல்

வில்லம்பு பட்டபுண் வேதனைதராது — என்றும்
சொல்லம்பு சுட்ட துன்பம் மாறாது!

தெள்ளுதமிழ் ஏட்டிலுள்ள பாட்டினிலே — அவ்வை
பாட்டினிலே — கண்டு நாம்
நல்லவராய் வாழவேணும் நாட்டினிலே (வில்லம்பு)

யோசனையில்லாமல் பேசாதே — முன்பின் (யோசனை)

உனைமறந்தே உலகை ஏசாதே!
ஆசையினால் சினம் அடையாதே! — பகுத்
தறிவையும் இழந்து உளறாதே! (வில்லம்பு)

— *மணமகள்*

## நீதியில்லா உலகம்!

பேதமற்ற காதலென்றும் பிரியமாகப் பேசுவார்
பெருமையாகப் பேசுவார்;
பெண்பிள்ளையைத் தவிக்க விட்டே ஓடுவார் சிலர் (பெ

நீதியில்லா உலகமிது நேர்மையற்ற உலகமிது
ஜாதிபேத சமயங்களாம் சஞ்சலங்கள் சூழ்ந்த இந்த (உலக

## இருகால் மிருகங்கள்!

நன்மையும் தீமையும் ரெண்டுங்கலந்தது
நானில வாழ்க்கையடா — இதில்
நல்லதெல்லாம் விட்டுத் தீமைக்குள் அகப்பட்டு
நாசமாகாதீங்கடா — அட
நாதாரிப் பசங்களா (நல்ல)

உண்மையாக யாமுணர்ந்தது சொல்கின்றோம்
உற்றதைக் கொள்ளுங்கடா — தேவை
யற்றதைத்தள்ளுங்கடா — எண்ணும்
எண்ணத்தில் மக்கள்தன்மையில்லாதவர்
இருகால் மிருகமடா — உடல்
உருவால் மனுசரடா — அட
ஊதாரி உளங்கெட்ட பசங்களா (நல்ல)

அருளென்றும் அன்பென்றும் ஆன்றோர் சொன்னது
ஆண்டவன் பேரென்று சொல்லவோ? — அந்த
ஆண்டவனைக் காணஅறிவு தேவை — கல்வி
அதற்குத் தேவையான தல்லவோ?

சிறுபோதிலே கற்றுத்தேர்ந்து கொள்ளவேணும்
வயது முதிர்ந்தாலும் நுழையாது — செடி
மரமானபின்னாலே கரணங்கள் போட்டாலும்
வாட்டசாட்டமாக வளையாது!
காலஞ் செய்கிறதைக் கடவுள் செய்யாதென்று
கவனத்தில் வையுங்கடா — நெல்லைக்
காற்று வந்தபோது தூற்றுவார்கள் போலே
கருமத்தைச் செய்யுங்கடா, அட
களிமண்ணுப் பசங்களா (நல்ல)

த்திவேர்வை சிந்த ரத்தப் பாடுபட்டு
நிலத்தைக் கிளறிவிட்டு உழைத்தார் — பெருஞ்

சொத்துச் சுகங்களை மக்கள் பெறத் தங்கள்
சுகத்தை எண்ணாமலே வளர்த்தார் — அந்த
பித்துமனத்தினர் பிள்ளைகள் வாழ்க்கையில்
பெருங்கீர்த்தி பெற நினைத்தார் — மனம்
பிரியாத செல்வத்தைக் கல்விக்காக விட்டுப்
பிரித்து வேறிடத்தில் விடுத்தார் — அவர்
பொருளை அள்ளி அள்ளி இறைச்சதும் — அதைப்
புகையாக நீங்களும் புகைச்சதும் — சில
வருடங்கள் தேர்வின்றிக் கழிச்சதும் — நல்ல
வரைகெட்டு நல்லாக் காலங் கழிச்சதும்

.......................... *(பாடல் நிறைவுறவில்லை)*

## குரங்கிலிருந்து பிறந்தவன் மனிதன்!

குரங்கிலிருந்து பிறந்தவன் மனிதன் — கொம்பேறித் தத்தும்
குரங்கிலிருந்து பிறந்தவன் மனிதன்!
உருண்டையான உலகின்மீது
உணர்ந்தோர் சொன்ன உண்மையிது.
உருவ அமைப்பைக் காணும்போது
ஓரறி வீரறி வுயிரென மாறி — வாலில்லாத (குரங்)

பிடித்தபிடி விடாமலே
சிலர் பேசும் பேச்சாலும் — தலையில
பேனும் ஈரும் தேடித் தேடிப்
பிடிப்பதனாலும் நடிப்பதனாலும்
உடுக்கும் உடைகள்
பளபளப்பினாலும் உள்ளபடி பேதமுண்டு,
உண்மையில் வித்தியாச மில்லை! (குரங்)

— *தூக்குத்தூக்கி*

## டேஞ்சரு! ஐயா! டேஞ்சரு!

டேஞ்சரு அய்யா டேஞ்சரு
வெரி வெரி டேஞ்சரு
வெரி வெரி டேஞ்சரு;

உலகினில் மனிதர்கள் நடைமுறை
தவறுதல் டேஞ்சரு,
ஓஞ்சுபோன காலத்திலே
உக்காந்து சாப்பிடவே
உழைப்பாலே தேடிய பணத்தை
ஊதாரிச் செலவுகள் செய்தால்
டேஞ்சரு;
பட்டம் பதவிக்கே ஆசைப்பட்டால்
துட்டுக்கே வரும் டேஞ்சரு;
பக்க மேளம் சரி யில்லாட்டி
பாடகனுக்கே டேஞ்சரு,
முட்டாப் பசங்களை யோசனை கேட்டா
மூளைக்கே ரொம்ப டேஞ்சரு;

டேஞ்சரு அய்யா டேஞ்சரு!
கண்ட பெண்களைத் தெருவில் பார்த்துக்
கண்ணடிப்பது டேஞ்சரு!
கரண்டுக் கம்பத்து மேலே ஏறிக்
கம்பியைத் தொடுவது டேஞ்சரு!

பெண்டு பிள்ளைகளை ஆசை கொண்டவன்
சண்டைக்குப் போவது டேஞ்சரு!
பெரியோர் சபையில் சிறியோர் சென்று
பேசப் போவது டேஞ்சரு!

டேஞ்சரு அய்யா டேஞ்சரு!

கல்லாதவர்கள் கலைஞ ரானால்
கலைக்கு ரொம்ப டேஞ்சரு!
காப்பி அடிக்கிற பசங்க கிட்ட

கதையைப் படிப்பது டேஞ்சரு!

இல்லாதவர் இருப்பவர் போல
நடிப்பது மெத்த டெஞ்சரு!
இருப்பவரும் இல்லாதவரை
அவமதிப்பது இனிமேல் டேஞ்சரு!

டேஞ்சரு அய்யா டேஞ்சரு!
காட்டையும் மேட்டையும் உழுகாமப் போனாக்
கஞ்சிக்கு வருமே டேஞ்சரு!
கட்டுப் பாட்டுக்குள் அடங்காதவர்கள்
கட்சியில் இருப்பது டேஞ்சரு!

ஓட்டுப் போடத் தெரியா விட்டால்
நாட்டுக் கதனால் டேஞ்சரு!
உலகம் போற்றும் உத்தமரானால்
உயிருக்கே ரொம்ப டேஞ்சரு!

டேஞ்சரு அய்யா டேஞ்சரு!

தன்னல மற்ற தியாகிகளுக்குச்
சர்க்கார் பதவி டேஞ்சரு!
சர்க்கார் பதவி கொண்டவனுக்கே
தாட்சண்யத்தாலே டேஞ்சரு!

அண்ணன் தம்பியைப் பகைத்தவனுக்கு
அடுத்தவராலே டேஞ்சரு!
அறிவில்லாதான் எவனோ அவனுக்கு
அவனே வெரி வெரி டேஞ்சரு!

டேஞ்சரு அய்யா டேஞ்சரு!
உலகினில் மனிதர்கள் நடைமுறைத்
தவறுகள் அவரவர்களுக்கே டேஞ்சரு!! (டேஞ்சரு)

*— மாதர் குல மாணிக்கம்*

## நாலுகால் குதிரைகளும் இரண்டு கால் குதிரைகளும்

டிக்கிடி டக்கிடி டக்கிடி டக்கிடி
சல் சலோ சலோ!
டக்கிடி டக்கிடி டக்கிடி டக்கிடி
சல் சலோ சலோ சலோ!
டக்கிடி டக்கிடி டக்கிடி டக்கிடி
சல் சலோ சலோ சலோ!

நாலுகால் குதிரை நல்லதொரு பாதையில்
நன்றாக நடக்குது — ஓடுது!
நாகரீக மடைந்து ரெண்டு கால் குதிரை
நல்ல வழியில் நடக்கத் திண்டாடுது! (சல்)

காலத் திராட்டு அசைவு துருசு
நாலுகால் குதிரை செல்லும் வேகம்!
காமக் குரோதக் குணங்களைக் கொண்டது
ரெண்டு கால் குதிரையின் அவிவேகம்!!

இது — சொல்லும் ஜாடை கண்டு கொள்ளும்,
அது — சொன்னாலும் கேக்காமெ துள்ளும்! — சிறு
பள்ளம் மேடுகளைப் பயமில்லாமலே
தாண்டிவரும் நாலுகால் குதிரை — காசு
பணத்துக்கிங் காசைப்பட்டுப் பல பல கட்சிகளில்
பாய்ந்து வரும் ரெண்டு கால் குதிரை! (சல்)

வித்யாச மில்லாமல் நாலு கால் குதிரை
மேலேற்றி வேகமாய்ச் செல்லும்! — எவரையும்
மேலேற்றி வேகமாய்ச் செல்லும்!

மேலென்றும் கீழென்றும் ரெண்டு கால் குதிரை
வித்யாசம் காட்டித் தள்ளும் — சாதி
வித்யாசம் காட்டித் தள்ளும்!

புத்தி யுள்ள நாலுகால் குதிரை யானாலும்
பத்து முழம் தள்ளி இருக்கணும்;
புத்தி கெட்ட ரெண்டு கால் குதிரையின்
கண்களுக்கு புலப்படாமல் இருக்கணும் (சல்)

— ஆசை

## சும்மா இருந்தாச் சோத்துக்கு நஷ்டம்!

சும்மா யிருந்தா சோத்துக்கு நஷ்டம்;
சோம்பல் வளர்ந்தா ஏற்படும் கஷ்டம்!

பல்லவி

உண்மையோடு உழைக்கோணும்
தானே தன்னன்னா! மச்சான்!
ஒன்று சேர்ந்து வாழோணும் தானே தன்னன்னா!

படிச்ச வேலைக்குப் பலபேர் நோட்டம்!
பாக்கி வேலைக்கு ஆள் திண்டாட்டம்!
கொடுத்த வேலையை முடிப்பது சிரேஷ்டம்!
குடிசைத் தொழிலில் வேணும் நாட்டம்!

உண்மையோடு உழைக்கோணும்!
தானே தன்னன்னா! — மச்சான்!
ஒன்று சேர்ந்து வாழோணும் தானே தன்னன்னா!

அப்பன் தொழிலை அவனது பிள்ளை,
சொப்பனத் திலுமே நினைப்பது மில்லை;
இப்படிச் செய்வத னாலே தொல்லை
ஏற்படும் என்றால் கேட்பது மில்லை! (உண்மையோடு)

தெரிஞ்ச தொழிலைச் செய்தாலே
தானே தன்னன்னா! — மச்சான்!
தாழ்வுமில்லை அதனாலே தானே தன்னன்னா!

வேலை வேலையென்று ஓல மிட்டழுதா
ஆளைத் தேடியது வீட்டுக்கு வருதா?
மூளையோடு நல்ல முயற்சியு மிருந்தா
வேலைக்கேது பஞ்சம்? விவரம் புரியுதா?

பாடுபட்டால் பலனுண்டு!
தானே தன்னன்னா! மச்சான்!
பஞ்சம் தீர்க்க வழியுண்டு தானே தன்னன்னா!

மலைதனில் சிறியதும் பெரியதும் உண்டு,
மனிதர்கள் அறிவிலும் அதுபோ லுண்டு;
உலகினில் அவரவர் திறமையும் கண்டு
தொழிலது புரிவது மிக மிக நன்று!

உண்மையோடு உழைக்கோணும்!
தானே தன்னன்னா! மச்சான்!
ஒன்று சேர்ந்து வாழோணும் தானே தன்னன்னா!

— *மதுரை வீரன்*

## தன்னைத்தானே நம்பாதது சந்தேகம்!

தன்னைத் தானே நம்பாதது சந்தேகம் — அதற்குச்
சந்தர்ப்பம் சூழ்நிலை தாய்தந்தையாகும் — தன்னைத் (தானே)

மானாபிமானந் தன்னை மறைவாக்கும் — நல்ல
மாண்புடைய மக்களை மடையராக்கும் — மேலும்
வீணான யோசனைக்கே தன்னை இடமாக்கும் — பல
விபரீதச்செயல்களை விளைவாக்கும் — தன்னைத் (தானே)

ஓரிடம் நிலையாக நில்லாத ரதம் போலே
உள்ளத்தை ஓட விடும் — பின்னும்
சேரும் இடம் வந்து சேராத ஓடமாய்த்
திசைமாறச் செய்து விடும் — காதல் தன்னைத் (தானே)

ஊரார் சொல் பொய்யதனைப் புகுத்திவிடும் — உண்மை
உரைப்பார் சொல் தப்பெனவே விலக்கிவிடும் — மனம்
மாறாத காதலர்க்குப் பகைமை மூட்டிவிடும்
உரைப்பார் சொல் தவறெனவே விலக்கிவிடும் — மனம்

ஞானோதயம் குறைந்தால் தொத்தும் ரோகம்
நம்பிக்கை யற்றவர்க்கே துன்பமாகும்.
ஆணோடு பெண்ணிடமும் வரும் போகும் — அதற்கு
ஔஷதம் ஒன்றேதான் நல்விவேகம் — தன்னைத் (த

— *தெய்வ*

## இன்னார் என்று கண்டுபிடி

### பல்லவி

கண்ணே கண்ணே உன்னைத்தொடும் ஆளை யிப்போது
இன்னாருன்னு கண்டு பிடிக்க வேணுந் தப்பாது!
கருத்து நிலை மாறாமே கட்ட அவிழ்த்துப் பாக்காமே
கண்ணே கண்ணே உன்னைத்தொடும் ஆளை யிப்போது
இன்னாருன்னு கண்டு பிடிக்க வேணுந் தப்பாது!!

### சரணங்கள்

மழையிருட்டில் கிளை தவறிப்
பாய்ந்திடாது மந்தி!
மனுஷனுக்குத் தேவை யந்த
நிதானந்தான் தம்பி!

விழியிருந்தும் குழி தனிலே
வீழ்வார் தம்மைப் போலே
வழி தவறிப் போகாமே
நடந்து செல்லு மேலே!

கருத்தின் நிலை மாறாமே
கட்டே அவிழ்த்துப் பாக்காமே
கருத்தின் நிலை மாறாமே
கட்டே அவிழ்த்துப் பாக்காமே (கண்ணே..)

முன்னால் வந்து தொட்டாக்
கிட்ட முடிக்கிப் புடிச்சுக்கோ
பின்னால் தட்டும் பேரைச்
சொல்லிக் கண்ணேத் திறந்துக்கோ! (முன்னால்)

கருத்தின் நிலை மாறாமே
கட்டே அவிழ்த்துப் பாக்காமே (கண்ணே)

ஆட்டத்திலே போட்டியிடு!
கூட்டுறவைத் தேடு!

அறிவறிந்து பழகியபின் அன்புரிமை நாடு!
கூட்டத்திலே சின்னச் சின்ன குறையிருந்தாலும்
குணத்தைக்கொண்டு நோகாமலே
குலவிடுவோம் நாளும்!

கருத்தின் நிலை மாறாமே
கட்டே அவிழ்த்துப் பாக்காமே (கண்ணே)

— *தூய உள்ளம்*

## மானம் அற்றது வாழ்வு அல்ல

மான மெல்லாம் போன பின்னே
வாழ்வது தானொரு வாழ்வா?
வணிகர் குல மரபினர்க் கோர்
வசைதர ஏன் பிறந்தேனோ?

குஞ்சர மீதும் பஞ்சணை மேலும்
குலவிய காலம் ஓர் காலம்,
நஞ்சனை யாளின் வஞ்சனை யாலே
நடைப்பிண மானதோர் காலம்!

கரை யடுத்த நீரிருக்க
கானலை நாடிடும் மானினம்போல்
கனி கொடுத்தாள் தனை விடுத்தே
கணிகையின் பால் அலைந்தேனே!

கற்பக மேவும் கனி யருந்தாமல்
காஞ்சிரங் காயை யுண்டேனே,
காமுகன் யான் கண்ணகியாள்
மாமுகம் காணவு மாமோ?
தப்பிதம் யாவும் நானே புரிந்தும்
தாசியை நோவதும் வீணே? (மானமெல்லாம்)

— ***கண்ணகி***

## வாழ்க்கையில் கால்கள்!

ஹை.... தத்தக்கா புத்தக்கா நாலு காலு
தானே நடக்கையிலே ரெண்டு காலு!

எட்டுக்கால் கீழாக இரண்டு கால் மேலாக
கொட்டு முழக்கோடு கும்பலுக்கு மத்தியிலே
சட்டையைக் கழட்டி விட்டெறிஞ்சாப்பிலே
மின்னாளே கண்ணாளே மண் மேலே (சட்டையை)

இஷ்டப்படி நாம் இன்ப சுகங்களை
அனுபவிக்கணும் போட்டுக்கோ தில்லாலே!
தில்லாலே... தில்லாலே... தில்லாலே!

ஹை... தத்தக்கா புத்தக்கா நாலு காலு
தானே நடக்கையிலே ரெண்டு காலு!

பேரின்பம் பெரிதென்று பெண்ணின்பம் சிறிதென்று
பேசுதே வேதாந்தம்! — பெருமை — பேசுதே வேதாந்தம்!

ரெண்டு பேரன்பிலொன்று சேரின்பம் மேலென்று
தேறுதல் சித்தாந்தம் — நாமே — தேறுதல் சித்தாந்தம்!

உன்னைப் பின்பற்றுவேன் நானே!
உம்மைப் பிரியாமல் இருப்பேனே!

ரெண்டு பேரன்பிலொன்று சேரின்பம் மேலென்று
தேறுதல் சித்தாந்தம் — நாமே — தேறுதல் சித்தாந்தம்!

கொடியும் கொம்பைச் சுத்தட்டுமா?
சுத்தட்டு மே!

குரலும் சுதியும் சேரட்டுமா?
சேரட்டுமே!

பெட்டையுஞ் சேவலும் கூடட்டுமா?
கூடட்டுமே!

பேச்சை நிறுத்திப் போடட்டுமா?
ஆகட்டும்.

தத்தக்கா புத்தக்கா நாலு காலு — ஹை
தானே நடக்கையிலே ரெண்டு காலு
உச்சி வெளுத்தா மூணு காலு
ஊருக்குப் போகையிலே பத்துக் காலு.

— *கற்புக்கரசி*

## மனிதன் மனிதனாக!

மனிதன் மனிதனாக இருக்கணும்
மனிதரை மனிதனாக மதிக்கணும் (மனிதன்)

புனிதமான வழியில் போற்றும்
புகழுக் குடையவன் பஞ்ச
பூதப் புணர்ச்சிப் படைப்பினிலே
பிறப்பி லுயர்ந்தவன்
வினையாலே அமையும் புதுமை
விருப்பங் கொண்டவன்
வேண்டுதல் வேண்டாமை என்ற
விவரந் தெரிபவன் (மனிதன்)

இனத்தைக் கண்டால் பகைத்துக் குலைக்கும்
எச்சிலை பொறுக்கும் நாய்கள்!
இயல் புடையான் குணத்திலல்ல
உருவத்தில் மனிதன்!
தனக் கமைந்த சுகத்தை மற்றோர்
தான் கொள்ளப் பார்த்து ரசித்து
சந்தோசப் படுபவனே தக்க மனிதன்! (மனிதன்)

எளியாரிடம் சினங்காட்டும்
புலியாய் விடக் கூடாது!
வலியாரிடம் பயத்தாலே
எலியாய் விடக் கூடாது!
தெளிவில்லாமல் ஊரு சுத்தும்
கழுதையாகக் கூடாது.
சேட்டையிலே வானரத்தைச்
சேர்ந்து விடக் கூடாது! (மனிதன்)

லஞ்சமதைக் குஞ்சரம் போல்நெஞ்சில்
வைக்கக் கூடாது!
வாய்மொழியில் குடிகெடுக்கும்
நஞ்சிருக்கக் கூடாது!
அஞ்சுகின்ற தீமைக் கெல்லாம்
அஞ்சாமை கூடாது!
அஞ்சாத நன்மைக் கெல்லாம்
அஞ்சுவதும் கூடாது. (மனிதன்)

## உண்டா இல்லையா?

உண்டென்பீரா? — இல்லே — பொய்யென் பீரா?
ஒப்புக் கொள்வீரா? — சொன்னாத் — தப்பென்பீரா? — இங்கே
உள்ளவங்க வேஷத்தாலே உயர்ந்தோர்கள்
உண்டென் கிறதை.... (உண்டென்பீரா?)

பெரியோர்கள் தேடிய பணத்தால்
திருவாளர் ஆனவர் பலபேர்

உறுதியாகிய உழைப்பா லிங்கே
ஊதியம் பெறுபவர் இல்லையென்பதை (உண்டென்)

மிகு... மிகு...
டம்ப மேன்மைகாட்டி... டீபார்ட்டி
தந்து காசை நீட்டி — பொய்ப்பங்கு
பத்திரங்கள் தீட்டி... சூழ்ச்சியாய்
பாங்கியிலே மாட்டி — பெரும் பணத்தை
ஈட்டிப் பொது ஜனத்தை வாட்டும் சில
கனவான்களும் இதில் கலந்திருப்பதை (உண்டென்)

ஏதேதோ ஆசையும் வச்சு
இருந்த ஆஸ்தி அடகும் வச்சு — ஏதோ
ஈன்றோர் தரும் பணத்தையும் வச்சு
இன்பமாக சிகரெட்டும் புடிச்சு
காப்பிக் கிளப்பில் கடனும் வச்சு
கல்விக்கும் பூஜ்யம் போட்ட மாணவர் (உண்டென்)

உரிமை யோட்டுச் சீட்டை — வாங்கவே
உதறுவார்கள் நோட்டை! — பின்னாலே
பெரிய பதவி வேட்டை — ஆடியே
பெறுவார் பண மூட்டை! — அந்த
மூட்டையோடு தினம் கூட்டுச் சேர்ந்து நம்ம
நாட்டைக் கெடுப்பவர் இங்கே இருப்பதை (உண்டென்)

தியாகத்தாலே வந்த சுதந்திரம்
தரணியில் நிலைபெற வேணுமென்றால்
சிநேகமாகவே மக்கள் எல்லாம்
போக பாக்கியம் பெற வேணுமென்றால்
ஜாதி பேதத்தைத் தட்டி எரிக்கணும்!
தன்னலங்களை வெட்டி முறிக்கணும்!
தீதில்லாமலே தேகம் உழைக்கணும்!!
தேச கௌரவம் நாளுமுயர்த்தணும்!!! (உண்டென்)

## துன்பம் வருகையில் நகை!

இடுக்கண் வருங்கால் நகுக — என வள்ளுவன்
எடுத்துரைத்த பொன்மொழியை எண்ணிப்பார் நெஞ்சே!

துன்பம் வரும்போது நகைத்திடுவாய் — கால்
தூசுக்கும் சமமாய் மதித்திடுவாய் — நீ (துன்ப)

நெஞ்சுரமும் துணிவும் நேர்மையும் இருந்தாலே
துன்பமே தோல்வியுறும் தன்னாலே
துயரே மகிழ்வின் தொடராம் அதனால் — நீ (துன்ப)

புயலுக்குப்பின் அமைதி வருவது போல்
இருளுக்குப் பின் பொழுது புலர்வது போல்
துயருக்குப் பின் சுகமே தொல்புவி மேலே
தொடர்ந்தே வருவது இயல்பாம் அதனால் — நீ (துன்ப)

## ஞானத் தங்கமே...!

ஒரு பத்து மாதம் உயிர் விந்து நாதம்
சொரூபத்தைக் கொண்டல்லவோ — ஞானத் தங்கமே
தூல மென்றாச் சுதடி!

தவத்துக்கு ஒருவரடி; தமிழுக்கு இருவரடி
சவத்துக்கு நால்வரடி! மணித் தங்கமே!
தரணி வழக்கமடி! ஞானத் தங்கமே! (தரணி)

வாதி புளுகன் வைத்தியன் மாந்திரீகன்
சோதிடன் என்பவனோ — ஞானத் தங்கமே
சுத்தப் புளுகனடி!

பூசாரி பொய்யன், புலவனும் பொய்யன்
ஆசாரி யென்பவனோ — ஞானத் தங்கமே
அடங்காத பொய்யனடி!

— *மாமியார் மெச்சிய மருமகள்*

## வீரவாளும் எழுது கோலும்

வாள் முனையில் கத்தியினால்
உலகை யாளுவோம்; — இதன்
வலிமையினால் பகையை வீழ்த்தி
வாகை சூடுவோம்! — வெற்றி
வாகை சூடுவோம்!

அரசாளும் சக்தியாவும் எங்கள் வீர வாளுக்கே! — இந்த
ஆண்மை யேது உலகினிலே எழுது கோலுக்கே — ஏழை
எழுதுகோலுக்கே!

அரை நொடியில் ஆண்டியையும் அரசனாக்குவோம்;
மக்கள் அடிமை வாழ்வைப் போக்கி நாட்டின்
விடுதலை காண்போம்!

(வாள்)

எழுது கோலின் சக்தியாலே
உலகை ஆண்டிடுவோம்; — என்றும்
அழிவில்லாத கலைகளினாலே
அறிவை வளர்த்திடுவோம்!
நாவசைத்தால் நாடகம்
கவிக் காவியம் பெருகும்; — உயர்
நாகரீகப் பண்பும் அன்பும்
நாட்டிலே பெருகும்!
நவலோகச் சொர்க்கபோகம்
யாவும் சேரும் வாழ்வினிலே!

கத்தியின் சக்தியை அறியாமல் தற்புகழ்ச்சி
பேசாதே போ! போ! போ!
சேரன் சோழன் பாண்டியன் வாழ்வு
சிறந்து ஓங்க ஜெயமளித்த கத்தி!

சென்ற கால நிகழ்ச்சியும்
மக்கள் வாழ்வின் மகிமையும்
பொன் எழுத்தால் பொறித்துக்
காட்டும் சக்தி!

இணையாகும் கண்கள் ஒன்றை ஒன்று எதிர்த்து
மோதலாகுமா? — இந்த

உலகில் எந்த சக்தியும்
தனித்து வாழ முடியுமா?

எந்நாளும் உங்கள் சேவையே!
இந்நாட்டின் முக்கிய தேவையே!
எழுது கோலும் வீரவாளும்
எந்தநாளும் உலகையாள
ஒன்று சேர்ந்து வாழ்க வாழ்கவே!

— *பெண்*

## அன்போடு ஓடிவாங்க!

கா.... கா... கா....

ஆகாரம் உண்ண, எல்லோரும் ஒன்றாக
அன்போடு ஓடிவாங்க! — என்ற
அனுபவப் பொருள் விளங்க — காக்கை
அண்ணாவே! நீங்கள் அழகான வாயால்
பண்ணாகப் பாடுறீங்க! — கா கா என
ஒண்ணாகக் கூடுறீங்க! — வாங்க (கா.. கா... கா)

சாப்பாடு இல்லாமத்தவிக்குதுங்க — ஜனம்
கூப்பாடு போட்டு மனம் குமுறுதுங்க — என்றால்
தாப்பாளைப் போடுறாங்க பாருங்க — அந்தச்
சண்டாளர் ஏங்கவே — தன்னலமும் நீங்கவே
தாரணி மீதிலே பாடுங்க ! ராகம் (பாடுங்க) (கா.. கா.. கா)

எச்சிலைதனிலே எறியும் சோத்துக்குப்
பிச்சைக்காரர் சண்டை ரோட்டிலே!
இளைத்தவன் வலுத்தவன் இனச்சண்டை பணச்சண்டை
எத்தனையோ இந்த நாட்டிலே!
பட்சி சாதி நீங்க! — எங்க பகுத்தறிவாளரைப் பார்க்காதிங்க!
பட்ச மாயிருங்க! — பகிர்ந்துண்டு வாழுங்க!
பழக்கத்தை மாத்தாதிங்க! — எங்கே பாடுங்க! (கா... கா.. கா.)

— *பராசக்தி*

